


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Saturday, 11th March 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

### STARRED QUESTIONS.

*Village maps*

* 741 *Q.*—SRI **S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சர்வே நம்பர், நிலங்களின் எல்லைகள், கிராமப் படங்கள் போன்றவைகளைச் சரியானபடி சர்வே செய்து வைத்துக் கொள்ள வேண்டுமென்று மத்திய சர்க்கார் மாநில சர்க்காருக்கு ஆலோசனை கூறியுள்ளார்களா ?

(இ) அப்படியாயின், சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI **S. M. ANNAMALAI :** ஸார், ரயத்துவாரி நிலங்கள் எப்போது சர்வே செய்யப்பட்டன ? அப்படி சர்வே செய்யப்பட்ட மொத்த நிலத்திற்கும் மேப் போடப்பட்டிருக்கிறதா ? அப்படி போடப்பட்ட மேப்புகள் அனைத்தும் வில்லேஜ் கர்ணங்களிடத்தில் இருக்கின்றன. ஆனால் அனைத்தும் சரிவரத் தெரியவில்லை. ஆகவே மறுபடியும் சர்வே செய்யக் கூடாதா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** கேள்வி, மத்திய அரசாங்கம் இந்த மாதிரி ஏதாவது சர்வே செய்ய ஆலோசனை சொல்லப்பட்டதா என்பது. அதற்கு இல்லை என்று சொன்னேன். மற்றபடி ஏதாவது சமாசாரம் வேண்டுமானால், வேறு தனிக் கேள்வி போடவேண்டும்.

*Panchayat Executive Officers*

* 742 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the scale of pay of the Panchayat Executive Officers in the Kanyakumari district and the scale of such officers in the other districts; and

(*b*) the reasons for the disparity in the scale of pay, if any?

[11th March 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The scales of pay of Panchayat Officers in the Kanyakumari District and Shencottah Taluk of Tirunelveli District are—

| | |
|---|---|
| I Grade ... ... ... ... ... | Rs. 45–5–75 |
| II Grade ... ... ... ... ... | Rs. 30–3–45 |

Prior to 1st October, 1960, the scales of pay of Executive Officers of Panchayats in this state were :—

| | | RS. |
|---|---|---|
| 1. | Selection Grade .. | 100—2½—120 |
| 2. | I Grade .. | 80—2½—100 |
| 3. | II Grade .. | 65—1½— 80 |
| 4. | III Grade .. | 50—1½— 65 |

It was recently decided to constitute a State Subordinate Service for Executive Officers and to have only two grades instead of four. Accordingly with effect from 1st October 1960, their scales of pay have been revised as follows :—

| | RS. |
|---|---|
| I Grade .. .. .. | 125—5—175 |
| II Grade .. .. .. | 90—4—110—3—140 |

(*b*) Panchayats in the Kanyakumari District and Shencottah taluk of Tirunelveli district are different in character from those in the other areas of the State. The question of remodelling the Panchayats in those areas on the lines of Panchayats in other areas and bringing them under the Madras Panchayats Act, 1958, is under consideration separately. In that connection, the question of integrating the services of the Panchayat Officers with the corresponding posts of Executive Officers in this State and also the revision of scale of pay of the Panchayat Officers will be taken up.

SRI T. T. DANIEL : Whereas the scales of pay of the Panchayat Executive Officers in Kanyakumari district is lower than their companions in the Madras State at present, is it not proper, just and equitable even before the extension of the Panchayat Act to that part, their scales of pay are brought to the level of the scales of pay of their comrades in this State?

THE HON. SRI C. SUBRAMANIAM : The administrative set up of Panchayat in Kanyakumari district is different from the administrative set up in the rest of the State. The matter has been taken up and an early decision will be taken up.

*Population and cultivated lands (North Arcot)*

* 743 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு ஜில்லாவில், ஒவ்வொரு தாலூகாவிலும் உள்ள சாகுபடி நிலம் எவ்வளவு? ஜனத்தொகை எவ்வளவு?

(இ) உணவு உற்பத்தி அளவு எவ்வளவு? என்ன, என்ன?

11th March 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) A paper * is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், விவசாயத்திற்கு லாயக்கான, விவசாயம் செய்யாமல் தரிசாக இருக்கக்கூடிய நிலங்கள் எவ்வளவு இருக்கிறது? அவைகளை விவசாயம் செய்வதற்கு உடனடியாக முயற்சி செய்யப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்குத் தனியாக கேள்வி போட்டால் விவரங்கள் எல்லாம் சொல்ல முடியும்.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்தக் கேள்விக்கு மேஜை மேல் வைத்திருக்கக்கூடிய அறிக்கையில், "டர்ம்ஸ் ஆப் பிரைஸ்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதில் தாலுகாவாரியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அது ரூபாயா அல்லது தானியத்தை டன்னைகப் போட்டிருக்கிறார்களா, என்னவென்று எனக்குத் தெரியவில்லை. ரூபாயாக இருந்தால், 3,17,793 ரூபாய்க்கான நெல் தானியங்கள் தானா அந்த மாவட்டத்தில் இந்தப் பசலியில் விளைந்தது என்பதைக் கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்படி "டெர்ம்ஸ் ஆப் பிரைஸ்" என்று இருந்ததை நான்கூட நேற்றிரவு கவனித்தேன். அது "டெர்ம்ஸ் ஆப் பிரைஸ்" ஆக இருக்க முடியாது. "டெர்ம்ஸ் ஆப் ரைஸ்" ஆகத்தான் இருக்க வேண்டும். கனம் அங்கத்தினர் இவ்வளவுதூரம் கவனித்து வந்து, இதைக் குறிப்பிட்டதற்காக நான் அவரைப் பாராட்டுகிறேன். இது ரைஸ் தான், டன் அல்ல.

*Lower Bhavani irrigation area*

* 744 Q.—SRI K. R. NALLASIVAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கீழ் பவானி பாசனப்பகுதியில் உடனடியாக தண்ணீர் பாய்ச்ச 'டைம்ஷீட்' கொடுக்க கோரி சர்க்காருக்கு கோரிக்கைகள் வந்தனவா?

(இ) அப்படியானால், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes Sir. A representation was received from the Member.

(b) The Collectors of Coimbatore has issued necessary instructions to his subordinates to regulate internal distribution of water equitably under each channel wherever necessary in consultation with the ryots.

SRI K. R. NALLASIVAM : இந்த "டைம்ஷீட்" பல வருஷங்களாக இருக்கிறதே தவிர, எல்லா கிராமங்களிலும் எல்லாப் பகுதிகளுக்கும் இந்த "டைம்ஷீட்" கொடுக்கப்படுவது கிடையாது.

---

* Printed as Appendix I on page 214-215 infra.

Chairman of the Board and the Director of Public Instruction also an ex-officio member) and three non-officials. The present three non-official members are—

Sri M. Varadarajan,
Sri V. S. Thyagaraja Mudaliar, and
Srimathi Ahalya Santhanam.

(*b*) The Board has been constituted for the purpose of advising the Government in the matter of approval of films under section 6 of the Madras Cinemas (Regulation) Act, 1955;

(*c*) The Board is an advisory body. It has no power to order deletions from film or to take any steps for improving the quality of the films.

SRI A. VEDARATHNAM : இந்த பிலிம் அட்வைசரி போர்டு, வருகிற படங்களைப்பற்றி குறைகூற வேண்டுமென்பதற்காக மாத்திரம் இருக்கிற காரணத்தால் எவ்வளவோ நல்ல படமாக இருந்தபோதிலும் அதில் சில காட்சிகளை ஆபாசமாகச் சேர்க்கிறார்கள் . பணம் வசூல் ஆகும் என்பதற்காக அப்படி சேர்க்கிறார்கள். அப்படி பட முதலாளிகளால் ஆபாசமான பகுதிகள் புகுத்தப்படுகின்றன. அதனால் செல்வாக்கு உள்ளவர்களை அந்த போர்டில் நியமித்தால் அவர்கள் நல்ல படங்களை உற்பத்தி செய்வதற்கு தூண்டுவார்கள். அவர்களுடைய செல்வாக்கை உபயோகப்படுத்தி நல்ல படங்களை தயாரிக்க சொல்லுவார்கள். ஆகவே அப்படி நல்ல படங்களை மட்டும் தயாரிக்கக்கூடிய அளவில் செல்வாக்கு படைத்தவர்களை மட்டும் அந்த போர்டில் நியமிக்க அரசாங்கம் முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது சென்னை அரசாங்கத்தாரால் அமைக்கப்பட்டிருக்கிற போர்டு ஆலோசனை கொடுக்கக்கூடிய போர்டுதான். முடிவு செய்ய முடியாது. ஆலோசனை அளிப்பதில் கூட குறிப்பிட்ட லட்சியத்தை, அதாவது விஞ்ஞானங்களைப்பற்றிய படங்கள் அல்லது கல்வி சம்பந்தமான படங்கள் தயாரிக்கப்பட்டிருந்தால் அதைத்தான் அங்கீகாரம் செய்யும், அதை சினிமாக்களில் காட்டுவதற்கு. இந்த ராஜ்யத்திலுள்ள தியேட்டர்களில் காட்டுவதற்கு ஆலோசனை கொடுக்கக் கூடிய கமிட்டியாக இது இருக்கிறது. ஆகையால் கனம் அங்கத்தினர் சொல்வதையெல்லாம் இந்த கமிட்டி கவனிப்பதற்கு இல்லை.

SRI N. R. THIAGARAJAN : சார், அண்ணன் தங்கையை அழைத்துப் போய் அயலானிடத்தில் விடுவது, தவறிய மகளுக்கு தாய் தாலி கட்டுவது என்று இப்படியாக வருகிற படங்களைத் தடை செய்ய என்ன நடவடிக்கை எடுக்கப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த அட்வைசரி கமிட்டியினுடைய வேலை எந்த எந்த படங்களை கட்டாயமாக (Films having scientific and educative value) அறிவுத்துறைக்காக காட்டுவதற்கு சிபார்சு செய்யவேண்டும் என்பதைப்பற்றியது தான்.

10th March 1961]

SRI S. LAZAR: May I know whether this Board had any occasion to tender any advice to the film producers and whether that advice was accepted by the producers?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: Again, I may tell the hon. Member that the object of this Board is to consider films having scientific and educative value. They will approve a film or will not approve it. But, once they approve a film, it will mean that that film will have to be compulsorily exhibited in the cinema theatres in the State.

SRI N. K. PALANISAMI: May I know whether the advice of the Board is binding on the producers? If not, what is the use of having this Board?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I may again tell the hon. Member that this Board does not advise the producers to produce particular films. Certain films are available and this Board looks into those films and if they are acceptable, they approved them. When they are approved, it means that those films will have to be compulsorily exhibited in the cinema theatres in the State.

*Medical Colleges*

* 721 Q.—SRI T. T. DANIEL: Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the total number of seats available in all the Medical Colleges at present;

(b) how many seats have been reserved for Backward Communities and Harijans;

(c) whether there is any concession regarding age-limit for Backward Classes and Harijans;

(d) whether there is any concession regarding the marks for the Backward Classes and Harijans for admission into the Medical Colleges;

(e) whether there is any rule at present which permits the students who failed in one subject in the pre-professional course in April 1959 to sit for the examination in September 1960; and

(f) whether such rule, if any, will be affected by a recent decision of the All-India Medical Council to the contrary?

THE HON. SRI M. A. MANICKAVELU: (a) Five hundred and fifty, including 12 seats reserved for candidates from outside the State.

(b) Excluding the seats reserved for candidates from outside the State, 16 per cent (that is, 86 seats) are reserved for Harijan candidates, and 25 per cent (that is, 135 seats) are reserved for candidates from Backward Classes.

(c) No.

(*d*) No concession is granted for Backward Classes. But for Harijan candidates, a *mere* pass in the Pre-Universty Examination is enough.

(*e*) The University Regulation previously was that if the failed student passed one subject in September 1959, he could sit for the 1st M.B.B.S. Examination in December 1960.

(*f*) With reference to the recent decision of the All-India Medical Council, the actual period of medical studies of the failed student has to be counted from the date on which he passed the Pre-Medical Examination in full before he can be admitted to the 1st M.B.B.S. The University has decided that a candidate, who has passed the Pre-Professional Examination in September 1959, can appear for the 1st M.B.B.S. (or the 2nd year Integrated M.B.B.S. Examination under the revised regulations) only in March 1961.

SRI T. T. DANIEL : May I know whether there were enough number of applicants from the Harijan community to fill the seats reserved for them? In case, there were not enough number of applicants from that community, what basis did the Government adopt to distribute such of those seats which were not filled up by them? Were those seats distributed on a district-war basis? May I know the principle followed by the Government in regard to this matter?

THE HON. SRI M. A. MANICKAVELU : 'Enough number of candidates not coming forward from the Scheduled Castes' is an old story. Now, quite a number of them are coming forward to join the medical and other colleges. As a matter of fact, all the seats reserved for them have been filled up by the applicants coming from the Harijan community itself.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : May I know from the Hon. Minister whether the Madras Government are allotting any seats to students coming from our neighbouring States or any other State in India? If so, may I know how many seats are allotted like this and for how many more years we have to be allotting these seats to them?

THE HON. SRI M. A. MANICKAVELU : I said that 12 seats are reserved for candidates coming from outside the State.

SRI J. MATHA GOWDER : மருத்துவக் கல்லூரிகளிலே பின்தங்கிய வகுப்பு மாணவர்களுக்காக மிகக் குறைவான சதவிகித 'சீட்டு'தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா? தெரிந்தால் அதைத் தயவுசெய்து அதிகப்படுத்த நடவடிக்கை எடுக்கப்படுமா?

THE HON. SRI M. A. MANICKAVELU : 25% என்று சொன்னேன். இதை இன்னும் அதிகமாக்கினால் பொதுவாக இருக்கிறவர்களுக்கு அதிகமாக பாதகம் ஏற்படும். ஆகவே இப்போது இருப்பதே தேவலை என்று நினைக்கிறேன்.

10th March 1961]

SRI T. T. DANIEL : May I know whether there is any proposal to give some concession to the Harijan internees working in the Madras Medical Hospital also?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I think that these special concessions should not be carried too far. Of course, we may give some helping hand to the Backward communities to come up to the level of others. But, we cannot go on extending the concessions in each and every category.

SRI V. K. KOTHANDARAMAN : சாதி, மத, இன பாகுபாடற்ற சர்க்கார் என்று சொல்லக்கூடிய நேரத்திலே, அதிலும் 11-வது வகுப்பு வரையில் சாதி, மத வகுப்பு அடிப்படையில் இல்லாமல் எல்லா ஏழை மாணவர்களுக்கும் இலவசக் கல்வி அளிப்பது என்று . . . .

MR. SPEAKER : மூலக் கேள்வி மெடிகல் காலேஜைப் பற்றியது. அதற்குச் சம்பந்தம் இல்லாத விஷயத்தைக் கேட்டால் கட்டாயம் அனுமதிக்கப்போவதில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : ப்ரியாம்பிள் இல்லாமல் அவர்தான் பேசமாட்டாரே.

SRI V. K. KOTHANDARAMAN : தனியார் நடத்தக்கூடிய மெடிகல் கல்லூரிகளில் அவர்கள் என்ன சாதியோ அந்தச் சாதி அடிப்படையில் மாணவர்களைச் சேர்த்துக்கொள்வது சர்க்காருக்கு தெரியுமா? அதைப்போக்க மற்ற கல்லூரியில் இருப்பதுபோல இங்கும் செய்ய முன் வருவார்களா?

MR. SPEAKER : மறுபடியும், வெறும் கல்லூரி எங்கே வருகிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU : கனம் அங்கத்தினர் இவ்வளவு நேரம் பேசினாலும் எனக்கு அவர் என்ன கேட்கிறார் என்பது புரியவில்லை.

SRI V. K. KOTHANDARAMAN : சர்க்கார் மெடிகல் கல்லூரிகளில் மாணவர்களைச் சேர்த்துக்கொள்ள என்ன என்ன விதிகள் இருக்கின்றனவோ அவைகள் தனியார் நடத்துகிற மெடிகல் கல்லூரிகளுக்கும் பொருந்தும்படியாக ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU : தனியார் காலேஜ்களை நிர்ப்பந்தம் செய்ய முடியாது. அவர்களுக்கு ஒன்றும் நாம் கிராண்டு கொடுக்கவில்லை. கொடுப்பதாய் இருந்தால் நிர்ப்பந்தம் செய்யலாம்.

SRI K. VINAYAKAM : Just as we are allotting some seats for the students coming from the neighbouring States, is there any reciprocal arrangement with those States for our students living in those States for admission into their Colleges?

THE HON. SRI M. A. MANICKAVELU : Now, there is no reservation for the neighbouring States, and it is at present in respect of issue officers who are domiciled in Delhi or some other place in India or some other foreign country outside India.

SRI J. MATHA GOWDER : இந்த மாநிலத்திலே இருக்கக்கூடிய மொத்த ஜனத்தொகையில் 50%-க்கு மேல் பிற்பட்ட சமூகத்தார் இருக்கும்போது 25% மட்டும் சீட்டு ஒதுக்குவது நியாயமா என்பதை மறுபரிசிலனை செய்து இன்னும் அதிகப்படியான சீட்டுகள் ஒதுக்கவும் சர்க்கார் முன் வருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: 50% இல்லை. 60, 70 இருக்கும். இப்போது ஏதோ ஓரளவுக்கு கைதூக்கிவிடுவதற்காக இப்படி ஒதுக்கப்பட்டிருக்கிறதே தவிர அரித்மெடிகல் ப்ரபோர்ஷன் செய்யப்போவது உசிதம் இல்லை.

SRI A. A. RASHEED : May I know whether there is any truth in the statement that the standard of medical education has gone down because of the admission of students with low marks into the Medical Colleges?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir. I cannot accept that proposition. Probably, students may not be able to express themselves in good English as in the old days. I think otherwise, the standard is all right.

*Medical concessions*

* 722 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் ரெவின்யூ அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) சர்க்கார் ஆஸ்பத்திரிகளில் மாதம் 100 ரூபாய் வருமானத்திற்கு மேல் உள்ளவர்களுக்கு சார்ஜ் செய்யப்படும் என்கிற சட்டம் போட்டு எத்தனை வருடமாகிறது ?

(இ) இப்போது 100 ரூபாய்க்கு மேல் என்று இருப்பதை 300 ரூபாய்க்கு மேல் வருமானமுடையவர்களுக்கு என்று மாற்ற சர்க்காருக்கு உத்தேசமுண்டா ?

(உ) விவரம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) About 10½ years.

(*b*) No, Sir.

(*c*) Does not arise.

9 a.m.

SRI V. K. KOTHANDARAMAN: எத்தனை வருஷங்களுக்கு முன்னலிருந்து இவ்வளவு பெரிய மாறுதல் ஏற்பட்டது என்பதை கனம் அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா ? என்.ஜி.ஓ.-க்களுக்கும், மாதம் 300 ரூபாய்க்கு மேற்கொண்டு சம்பளம் வாங்கு

10th March 1961]

பவர்களுக்கும் இலவசமாக மருத்துவ சலுகை அளிப்பதுபோல் 100 என்று இருப்பதை 300-ஆக மாற்றுவதற்கு அரசாங்கம் முயற்சி யெடுக்குமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: இதே மாதிரி சூழ்நிலை நெடுநாளாக இருந்து வருகிறது.

SRI J. MATHA GOWDER: இப்பொழுது திருத்தி அமைக்கப் பட்ட சம்பளத்திலே ஹவுஸ் ரென்ட் அலவன்ஸும் சேர்ந்து மாதம் 100 ரூபாய் சம்பளம் வாங்கும் ஆசிரியர்களுக்கு கஷ்டமாக இருக் காதா ? இப்பொழுது 100 ரூபாய் என்றிருப்பதை 200 ரூபாயாக மாற்றுவதற்கு மறுபரிசீலனை செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: சம்பளத்தில் பேசிக் சம்பளத்தைத்தான் எடுத்துக்கொள்கிறோம்.

SRI S. M. ANNAMALAI : பிரைமரி ஹெல்த் சென்டரிலே கூடட் பணம் வசூலிக்க அரசாங்கம் உத்திரவு போட்டிருக்கிறார்களா ? பிரைமரி ஹெல்த் சென்டரில் இருப்பவர்கள் வாரத்திற்கு 5 நாட்கள் டூர் செய்ய வேண்டுமென்றிருக்கிறது. ஆகவே சர்க்கார் அந்த பிரைமரி ஹெல்த் சென்டருக்கு விதிவிலக்கு அளிக்க உத்திரவு போடுவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: பிரைமெரி ஹெல்த் சென்டரில் 6 எமர்ஜன்சி 'பெட்டு'கள் இருக்கின்றன. இது மக்க ளுக்கு 'பிரவென்டிவ் இன்ஸ்டிடுஷனை' இருக்கிறது அதாவது நோய் வராமல் தடுப்பதற்கு பிரயத்தினம் எடுத்துக்கொள்வதற்கு இருக்கிறது. அப்படி நோய் வந்தால் அதற்கு அங்கே எமர்ஜன்சி பெட்டுகள் இருக்கின்றன. முக்கியமாக நோய் வராமல் தடுப்ப தற்கு தயார் செய்துக்கொள்ளப்படுகிறது.

*Nagercoil-Tirunelveli Bus Transport*

* 723 *Q.*—SRI T. S. RAMASWAMI: Will the Hon. the Minister for Industries be pleased to state the present stage of the proposal to nationalise the Nagercoil-Tirunelveli Bus Transport?

THE HON. SRI R. VENKATARAMAN : The Government have as a policy decided to operate long distance routes, and hence it is not proposed to nationalise short routes like Nagercoil to Tirunelveli.

SRI N. K. PALANISAMI : May I know whether the State Bus Transport Department has applied for permit for this route during 1958 and in spite of that, even after a lapse of two years, the permit is not available. So, will the Government make suitable modifications in the rules relating to the issue of licence so that the first preference should be given to the State Transport Department?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, the Governmennt decided in 1957 to take over the Kanyakumari-Nagercoil route. Then according to the decision of the Cabinet, three years' notice was given but meanwhile we have introduced long distance routes—Madras to Bangalore and Madras to Tiruchirappalli, etc. We find that long distance routes are more profitable and more popular and there is greater demand from people to go in for these long-distance routes. Therefore, the Government have decided to go in for long-distance routes and not take up small routes.

SRI M. KALYANASUNDARAM : எற்கெனவே சர்க்கார் பஸ் போக்குவரத்து நடந்துக்கொண்டிருக்கிற அந்தப் பகுதியில், பல மார்க்கங்களில் போய்க்கொண்டிருக்கிற காரணத்தினால், இந்த ஒரு மார்க்கத்தில் மாத்திரம் தனியார் ஒருவருக்கு 'மானோபலி'- யாக விடுவது ஆபத்தல்லவா? அந்த அளவிற்கு சர்க்கார் போக்கு வரத்து அந்தப் பகுதியில் தடைப்பட்டுவிடாதா?

THE HON. SRI R. VENKATARAMAN : கன்னியாகுமரி பகுதியிலும் நெடும்தூர பஸ்களை தேசிய மயமாக்குவதற்கு பரிசிலனை செய்தோம். இரண்டையும் ஒரே சமயத்தில் எடுத்துக் கொள்வதற்கு போதிய நிதியும், வசதியும் இல்லை.

SRI K. PERIANNAN : கனம் தலைவர் அவர்களே, இந்த சர்க்காரால் நடத்தப்படுகிற நீண்டதூர பஸ்லே பிரயாணம் செய்கிறவர்களுக்கு வசதி குறைவாக இருக்கிறதென்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் இன்னும் சர்க்கார் நெடும்தூர பஸ்லே பிரயாணம் செய்யவில்லை போலும். அதில் பிரயாணம் செய்துவிட்டு என்னிடம் வந்து சொல்லும்படியாகக் கேட்டுக் கொள்ளுகிறேன். பல சட்ட சபை அங்கத்தினர்களே இதில் பிரயாணம் செய்துவிட்டு இவைகள் நன்றாக இருக்கின்றன வசதியாக இருக்கின்றன, பல இடங்களில் விஸ்தரிக்கவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள்.

*Bigamy*

* 724 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state the number of Government servants who were dismissed from service for bigamy in 1958–59 and 1959–60?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Public interest served by answering the question would not be commensurate with the time and labour involved in collecting the particulars for the answer.

SRI A. A. RASHEED : May I know the number of Government servants who obtained permission from the Government for taking second wife?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I do not have information about it.

[10th March 1961]

SRI J. MATHA GOWDER: சட்டசபை உறுப்பினர்களிலே இருதார மணம் செய்துகொண்டவர்கள் யாராவது இருகிறார்களா? அப்படி இருந்தால் அவர்களை சட்டசபை உறுப்பினர் பதவியிலிருந்து நீக்குவதற்கு அரசாங்கம் முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதைப்பற்றி என்னிடத்தில் தகவல் இல்லை.

*Medical Education*

*725 Q.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Revenue be pleased to place on the Table of the House the recommendations of the Committees which were appointed to advise the Government on the patterns of schemes for medical education and training, and for the re-organization of the Public Health Laboratories and the King Institute, Guindy?

THE HON. SRI M. A. MANICKAVELU: The report of the Expert Committee on Medical Education and Training Programmes is under consideration of the Government. The report of the Expert Committee on the re-organisation of the Public Health Laboratories and the King Institute, Guindy, is awaited.

*Artificial rain*

*726 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்திலுள்ள பெருவாரியான வரண்ட பிரதேசங்களில் ஒலி அலைகளைக்கொண்டு செயற்கை மழை உற்பத்தி செய்ய உத்தேசமுண்டா?

(இ) அதிக மழை பெய்வதை செயற்கை முறை மூலம் கட்டுப்படுத்த மார்க்கம் உண்டா? அதன் விவரம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) No, Sir. Only seeding the clouds for producing artificial rain-making is being experimented. This too is under initial stages of trial.

(b) Not known. Nobody seems to have taken up any study in the matter.

SRI A. VEDARATHNAM: இந்த செயற்கை மழை விஷயத்தில் மற்றவர்கள் ஆராய்ச்சி செய்து பரீட்சை செய்து பார்ப்பதைவிட நாமே சொந்தமாக ஆராய்ச்சியில் ஈடுபட்டு, நம்முடைய திறமையை வெளிப்படுத்துவதற்கும், பொருள் அதிகமாக வீணுகாமல் இருப்பதற்கும் வழியாக இருக்குமே. ஆகவே அரசாங்கம் இந்தத் துறையிலே முயற்சி செய்வதற்கு முன்வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: நாமே பரிசீலனை செய்து வந்திருக்கிறோம். குறைந்த செலவில்தான் இந்த பரீட்சையை நடத்தி வருகிறோம். அதோடு அன்னிய நாடுகளில் நடத்தப்படும் பரீட்சையை எடுத்துக்கொண்டால் எனக்குத் தெரிந்தவரை அங்கேயும் முடிவு பெற்றதாகத் தெரியவில்லை.

SRI P. G. MANICKAM : செயற்கை மழை ஆராய்ச்சி எந்தெந்த இடங்களில் நடைபெருகின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முன்பு இந்த மன்றத்தில் ஒரு பேப்பரை சமர்ப்பித்திருக்கிறேன். அதில் எல்லா விவரங்களும் இருக்கின்றன.

SRI A. VEDARATHNAM: பரிசீலிக்கப்பட்டிருக்கிற இடங்களில் பலன் ஏற்பட்டிருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பேபரிலே குறிப்பிடப்பட்டிருக்கிறது. முடிவான விளைவு ஒன்றும் தெரியவில்லை.

SRI N. R. THIAGARAJAN: மதுரை ஜில்லாவில் பெரியார் பகுதியிலும், நீலகிரி ஜில்லாவில் குந்தா பகுதியிலும் 6 மாதத்திற்கு மேல் 100 இஞ்சு மழை பெய்வதால், அங்கே மேகம் மூடிக்கொண்டிருப்பதால் அந்தப் பகுதிகளில் பரீட்சை செய்ய அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத்தினர் அவர்கள் சொன்ன சில இடங்களைத்தவிர வேறு பல இடங்களிலும் அந்தப் பரீட்சைகள் நடைபெற்றுவருகின்றன.

*Single-teacher schools*

* 727 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state the average hours of instruction the pupils get in the single-teacher schools?

THE HON. SRI C. SUBRAMANIAM : Five hours per day exclusive of the recess, if any, in the middle of any meeting and of the mid-day interval of not less than one hour.

*Objectionable advertisements*

* 728 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether Drugs and Magic Remedies (Objectionable Advertisements) Act is administered by the State Government also;

(*b*) if so, the number of advertisements against which action was taken; and

(*c*) the number of concerns having their establishments in the Madras State and those outside the Madras State?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) About 400. The parties concerned were warned not to contravene in future the provisions of the Act.

(*c*) About sixty manufacturers and 25 publishers are in this State and five manufacturers are outside the State.

10th March 1961]

SRI K. SATTANATHA KARAYALAR: உடல் நோய், மற்ற மனநோய் சம்பந்தமாகவும் பகுத்தறிவிற்கு ஒவ்வாத பல விளம் பரங்கள் வந்துக்கொண்டிருக்கின்றவே, அவைகளை அவ்வப்போது பரிசீலனை செய்ய தகுந்த நடவடிக்கை எடுப்பார்களா? அப்படி பரிசீலனை செய்து அரசாங்க உத்தரவு பெற்ற பிறகு விளம்பரங்களை பிரசுரிப்பார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: இந்தமாதிரி விளம் பரங்களைத் தடுப்பதற்கு மத்திய அரசாங்கம் சட்டத்தை ஏற்படுத் தியது. அந்த சட்டத்தை நம் மாகாணத்திலே அமுலுக்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இதைத் தவிர இன்னும் 'சர்வ ரோக நிவாரணி இரண்டு நிமிஷத்தில் தீர்ந்துவிடும்' '70 வயது கிழவன் 18 வயது வாலிபனுக மாறுவான்' என்றெல்லாம் விளம் பரங்கள் வருகின்றன.

SRI A. A. RASHEED: Sir, is the Hon. the Minister aware that an advertisement promising 'success in love' is also published?

MR. SPEAKER: This is not a medicine.

THE HON. SRI M. A. MANICKAVELU: அங்கத்தினர் அவர் களுக்கு அதுபற்றி கஷ்டமாகயிருந்தால் நாங்கள் என்ன செய்வது?

* 729 Q.—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Revenue be pleased to state the number and nature of advertisements for which previous sanction was accorded by this Government under the Drugs and Magic Remedies (Objectionable Advertisements) Act?

THE HON. SRI M. A. MANICKAVELU: Government sanction was accorded to three manufacturers to advertise the following products :—

(1) Speck tablets.

(2) Devi pills.

(3) Nanthithoppu Manikatti Swamigal Sarvaroga Sanjeevi Thailam and Amrita Rasam.

(4) Apple Tonic.

(5) Pitha Sanjeevi Pills.

SRI K. VINAYAKAM: Sir, has the Government subjected to test a drug known as 'Chittukurivi Lehiem' and found out its efficacy for improving the vitality of senile people?

MR. SPEAKER: How is the question relevant? The question is out of order.

[10th March 1961

*Rural University*

*730 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள் துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மத்திய பிரதேசத்தில் ருத்ராபூரில் உள்ளது போன்ற விவசாயக் கல்வியை முக்கியமாகக் கொண்ட கிராமாந்திரப் பல் கலைக் கழகம் ஒன்று இம் மாநிலத்தில் அமைக்கப்படுமா?

(இ) அப்படியானால், எப்போது, எங்கே, என்ன செலவில்?

(உ) இதற்கு மாநில, மத்திய சர்க்கார்களின் பொறுப்பு என்ன? வெளிநாட்டு உதவி உண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) to (c) The matter is under examination.

SRI A. VEDARATHNAM: மத்தியப் பிரதேசத்திலுள்ள ருத்ராபூரில் உள்ள ரூரல் யூனிவர்ஸிட்டி எந்த முறையில் நடைபெறுகிறது என்பதுபற்றி அரசாங்கம் ஏதாவது அறிவிக்க முடியுமா? அதுபற்றி தகவல்கள் கேட்டு அறிந்திருக்கிறார்களா? அல்லது நமது அதிகாரிகளைக் கொண்டு அதைப் பார்த்து இந்தத் திட்டத்தை மேற்கொள்ள யோசித்திருக்கிறார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ருத்ராபூர் யூனிவர்ஸிட்டி மத்தியபிரதேசத்தில் அல்ல, உத்தர பிரதேசத்தில் இருக்கிறது. அது நடைபெறுகிறதுபற்றிய தகவல், மற்ற தகவல் எல்லாவற்றையும் வைத்துக் கொண்டுதான் நமது ராஜ்யத்தில் ரூரல் யூனிவர்ஸிட்டியை எவ்வாறு அமைப்பது என்பது இப்பொழுது பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

*Juveniles*

*731 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்திலுள்ள இளம் குற்றவாளிகளுக்கான ரெசப்சன் ஹோம்களுக்கு கொண்டுவரப்படும் மைனர்களுக்கு உணவு கொடுப்பதில்லை என்பது சர்க்காருக்குத் தெரியுமா?

(இ) இது விஷயமாக ரெசப்ஷன் ஹோம்களில் விசாரணை நடந்ததா?

(உ) இது போல் மீண்டும் ஏற்படாமல் இருக்க என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) No complaint has so far been received about the non-supply of food to the inmates of any of the Government or private Reception Homes in this State.

(b) & (c) Do not arise.

10th March 1961]

SRI V. K. KOTHANDARAMAN : இந்த ரிஸிப்ஷன் ஹோமுக்கு போலீஸார் சிறு பிள்ளைகளைக் கொண்டுவரும்போது உணவு கொடுக்காமல் பட்டினி போட்டுக்கொண்டு வருகிறார்கள் என்பது பற்றித்தான் வேலூர் ரிசப்ஷன் ஹோமில் புகார் செய்யப்பட்டிருக்கிறது. அதுபோன்று இன்னும் பலயிடங்களிலும் இருக்குமென்று சொல்லப்படுகிறது. ஆகவே, இதுகுறித்து பரிசீலனை செய்யப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அங்கத்தினர் அவர்கள் கேட்கும் உப-கேள்வி முதலில் கேட்ட கேள்விதான். அது பற்றி நன்கு விசாரித்து அவ்வாறு உணவு கொடுக்காமல் இருப்பது இல்லை என்பது பற்றி தகவல் தெரிந்து விடையளித்தேன். அதற்கு மேல் விவரங்கள் என்னிடம் இல்லை.

* 732 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

இளம் குற்றவாளிகள் அல்ல என்று கோர்ட்டில் நிரூபிக்கப்பட்ட பிறகு அவர்கள் தங்கள் ஊருக்கு திரும்பிப் போவதற்கு பணம் கொடுத்தோ அல்லது போலீஸ் துணை கொடுத்தோ அனுப்ப ஏற்பாடு செய்ய உத்தேசமுண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : According to the existing practice juveniles against whom no offences have been proved before the Courts are sent to their respective homes at Government cost with Police escort.

SRI V. K. KOTHANDARAMAN : தவறு செய்கிறார்களோ இல்லையோ, அவர்கள் பேரில் குற்றஞ்சாட்டி வழக்கு தொடர்ந்த பிறகு கோர்ட்டுக்கு கொண்டு வந்து அவர்கள் குற்றவாளிகள் அல்ல என்று சொன்ன பிறகு நடுவீதியில் விட்டுவிடுகிறார்கள். அவர்களை போலீஸ் மீண்டும் வீடுகளில் கொண்டு போய் விடும் நிலையில்லை. ஆகவே, மைனர் குழந்தைகள் மீண்டும் தவறு செய்யாமலிருக்க போலீஸார் மீண்டும் அவர்களை வீடுகளில் கொண்டு போய் விடுவதற்கு ஏற்பாடுகள் செய்யப்படுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அங்கத்தினர் அவர்கள் ஆங்கிலத்தில் சொல்வதை புரிந்து கொள்வார்கள் என்று நினைக்கிறேன். ஆங்கிலத்தில் சொன்னதை இப்பொழுது தமிழில் சொல்கிறேன். இப்பொழுது நடைபெறுகிற நடைமுறை, சிறுவர்களை கோர்ட்டுக்கு கொண்டு வருகிறபோது அவர்கள் பேரில் குற்றம் ஒன்றுமில்லையென்று ஏற்பட்டால் அவரவர்கள் வீடுகளுக்கு அரசாங்கச் செலவில் போலீஸ் காவலோடு அவர்கள் அனுப்பப்படுகிறார்கள்.

[10th March 1961

*Salt tax*

* 733 Q.—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether the Government have received any communication from the Central Government asking for views on the reimposition of salt tax; and

(b) if so, the details thereof?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) No, Sir.

(b) Does not arise.

*Temples*

* 734 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள் துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தென் இந்தியாவில் உள்ள புகழ் பெற்ற கோவில்கள் சிலவற்றின் பராமரிப்பை மத்திய அரசாங்கமே ஏற்கும்படி முயற்சிக்கப்படுகிறதா ?

(இ) அப்படியாயின், விவரமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) So far as the Madras State is concerned, there is no such proposal.

(இ) Does not arise.

*Supreme Court (Circuit Session)*

* 735 Q.—SRI V. K. KOTHANDARAMAN: கனம் உள் துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தென்னிந்தியாவிலுள்ள கேஸ்களை பரிசீலனை செய்ய, சென்னையில் சுப்ரீம் கோர்ட்டை வைத்து நடத்தும்படி மத்திய சர்க்காரை நமது சர்க்கார் கேட்டது உண்மையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No. Sir.

*Pump irrigation*

* 736 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள் துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா, திருத்துறைப்பூண்டி தாலூகாவிலுள்ள தானிக்கோட்டகம் கிராமத்தில் கூட்டுறவு முறையில் பம்ப் இர்ரிகேஷன் ஏற்படுத்தும் உத்தேசம் உண்டா ?

(இ) அதன் விவரமென்ன ?

(உ) எப்போது துவங்கி, எத்தனை ஏக்கருக்குப் பாசன வசதியளிக்கும் ?

—

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No, Sir.

(b) & (c) Do not arise.

10th March 1961]

*737 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள் துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தஞ்சை ஜில்லா, திருத்துறைப்பூண்டி தாலுகா ஓடியம்பவம் கிராமத்தில் விவசாய இலாகா மூலம் ஏற்படுத்தும் பம்ப் இர்ரிகேஷன் திட்டம் எந்த நிலையிலிருக்கிறது ?

(இ) எப்போது துவங்கி, எத்தனை ஏக்கர்களுக்குப் பாசன வசதியளிக்கும் ?

(உ) விவசாய இலாகா மூலம் ஏற்படுத்த இருக்கும் மற்ற பம்ப் இர்ரிகேஷன் திட்டங்கள் என்னென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) The scheme is functioning from 23rd December 1960. Hundred acres are likely to be benefited by the scheme.

(c) There are no other river pumping schemes that are proposed to be implemented in the district at present.

SRI A. VEDARATHNAM: இப்பொழுது ஏற்றுக்கொண்டிருக்கிற பம்பிங் ஸ்கீமில் உள்ள பம்ப் போதவில்லை என்றும் இன்னும் ஒரு அடிஷனல் பம்ப் வேண்டுமென்று அந்தக் கிராமத்தார் கோரியிருக்கிறார்களா ? அதுபற்றி அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: டிஸம்பர் 23-லிருந்து நிறைவேற்றப்பட்டு வருகிறதென்று சொன்னேன். அப்பொழுது தண்ணீர் அவசியமாக வேண்டியிருந்தது. தண்ணீர் கொடுக்கப் பட்டிருக்கிறது. இப்பொழுது அது போதவில்லையென்ற தகவல் என்னிடம் இல்லை. இது நடைபெறும்போது ஏற்பட்ட அனுபவங்களைக் கொண்டு வேறு என்ன விஸ்தரிப்பு செய்யவேண்டுமோ அவை கவனிக்கப்படும்.

SRI A. VEDARATHNAM: இந்த காவேரி தண்ணீர் கடைமடையில்தான் வீணாகப்போவது அதிகமாகயிருக்கிறது. இதை மராமத்து இலாகா எடுத்துக் கொண்டிருக்கிறது. பம்பிங் ஸ்கீமினால் மட்டும் போதிய அளவில் அதை பூர்த்தி செய்யமுடியவில்லை. எனவே விவசாய இலாகாவும் சில இடங்களை எடுத்துக் கொண்டு அதன் மூலம் வீணாகும் தண்ணீரை விவசாயத்திற்குப் பயன்படுத்த விவசாய இலாகா முன்வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: சில திட்டங்களை இதுவரை விவசாய இலாகா எடுத்துக் கொண்டு நிறைவேற்றிக் கொண்டு வருகிறது. மற்றவையெல்லாம் மராமத்து இலாகா மேற்பார்வையில் இருக்கிறது. அவர்கள் கவனம் செலுத்துகிறார்கள். ஆகவே இதற்கு மேலும் புதிய திட்டங்களை விவசாய இலாகா எடுத்துக்கொள்வதற்கு இப்பொழுது உத்தேசமில்லை.

[10th March 1961

SRI K. R. NALLASIVAM: காவேரி கடைக்கோடியில் தண்ணீர் வீணுகப் போவதாக கனம் அங்கத்தினர் குறிப்பிட்டார். காவேரிக்கு மேல் பகுதிகள், சேலம் ஜில்லா போன்ற பகுதிகளில் உள்ள விவசாயிகள் பம்ப்செட்கள் மூலம் அதிகப்படி தண்ணீரை எடுத்துக் கொள்வதற்கு வேண்டிய வசதி செய்து கொடுப்பது பற்றி சர்க்கார் யோசனை செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அதுபற்றி என்னிடம் தகவல் இல்லை.

SRI V. SUBBIAH: ரிவர் பம்பிங் ஸிஸ்டம் எந்தெந்த ஜில்லாக்களில் எவ்வளவு பம்ப்கள் இப்பொழுது ஓடிக்கொண்டிருக்கிறது? எந்தளவு அவை வெற்றிகரமான முறையில் நடந்து கொண்டிருக்கின்றன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: ராமநாதபுரம் ஜில்லாவில் இளையான்குடி, பெட்டுச்செட்டிப்பட்டி, சொர்ணம் பட்டி கோவிந்தநல்லூர், கிராமங்களில் இப்பொழுது எடுத்துக் கொள்வதாக உத்தேசம். திருநெல்வேலி ஜில்லாவில், மேல் ஆத்தூர், கல்லிக்குளம் இவைகளில் எடுத்துக் கொள்வதாக உத்தேசம். இவை விவசாய இலாகாவால் நிறைவேற்றப்படும்.

MR. SPEAKER : அடுத்த இரண்டு கேள்விகளையும் ஒன்ருக எடுத்துக்கொள்ளலாம்.

*Beedi Factories Act*

* 738 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

பீடித் தொழிற்சாலை சட்டத்தின் 2 (g) [i] பிரிவு செல்லத்தக்கதல்ல என்று சென்னை ஐகோர்ட்டு தீர்ப்பளித்துள்ளதால் பீடித் தொழிலின் ட்ரேட் மார்க் முதலாளிகள் சட்டத்திலிருந்து தப்பிக்க வழி ஏற்பட்டுள்ளதால் அச்சட்டத்தின் 2 (g) பிரிவுக்கு திருத்தம் கொண்டுவர உத்தேசமுண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : The matter is under consideration.

* 739 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடஆற்காடு ஜில்லா பீடித் தொழிலாளர் சங்கத்திலிருந்து மாதிரி திருத்தங்களைப் பற்றி 1960-ம் ஆண்டு ஜனவரி மாதம் 30-ம் தேதி, 1960-ம் ஆண்டு பிப்ரவரி மாதம் 7-ம் தேதிகளில் சர்க்காருக்கு விண்ணப்பங்கள் ஏதேனும் வந்துள்ளனவா ?

(இ) அவைகளின் பேரில் எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

10th March 1961]

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

(b) The matter is under consideration.

**SRI V. K. KOTHANDARAMAN:** *1944-ம் ஆண்டு மத்திய சர்க்கார் எக்ஸைஸ் சட்ட விதிப்படி புகையிலைக்கு கொடுக்கக் கூடிய எல் 2, எல் 5, லைசென்ஸ் வாங்கி ட்ரேட்மார்க் முதலாளிகள் நம் சர்க்கார் பீடித்தொழிலாளர்களுக்காக வேண்டி வகுத்திருக்கக் கூடிய சட்டத்தை தகர்த்தெறியக்கூடிய நிலைமையிருக்கிறபடியால், நம் சர்க்காரை அனுசரியாமல் புகையிலை லைசென்ஸ் கொடுக்கக் கூடாது என்று மத்திய சர்க்காரை வற்புறுத்தியிருக்கிறார்களா? அதற்கு என்ன பதில் வந்துள்ளது?*

THE HON. SRI R. VENKATARAMAN: *இதுப்பற்றி மத்திய சர்க்காருக்கு எழுதியதில் அவர்கள் ஒத்துக் கொள்ளவில்லை. எல் 2 லைசென்ஸ் கொடுப்பது வேறு, லேபர் சட்டங்களை நிறைவேற்றுவது வேறு என்று சொல்லி விட்டார்கள்.*

SRI V. K. KOTHANDARAMAN: *குறைந்தபட்ச கூலி 1-11 அணு, 1-12 அணு என்று அமுலில் இருந்துங்கூட இன்று 1-6, 1-8-க்கு மேலே பலயிடங்களில் கொடுக்காத ஒரு நிலை இருப்பதாக அமைச்சர் அவர்களிடம் புகார் செய்யப்பட்டிருக்கிறதா? அது விஷயமாக என்ன நடவடிக்கைகள் எடுக்கப்பட்டது?*

THE HON. SRI R. VENKATARAMAN: *லேபர் கமிஷனர் இருக்கிறார்கள், லேபர் ஆபீஸர்கள் இருக்கிறார்கள். ஆகவே இதை சட்டசபையில் வந்து சொல்லவேண்டிய அவசியமேயில்லை.*

*Polytechnic (Guindy)*

* 740 Q.—SRI A. VEDARATHNAM: *கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—*

*(அ) கிண்டியில் உள்ள பாலிடெக்னிக்கிற்கு புதுக்கட்டிடம் அமைக்கத் திட்டமுண்டா?*

*(இ) அப்படியானால், அதன் விவரமென்ன?*

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) Yes Sir.

(b) As there is no scope for putting up additional buildings to provide for workshops, laboratories, hostels, main instructional buildings, playgrounds, etc., at Guindy, it has been decided to hand over the existing building to the Industries Department and to acquire about 100 acres of land in Kalikundram and Pallipattu villages, adjacent to the Indian Institute of Technology, Guindy and to construct buildings in the newly acquired site for the Polytechnic, hostels etc.

SRI A. VEDARATHNAM: *இப்பொழுது இந்த பாலிடெக்னிக்கில் எவ்வளவு மாணவர்கள் படிக்கிறார்கள். அந்த மாணவர்களுக்கு இடம் பற்றுக்குறை இருக்கிறதா? அல்லது புதிய தொழில் துறை போதனை முறையை ஆரம்பித்திருக்கிறார்களா?*

[10th March 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : எத்தனை மாணவர்கள் இருக்கிறார்கள் என்ற புள்ளிவிவரம் என்னிடம் இப்பொழுது இல்லை. இங்கே ஆரம்பித்தபோது நிறைய இடம் இருந்தது என்று ஆரம்பித்தோம். இப்போது இன்டஸ்ட்ரியல் எஸ்டேட் வந்த காரணத்தினால் இடம் மிகவும் குறைவாகயிருக்கிறது. ஆகையால் இன்டஸ்ட்ரீஸ் டிப்பார்ட்மென்ட்டுக்கு இந்தக் கட்டிடத்தை கொடுத்து விட்டு விசாலமாக வேறு இடத்தில் கட்டுவதாக தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—PRESENTATION OF THE REPORT OF THE COMMITTEE OF PRIVILEGES

SRI S. LAZAR : Mr. Speaker, I beg to present to this House the Report of the Committee of Privileges on the "Madras Corporation Case".

Sir, the Committee was of the view that the Resolution of the Madras Corporation and the speeches of two of its Members amounted to breach of privilege. But, in view of the fact that the original resolution was rescinded by a subsequent resolution and also in view of the fact that those two Members were present at the subsequent meeting and participated in the actual passing of this subsequent resolution, the Committee has recommended that no further action need be taken. I commend its decision of the Committee for the kind acceptance of this House.

SRI M. KALYANASUNDARAM : Mr. Speaker, Sir.

MR. SPEAKER : I would like to know on what subject the hon. Member is going to speak.

SRI M. KALYANASUNDARAM : The Report of the Committee has been presented, and I want to speak on it.

MR. SPEAKER : I am sorry. We are now concerned with only the presentation of the Report. If the hon. Member wants to speak on the Report, he can do so only on a separate Motion relating to the same.

## III.—ANNOUNCEMENTS.

### (1) THE INDIAN STAMP (MADRAS AMENDMENT) BILL, 1961.

MR. SPEAKER : I have to announce that the Governor has given his recommendation for the introduction in the Legislative Assembly of the Indian Stamp (Madras Amendment) Bill, 1961

### (2) BILLS PASSED BY THE COUNCIL.

MR. SPEAKER : I have also to announce to the House that the following Bills have been passed by the Legislative Council without any amendments :—

(1) The Madras Estates Land (Reduction of Rent) Amendment Bill, 1961.

10th March 1961] [Mr. Speaker]

(2) The Travancore-Cochin Agricultural Income Tax (Madras Amendment) Bill, 1961.

(3) The Madras Inams (Assessment) Amendment Bill, 1961.

(4) The Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amendment Bill, 1961.

(3) NOMINATION OF MEMBERS TO THE COMMITTEE ON GOVERNMENT ASSURANCES.

MR. SPEAKER : I have to announce to the House that under Rule 214 (1) of the Madrs Legislative Assembly Rules, I have nominated the following Members to serve on the Committee on Government Assurances :—

(1) Sri S. M. Annamalai.

(2) Sri A. Vedarathnam.

(3) Sri K. Sattanatha Karayalar.

(4) Sri A. A. Rasheed.

(5) Sri S. Nagaraja Monigar.

(6) Sri C. Muthiah.

(7) Sri M. Jagannathan.

Under Rule 215 (1) of the Madras Legislative Assembly Rules, I nominate Sri S. M. Annamalai to be the Chairman of the Committee.

## IV.—GOVERNMENT BILL.

### THE INDIAN STAMP (MADRAS AMENDMENT) BILL, 1961.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

" That leave be granted for the introduction of the Indian Stamp (Madras Amendment) Bill, 1961."

MR. SPEAKER : The question is—

" That leave be granted for the introduction of the Indian Stamp (Madras Amendment) Bill, 1961."

The motion was put and carried.

THE HON. SRI M. A. MANICKAVELU : I introduce the Bill, Sir.

MR. SPEAKER : The Bill is introduced.

V.—VOTING ON DEMANDS FOR GRANTS FOR THE YEAR 1961–62—*cont.*

DEMAND XXII—INDUSTRIES AND CINCHONA.
DEMAND XLI—CAPITAL OUTLAY ON INDUSTRIAL DEVELOPMENT.

* THE HON. SRI R. VENKATARAMAN : Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,97,45,400 under Demand XXII—Industries and Cinchona."

Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 5,59,44,800 under Demand XLI—Capital Outlay on Industrial Development."

கனம் சபாநாயகர் அவர்களே, இந்த தொழில்துறை சம்பந்தமாக என்ன செய்யப்பட்டிருக்கிறது என்பதை இரண்டு புத்தகங்கள் போட்டு அங்கத்தினர்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளன. அதில் ஒன்றில் "பாலிஸி" சம்பந்தமான விஷயங்கள் கூறப்பட்டிருக்கின்றன. இன்னொன்றில் ஜில்லாவாரியாக என்னென்ன வேலைகள் செய்யப்பட்டிருக்கின்றன என்று கூறப்பட்டிருக்கிறது. நான் பொதுவாக இந்த விவாதத்திற்கு கடைசியிலே பதில் சொல்லலாம் என்று நினைக்கிறேன். சட்டத்திலே ஒன்று சொல்வார்கள். resuc Ipso Loquitor என்று. அதாவது விளக்கமாக இருப்பதை விளக்கத் தேவையில்லை என்று சொல்வார்கள். ஆக, அச்சிட்ட புத்தகங்கள் கொடுத்திருக்கிற காரணத்தினால் முன்னுரையாக ஒன்றும் சொல்லாமல், பதில் சொல்லும் முறையில் எனது காலத்தை வைத்துக் கொள்கிறேன் என்று கூறிக்கொள்கிறேன்.

MR. SPEAKER : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,97,45,400 under Demand XXII—Industries and Cinchona."

"That the Government be granted a sum not exceeding Rs. 5,59,44,800 under Demand XLI—Capital Outlay on Industrial Development."

எதிர்க்கட்சிகளின் சார்பில் 22-வது மான்யக் கோரிக்கைக்கு திரு. பி. எஸ். சின்னதுரை அவர்கள் தன்னுடைய 36-வது வெட்டுப் பிரேரணையைப் பிரேரேபிக்கப்போவதாக அறிகிறேன். அவர் அதை இப்போது பிரேரேபிக்கலாம். 41-வது மான்யக் கோரிக்கைக்கு திரு. எஸ். எம். அண்ணாமலை அவர்கள் தன்னுடைய 62-வது வெட்டுப் பிரேரணையைப் பிரேரேபிக்கப் போவதாக அறிகின்றேன். அவர் அதைப் பிரேரேபிக்கலாம்.

SRI P. S. CHINNADURAI : Sir, I move—

"That the allotment of Rs. 2,97,45,400 under Demand XXII—Industries and Cinchona be reduced by Rs. 100."

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

"That the allotment of Rs. 5,59,44,800 under Demand XLI—Capital Outlay on Industrial Development be reduced by Rs. 100."

10th March 1961]

MR. SPEAKER : Cut Motions moved—

" That the allotment of Rs. 2,97,45,400 under Demand XXII —Industries and Cinchona be reduced by Rs. 100."

" That the allotment of Rs. 5,59,44,800 under Demand XLI —Capital Outlay on Industrial Development be reduced by Rs. 100."

The movers of the cut motions may speak for fifteen minutes each. How long will the Hon. Minister take to reply?

THE HON. SRI R. VENKATARAMAN : Thirty minutes, Sir.

MR. SPEAKER : All right. Hon. Member Sri Chinnadurai may now speak.

SRI P. S. CHINNADURAI : மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, நம்முடைய ராஜ்யத்தின் தொழில்துறை வளர்ச்சியைக் குறித்த அறிக்கையை சர்க்கார் இரண்டு பகுதிகளாகப் பிரித்து புத்தக ரூபத்திலே கொடுத்திருக்கிறார்கள். ஒன்று சிறிய தொழில்களைப் பற்றியது. மற்றொன்று தொழில் சம்பந்தமான கொள்கையைக் குறித்தும், பெரிய தொழில்கள் சம்பந்தமான விவரங்கள் அடங்கியதும் ஆன புத்தகம். இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிவடைந்து விட்டன. இரண்டு ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே நாம் அடைந்திருக்கின்ற தொழில் வளர்ச்சியைக் குறித்து இந்தப் புத்தகங்களிலிருந்து ஓரளவுக்குத் தெரிந்து கொள்ள முடிகிறது. நம்முடைய ராஜ்ய அரசாங்கத்தின் தொழில் கொள்கையைக் குறித்து பன்முறை இந்த மன்றத்திலே என்னுடைய கருத்துக்களை விளக்கிக் கூறியிருக்கிறேன். ராஜ்ய அரசாங்கம் அனுசரித்துக் கொண்டிருக்கிற கொள்கை ஒரு சோஷலிஸ அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்கிற தொழில் கொள்கையாக இல்லை. முதலாளித்துவ சக்திகளுக்கு ஆக்கம் அளிக்கும் கொள்கையாகத்தான் ராஜ்ய சர்க்காரின் தொழில் கொள்கை இருந்து வந்திருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்திலும் இருக்கப் போகிறது என்பதைத்தான் நாம் காண முடிகிறது. கடந்த 10 ஆண்டுகளில் இரண்டு திட்டங்களை நிறைவேற்றிய பிற்பாடும் கூட நம் ராஜ்யத்திலே பல வகையான தொழில்கள் தோன்றி வளம் பெறுவதற்குரிய ஆதார பூர்வமான தொழில்கள் போதிய அளவில் வளர்ச்சி அடையவில்லை என்பதைத் தான் நாம் காண்கிறோம். குறிப்பாக பல்வேறு தொழில்களும் பரவுவதற்கு ஆதாரமாக விளங்குவது இரும்பு, நிலக்கரி, மின்சாரம். இந்த மூன்று வகையான ஆதார சக்திகளை நாம் எந்த அளவில் நம் ராஜ்யத்தில் நிறைவேற்றி வைத்திருக்கிறோம் என்பதைத்தான் முதன்முதலாக எடுத்து ஆராய வேண்டும். மின்சாரம் சம்பந்தப்பட்ட வரையில் நாம் வெகுவாக முன்னேறி இருக்கிறோம் என்று நம்மிடத்திலே எடுத்துக் கூறப்படுகிறது. உண்மையிலேயே 10 ஆண்டுகளுக்கு முன்னால் இருந்த நமக்கும், இன்று இருக்கிற நமக்கும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது மின்சார உற்பத்தியானது கணிசமாக அபிவிருத்தி அடைந்திருக்கிறது

என்பதில் சந்தேகமில்லை. ஆனால் நம் ராஜ்யத்தில் எந்த அளவுக்கு தேவை இருக்கிறதோ, இன்றைய தேவையை எடுத்துக்கொண்டாலும்கூட, அந்தத் தேவையை பூர்த்தி செய்யக்கூடிய அளவாவது மின்சார சக்தியைப் பெற்றிருக்கிறோமா என்று பார்த்தால் இல்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியிலே கூட மின்சார சக்தியானது தொழில்களின் தேவைக்குப் போதுமானதாக இருக்காது என்று தான் நினைக்கிறோம்.

9.30 a.m.

நான் நினைக்கிறேன், தொழில் துறையிலே நாம் முன்னேற்றம் அடையாமல் இருப்பதற்குக் காரணம், தொழில் துறையிலே இன்னும் அதிகமான விஸ்தரிப்புக்கு நம்முடைய கருத்தை நாம் செலுத்தாமல் இருப்பதற்குக் காரணம், போதுமான மின்சாரச் சக்தியை நாம் பெறமாட்டோம் என்ற பயமோ என்னவோ என்று நான் கருதுகிறேன். எந்த அளவுக்கு மின்சாரம் கிடைக்கிறதோ, அதனை அனுசரித்தே தொழில் கொள்கையையும், தொழில் விஸ்தரிப்பையும், அமுல் நடத்தக் கூடியவர்களாக இருக்கிறார்கள் என்ற அளவிலேதான் நாம் சிந்தித்துப் பார்க்க வேண்டியிருக்கிறது.

மின்சார உற்பத்தியிலே நாம் அடைந்திருக்கிற முன்னேற்றம் பஞ்சாப் ராஜ்யத்திலே ஓரிரண்டு ஆண்டுகளுக்குள் அடைந்திருக்கக்கூடிய முன்னேற்றத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால், கடந்த 10 ஆண்டுகளிலே நம்முடைய ராஜ்யத்திலே அடைந்திருக்கக்கூடிய முன்னேற்றத்தோடு ஒப்பிட்டுப் பார்த்தால் குறைவாகத்தான் இருக்குமென்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். பக்ரா நங்கல் பகுதியிலே அவர்கள் உற்பத்திச் செய்கின்ற மின்சாரத்தில், அங்கு ஓரிரண்டு ஆண்டுகளில் உற்பத்திச் செய்யக்கூடிய மின்சாரத்தை நம்முடைய மாகாணத்தில் 25 அல்லது 30 ஆண்டுகள் பாடுபட்டால் கூட உற்பத்தி செய்ய முடியுமா என்ற பயம் ஏற்படுகிறது.

THE HON. SRI V. RAMAIAH: பக்ரா நங்கல் இங்கே இல்லை.

SRI P. S. CHINNADURAI: வேறு வகையிலே மின்சாரத்தை உற்பத்தி செய்வதற்கான மார்க்கம் இருக்கிறது.

THE HON. SRI V. RAMAIAH: என்ன மார்க்கம் இருக்கிறது என்பதைச் சொல்லுங்கள். அதை இப்போதே இங்கு குறிப்பிட வேண்டும்.

SRI P. S. CHINNADURAI: என்ன மார்க்கம் என்பது எனக்குத் தெரியும். நான் பேசும்போது தயவுசெய்து குறுக்கிட வேண்டாம். நிபுணர்களைக் கேட்டால் தெரிந்துகொள்ளலாம். மின்சாரத்தை உற்பத்தி செய்யக்கூடிய மார்க்கங்கள் பல இருக்கின்றன. நாம் சரிவர முயற்சி எடுத்துக் கொள்ளவில்லை என்பதைத்தான் இங்கே குறிப்பிட விரும்புகிறேன். இன்னும் அதிகமான அளவிலே மின்சாரத்தை உற்பத்தி செய்து, நல்ல நல்ல தொழில் திட்டங்களையெல்லாம் நாம் எப்படி வெற்றிகரமாக முடிக்க முடியும் என்பதற்கான முயற்சிகள் எடுக்கவில்லை என்பதைத்தான் இங்கு குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகிறேன்.

10th March 1961] [Sri P. S. Chinnadurai]

அடுத்தபடியாக, இரும்பு உற்பத்தியிலே கடந்த 10 ஆண்டு காலத்திலே நாம் எத்தகைய ஆராய்ச்சியும் சரிவர எடுத்து நிறைவேற்றி வைக்கவில்லை. நம்முடைய இரும்பு உற்பத்தி பற்றிய ஆராய்ச்சி இன்னும் அதன் முதல் கட்டத்திலேயே இருந்து கொண்டிருக்கிறது என்பதையும் நாம் பார்க்கின்றோம். முடிவு கட்டத்தை இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதி காலத்திற்குள்ளாவது அடைந்துவிடுவோம் என்பதைக் குறித்து இந்தப் புத்தகத்திலே நாம் எதையும் உறுதியாக கான முடியவில்லை. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதிக்குள்ளே நம்முடைய மாகாணத்திலே இரும்பு உருக்குத் தொழிற்சாலை நிறுவப்படும் என்பதற்கு உத்திரவாதம் இங்கே நம்முடைய அரசாங்கத்தினால் தரப்படவில்லை என்பதையும் நாம் பார்க்கிறோம்.

தேனிரும்பு ஆலை ஆரம்பிப்பதற்காக, 2, 3 தனிப்பட்ட சம்பெனிகளுக்கு அனுமதி அளிக்கப்பட்டிருக்கிறது. அவை எந்த நிலைமையிலே இருந்து வருகின்றன என்பதைக் குறித்தும் இந்தப் புத்தகத்திலே விவரமாகக் குறிப்பிடப்படவில்லை. ஒரு கம்பெனி மட்டும் தேனிரும்பு உற்பத்தி செய்தது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதுவும் வெற்றிகரமாக செய்து முடித்தது என்று குறிப்பிடப்படவில்லை. ஏனைய இரண்டு கம்பெனிகள் எந்த அளவுக்கு இத் திட்டத்தை நடத்தியது, எப்படி நிறைவேற்ற இருக்கிறது என்பதைக் குறித்தும் இந்தப் புத்தகத்திலே தெளிவுரை எதுவும் குறிப்பிடவில்லை. இவைகளை ஏன் தனிப்பட்ட கம்பெனிகளுக்கு கொடுக்கவேண்டும், ஏன் அரசாங்கம் எடுத்துக்கொள்ளக்கூடாது என்பதற்கும் காரணம் தெரியவில்லை. இப்படிப்பட்ட மிக முக்கியமான தொழிற்சாலைகளையெல்லாம் அரசாங்கமே நேரடியாக எடுத்துக் கொள்வதன் மூலமாகத்தான் நாம் நல்ல முன்னேற்றம் காண்பதற்கு முடியும். இருந்தபோதிலும், அதிலே சுய நம்பிக்கை இல்லாமல் வேறு தனிபட்ட கம்பெனிகளுக்கு அதை விட்டிருப்பது போதுமான முன்னேற்றம் ஆகிவிடுமா என்று சிந்திக்கவேண்டிய நிலைமையில்தான் இந்தத் திட்டத்தை நாம் வைத்திருக்கிறோம். இது மிகவும் ஆபத்தானது என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இரும்புத் தொழில், தேனிரும்புத் தொழிற்சாலை போன்ற தொழில்களை பெரிய அளவில் செய்தால்தான் முடியுமென்று நம்முடைய ராஜ்ய சர்க்கார் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இது ஏன் என்று தெரியவில்லை. ஜப்பான், ஜெர்மனி போன்ற நாடுகளில் எப்படி இந்த இரும்பு உருக்குத் தொழிற்சாலைகள் சிறிய அளவிலேகூட நிலைநாட்டப்பட்டிருக்கின்றன என்பதைக் குறித்து நம்முடைய ராஜ்ய சர்க்கார் ஆராய்ந்தறிந்து கொள்வது அவசியமென்று கருதுகிறேன். இந்த நாடுகளினுடைய இரும்பு உருக்குத் தொழிற்சாலைகளைப் பொறுத்தவரையிலும், அவர்கள் சிறிய அளவிலே ஆரம்பித்து நல்ல முன்னேற்றம் கண்டிருக்கும்போது, நம் ராஜ்யத்திலே மட்டும் ஏன் அதைப்போன்று ஆரம்பிக்காமல் இன்னும் யோசித்துக் கொண்டிருக்க வேண்டும். ஜப்பான்

[Sri P. S. Chinnadurai] [10th March 1961

நாட்டிலே இரும்புத் தாதுக்களே இல்லை. அவர்கள் தங்களுக்கு வேண்டிய தாதுக்களை வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து கொள்கிறார்கள். அதுவும் இந்தியா நாட்டிலே இருந்துதான் இரும்பு தாதுக்கள் இறக்குமதி செய்யப்படுகிறது. நம்முடைய ராஜ்யத்திலிருந்துகூட அவர்களுக்கு இரும்புத் தாதுக்கள் அனுப்பப்படுகின்றனவோ என்னவோ, தெரியாது.

THE HON. SRI R. VENKATARAMAN: பிற ராஜ்யங்களிலிருந்துதான் போகிறது. ஆனால் நம் ராஜ்யத்தின் வழியாகப் போகிறது.

SRI P. S. CHINNADURAI: நம்முடைய ராஜ்யத்திலிருந்து போகவில்லை என்று கூறினார்கள். ஆனால் நம் ராஜ்யத்தின் வழியாக அனுப்பப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. அது எப்படியிருந்தாலும், பல ஆயிரம் மைல்கள் தூரத்திலுள்ள இந்தியாவிலிருந்து தங்களுடைய நாட்டிற்கு இரும்புத் தாதுக்களை இறக்குமதி செய்து, அந்த இரும்பை நன்கு உருக்கி, நல்ல இயந்திரங்களைத் தயாரித்து, அந்த இயந்திரங்களை மீண்டும் நம்முடைய நாட்டிற்கு அனுப்ப முடிகிறது என்றால், நம்முடைய குறைபாடுதான் என்ன என்பதைக் குறித்து நம்முடைய சர்க்கார் ஆராயவேண்டும். இவைகளைக் குறித்து நான் சொல்கிறபோது, யாரோ எதிர்க் கட்சிக்காரர் குறை கூறுவதற்காக சொல்கிறார் என்று எண்ண வேண்டாம். நாட்டின் பொது நலனைக் குறித்து, இதை நான் கூறுகிறேனே அல்லாமல், வேறு காரணம் அல்ல.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னால் நான் ஜப்பானுக்குப் போயிருந்தபோதுதான் எனக்கு இந்த விவரங்கள் தெரியும். அவர்கள் வெளியே இருந்து இரும்புத் தாதுக்களை இறக்குமதி செய்து, நல்ல நல்ல இயந்திரங்கள் செய்யப்படுவதாகக் கூறியதைக் கேட்டபோது நான் மிகுந்த ஆச்சரியம் அடைந்தேன். நான் அங்கே ஒரு பெரிய தொழிற்சாலைக்குச் சென்றிருந்தேன். அப்போதுதான் அவர்கள் தங்களுக்கு வேண்டிய மூலப் பொருள்களை எங்கிருந்து பெறுகிறார்கள் என்பதைக் குறித்து விவரமாக அறிய முடிந்தது. அவர்கள் அவ்வாறு தயார் செய்து 4,000, 5,000 மைல்களுக்கு அப்பாலுள்ள நம்முடைய நாட்டிற்கு கொண்டுவந்து விற்பனை செய்கிறார்கள். நம்முடைய நாட்டிலே இருந்துதான் அவர்களுக்கு இரும்புத் தாதுக்கள் அனுப்பப்படுகிறது என்று சொல்லப்படுகிறதே, அப்போது ஏன் அத்தாதுக்களை நம் ராஜ்ய சர்க்கார் எடுத்துக் கொண்டு, இங்கு அம்மாதிரியான ஒரு இரும்புத் தொழிற்சாலையை ஆரம்பிக்கக்கூடாது? அப்படி ஆரம்பிப்பதற்கு வெளிநாட்டு நிபுணர்கள் தேவைப்பட்டாலும், அவர்களை தருவித்துக் கொள்ள முடியாதா? கடந்த 10 ஆண்டு காலத்திலே அதாவது 1951 முதல் 1961 வரையிலே நம்முடைய நாட்டிலே போதுமான இயந்திரங்களைத் தயார் செய்து கொள்வதற்காக என்னென்ன முயற்சிகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று பார்த்தால், நம்முடைய மாகாணத்திலே ஒன்றுமே செய்யவில்லை. அப்போது எப்படி

10th March 1961] [Sri P. S. Chinnadurai]

நாம் தொழில்களை வளப்படுத்த முடியும்? ஜப்பான் நாட்டிலே பண்ணிக்கொண்டிருக்கும்போது, நம்முடைய தமிழ் நாட்டிலே மட்டும் ஏன் செய்ய முடியாது? முடியும். ஆனால் இங்கு முயற்சி செய்யவில்லை. கவனம் எல்லாம் அப்படிப் பட்ட பெரிய தொழிற்சாலைகளை வளப்படுத்துவதற்குப் பதிலாக, வேறு துறைகளிலே கவனம் செலுத்தப் பட்டு, கூடை முடைதல், பாய் பின்னுதல், அப்பளம் தயாரித்தல், செருப்பு தயாரிப்பது போன்ற அப்படிப்பட்ட தொழில்களிலே நம்முடைய கவனம் ஈடுபட்டது என்று கருத வேண்டியிருக்கிறது. இதை குறையாக நான் சொல்லவில்லை. அப்படிப்பட்ட தொழில் களும் தேவைதான். அவைகளை கவனித்துக் கொள்வதற்கு தனியார் இடத்திலே விட்டு விடுங்கள். அவர்களுக்கு வேண்டிய ஒத்தாசையை சர்க்கார் செய்யட்டும். ஆனால் அதே சமயத்தில் மின்சாரத் துறை, இரும்பு உற்பத்தி, நிலக்கரி உற்பத்தி போன்ற நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு உதவக்கூடிய திட்டங்களிலே அரசாங்கம் முக்கியமாக கவனம் செலுத்துவதை மறந்துவிடக் கூடாது. மின்சாரத் துறையைப் பொறுத்த வரையில் நம்முடைய அரசாங்கம் கடந்த 10 ஆண்டுகளாக சரிவர கவனம் செலுத்த வில்லை என்றுதான் சொல்லவேண்டும். அந்த அளவிலேதான் இன்று நம் நாட்டிலே மின்சார வளர்ச்சியானது இருந்து வருகிறது. மின்சார வளர்ச்சிக்கு உதவக்கூடிய உபகரணங்களைக்கூட நம்மால் இங்கு தயாரிக்க முடியவில்லை. மீட்டர் தயாரிப்பது மிகவும் அவசியமானது, முக்கியமானது என்று அரசாங்க நிபுணர்களால் சொல்லப்பட்டு வந்திருக்கிறது. சுமார் ஒரு லட்சம் மீட்டர்கள் நம்முடைய மாநிலத்திற்கு தேவை என்று சொன்னார்கள். பல் வேறு வகையான மீட்டர்களை நம் ராஜ்யத்திலே தயாரிப்பதற்கு கடந்த 10 ஆண்டு காலத்தில் நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக் கிறார்களா என்றால் எடுத்துக் கொள்ளவில்லை. அதற்காக மற்ற மாநிலங்களை எதிர் நோக்கி காத்துக்கொண்டிருக்கிறோம். ஆகவே, இப்படிப்பட்ட பெரிய தொழில்கள், மின்சார சாதனங்கள் தயா ரிப்பது மாத்திரமல்ல, பல்வேறு வகையான ஆதாரபூர்வமான தொழில்களை நாம் வளர்ப்பதற்கு போதிய அக்கரை காட்டவில்லை என்பதை நாம் காண்கிறோம்.

அடுத்து முக்கியமாக குறிப்பிடவேண்டிய விஷயம், சர்க்கா ருடைய கொள்கையைப் பற்றியது ஆகும். எந்தத் தொழிலை சர்க்கார் தரப்பிலே எடுத்துக் கொள்ளவேண்டுமோ, அதனைக்கூட தனியார் தரப்பிலே விடுகிற அளவிற்குத்தான் சர்க்கார் கொள்கை கடந்த 10 ஆண்டு காலத்தில் இருந்து வந்திருக்கிறது என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். உதாரணமாக செயற்கை பட்டுத் தொழிற்சாலை, அலுமினியம் தொழிற்சாலை, தேனிரும்பு தயாரிக் கின்ற தொழிற்சாலை, இவைகளையெல்லாம் தனிப்பட்ட நபர்களிடம் விட்டிருப்பதைத்தான் நான் இங்கே குறிப்பாக எடுத்துக்காட்ட விரும்புகிறேன். சுமார் 5 லட்சம் ரூபாய்க்கு மேல் மூலதனம் போட்டுச் செய்யவேண்டிய தொழில்களையெல்லாம் அரசாங்கத் தரப்பிலே செய்வதுதான் நல்லது என்று நான் கருதுகிறேன்.

அரசாங்கத் தரப்பிலே செய்வதற்கு அதற்குரிய ஆதரவு நிச்சய மாக மக்களிடத்திலே கிடைக்கும் என்றுகூட நான் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். புதிய பஞ்சாலைகள், புதிய ரசாயன உரத் தொழிற்சாலைகள், ரப்பர் மூலம் ட்யூப்கள், டயர்கள் தயாரிக்கின்ற தொழிற்சாலைகள் இவைகளெல்லாம் அரசாங்கத் தரப்பிலே, அரசாங்க ஆதரவு பெற்ற கார்பரேஷன்களாலே ஆரம்பிக்கப்பட்டு, அந்தத் தொழில்களிலே கிடைக்கக்கூடிய லாபமெல்லாம் அரசாங்கம் மக்களுக்கு பயன்படுத்தக்கூடிய முறையிலே அரசாங்கம் ஏற்பாடு செய்து, இந்தக் கம்பெனிகளை தோற்று வித்து, அதன் மூலம் நடத்துவதுதான் நல்லது. அதுதான் சோஷலிஸ சர்க்கார் கொள்கைக்கு ஒத்ததாக இருக்க முடியும். ஆகவே, நம்முடைய ராஜ்ய அரசாங்கம் இதுவரையில் அந்தக் கொள்கையை நிறைவேற்றிவைக்கவில்லை என்பதையும் நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன்.

கைத்தறிக்கு தேவையான விழுதுகளை நம்முடைய ராஜ்ய அரசாங்கம் சொந்தமாக நமது நாட்டிலே உற்பத்தி செய்வதற்கு வேண்டிய திட்டத்தை பூராவுமாக நிறைவேற்றிவைக்க முடிய வில்லை. விழுதுகளுக்கு இன்று வெளி நாடுகளை எதிர்பார்த்து நிற்கவேண்டிய நிலைமையைத்தான் நாம் இங்கே காண்கிறோம். ஆகவே, போதுமான அளவிலே தொழில் துறையில் முன்னேற் றத்தை நம்முடைய மாநிலத்தில் ஏற்படுத்துவதற்கு இது வரையில் அரசாங்கம் எடுத்துக்கொண்ட முயற்சிகள் உருப்படியான அளவிலே பலன் அளிக்கவில்லை. எதுவும் முன்னேறவே இல்லை என்று நான் சொல்லவில்லை. பத்து ஆண்டுகளுக்கு முன்பாக இருந்ததைக் காட்டிலும் இன்றைக்கு நாம் பின்னுக்குப் போயிருக் கிறோம் என்று நான் சொல்லுவதற்குத் தயாராக இல்லை. ஓரளவிற்கு 10 ஆண்டு காலத்தில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால், எந்த அளவிற்கு புதிய தொழிற்சாலைகள் ஏற்படுத்தி யிருக்கவேண்டுமோ, அந்த அளவிற்கு இந்த ராஜ்யத்தில் புதிய தொழிற்சாலைகள் ஏற்படவில்லை. மேலும் எந்த அளவிற்கு தொழில் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டதினால், மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துகிற அளவிலே சமதர்ம பொருளா தாரத் திட்டத்தில் அவை மக்களுக்கு உதவுபடியாக இருந்திருக்க வேண்டுமோ, அந்த அளவிற்கு உதவுபடியாக இருக்கவில்லை. அதற்குக் காரணம் முதலாளித்துவத்திற்கு ஆதரவான ஒரு கொள்கையை சர்க்கார் விரும்பியோ, விரும்பாமலோ கடைப் பிடிப்பதுதான் என்று சொல்ல விரும்புகிறேன். எப்படியாவது தொழில் துறையில் முன்னேற்றம் ஏற்படவேண்டும் என்ற கொள்கை சரிதானா என்பதை அரசாங்கம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இப்படித்தான் தொழில்கள் முன்னேறவேண்டும் என்று திட்டமிட்டுக் கொண்டிருக்கிற ஒரு சர்க்காருடைய கொள்கை அளவிலே வைத்துப் பார்க்கும்பொழுது, எப்படி வேண்டுமானாலும் முன்னேறலாம், எப்படி வேண்டுமானாலும் தொழில்களை ஏற்படுத்த லாம் என்று நினைப்பது சரியானது அல்ல. அதன் மூலம் நாம் விரும்புகின்ற சமதர்ம பொருளாதார லட்சியத்தை நாம் அடைய

முடியாது. ஆகையால் நம்முடைய நாட்டு மக்கள் இன்றைய சர்க்கார் தொழில் கொள்கையை ஏற்றுக்கொள்ள இயலாது என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். வருகிற மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலாவது அடிப்படையான ஆதார சக்திகளை பெருக்குவதற்காக புதிய தொழில்களை ஆரம்பிக்கவும், சமுதாயத்திற்கு அவைகளை உடமையாகச் செய்து, அதிலிருந்து கிடைக்கும் வருமான ஊற்றுகள் சமுதாயத்தில் வளம் ஏற்படுத்துவதற்கு வழி செய்வதற்கும், திட்டமிட்டு நம்முடைய ராஜ்ய சர்க்கார் இனியாவது ஏற்பாடு செய்யவேண்டும் என்று எடுத்துக் கூறி, என்னுடைய வார்த்தைகளை இத்தோடு முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri A. VEDARATHNAM:** கனம் தலைவர் அவர்களே, நம்முடைய மாநிலத்தில் இன்று இயங்கி வருகிற இலாகாக்களுக்குள் எல்லாவற்றிலும் நம்முடைய கைத்தொழில் இலாகா போற்ற வேண்டிய இலாகா. எனினும் அதைப்பற்றித்தான் வெகுவாக நம்முடைய எதிர்க்கட்சிகளிலே குறை கூறப்படுகிறது என்பதை நான் இங்கே வருத்தத்தோடு குறிப்பிட விரும்புகிறேன். அதனாலே தான் வடக்கு, தெற்கு என்ற ஒரு பல்லவியே நம்முடைய மாநிலத்திலே இப்பொழுது தோன்றியிருக்கிறது என்று நான் சொன்னால், அது தவறாகாது. உதாரணமாக, அன்றையதினம் நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள்; இது வரையில் வங்காளம் முதல் ஸ்தானத்தை வகித்தது, அதைக்கூட நம்முடைய தமிழகம் இப்பொழுது முந்திவிட்டது என்ற விஷயத்தை குறிப்பிட்டு பல தொழில்களின் எண்ணிக்கையை மாத்திரம் குறிப்பிட்டார்கள். ரூபாய் 50 லட்சத்திற்கு மேற்பட்ட மூலதனத்தில் நடைபெறுகின்ற 18 கம்பெனிகள் இந்தக் கடைசி ஆண்டில் மாத்திரம் ஏற்பட்டிருக்கிறது என்ற விஷயத்தைக் குறிப்பிட்டார்கள். ஆனால், அதன் விவரத்தை அவர்கள் குறிப்பிட வில்லை. அதாவது, நமது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட ஆரம்ப காலத்தில் 4,200 பாக்டரியாக இருந்தது, மூன்றாவது திட்ட ஆரம்பத்திற்குள், இந்த 5 ஆண்டுகளில் 5,880-ஆக உயர்ந்திருக்கிறது என்று சொல்லிச் சொன்னால், தொழில் அபிவிருத்தி இங்கே இல்லை என்று கூறுவது முறையா என்பதை அவர்கள் சிந்திக்க வேண்டும் என்று அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

சமீபத்தில் மத்திய சர்க்காரின் கம்பெனிச் சட்ட காரியதரிசி அவர்கள் வந்து குறிப்பிடுகிற வரையிலே நமக்கு நம்முடைய பெருமை விளங்காமல் இருந்தது. மற்ற எல்லா தென் மண்டல ராஜ்யங்களையும் சேர்த்து 1,150 கம்பெனிகள்தான் ரிஜிஸ்டர் ஆகியிருக்கின்றன. அதில் நம்முடைய தமிழகத்தில் மாத்திரம் 788 கம்பெனிகள் என்று அவர்கள் குறிப்பிட்டதிலிருந்து, அவர்கள் கூறித்தான் இந்த விஷயத்தை, நாம் நம்முடைய பெருமையைப் பற்றி உணர்ந்து கொள்ளவேண்டியிருக்கிறது. மற்ற 3 ராஜ்யங்களும் சேர்ந்து இந்தக் கம்பெனிகள் ஏற்படுத்தும்

[Sri A. Vedarathnam] [10th March 1961

விஷயத்திலே நம்முடைய ராஜ்யத்தைவிட பாதிக்குக்கூட குறைவாகத்தான் இருக்கிறது என்ற விஷயத்தை அவர்கள் சுட்டிக் காட்டினார்கள்.

இப்பொழுது கடந்த ஐந்தாண்டுத் திட்டத்தில் 41 புதிய பெரிய பாக்டரிகள் நம்முடைய மாநிலத்தில் ஏற்பட்டிருக்கிறது. ஷீட்கள் செய்கின்ற பாக்டரி ரூ. 50 லட்சம் மூலதனத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. நெய்வேலி களி மண்ணைக்கொண்டு அலுமினியம் செய்வதற்கு ஒரு கோடி ரூபாய் மூலதனத்தில் ஒரு பாக்டரி, சர்க்கரம் செய்கின்ற பாக்டரி ஒரு கோடி ரூபாய் மூலதனத்தில், 10 கோடி ரூபாய் மூலதனத்தில் காகிதம் செய்ய பாக்டரி, வார்ப்படத் தொழில்களை விஸ்தரிப்பதற்காக ஒரு பாக்டரி ஒரு கோடி ரூபாய் மூலதனத்தில், 10 கோடி ரூபாய் மூலதனத்தில் அலுமினியம் பாக்டரி, அருணா சர்க்கரை பாக்டரி 10 கோடி ரூபாய் மூலதனத்தில், 'டயமண்டு சைன்ஸ்', அதாவது சங்கிலிகள் செய்கின்ற பாக்டரி 70 லட்சம் ரூபாய் மூலதனத்தில், டிராக்டர்கள் செய்வதற்கு ஒரு பாக்டரி சென்னைக்கு அருகாமையில் ரூ. 2 கோடி மூலதனத்தில், கேபிள்கள் செய்ய ஒரு பாக்டரி ரூபாய் 2 கோடி மூலதனத்தில் அத்தனையும் தனியார் துறையிலே ஆரம்பிக்கப்பட்டிருக்கிற தொழில்கள். சர்க்கார் துறையிலே 'டெலிபிரிண்டர்ஸ்' செய்வதற்காக ரூ. 3 கோடி மூலதனத்தில் ஒரு பாக்டரி, கச்சா பிலிம் உற்பத்தி செய்வதற்கு ரூ. 3 கோடி மூலதனத்தில் ஒரு பாக்டரி, 'ஸர்ஜிகல் இன்ஸ்ட்ருமெண்டு' செய்வதற்காக 8 கோடி ரூபாய் மூலதனத்தில் ஒரு பாக்டரி, இது அல்லாமல் 'ஹெவ்வி எலெக்டிரிகல் இன்ஸ்ட்ருமெண்டுஸ்' செய்வதற்காக ரூ. 50 கோடி மூலதனத்தில் ஒரு பாக்டரி ஏற்படுத்துவதற்கு அவர்கள் திட்டமிட்டுக் கொண்டிருக்கிறார்கள். இவை அனைத்தையும் இன்றைக்கு நம்முடைய நிதி அமைச்சர் கூறுவதற்கு முன்னதாக நம்முடைய எதிர்க்கட்சித் தலைவர்களேகூட இதை உணர்ந்துகொள்ளாமல், நம்முடைய நாடு பின்தங்கியிருக்கிறது என்ற குற்றச்சாட்டை கூறினார்கள். நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் எடுத்துக் கூறிய பிறகுதான் அவர்களே உணர்ந்துகொள்ள முடிந்தது. அன்று நான் பட்ஜெட் விவாத காலத்தில் பேசுகிறபோது, தொழில் வளம் அத்தனைக்கும் காரணம் தாங்கள்தான் என்று திராவிட முன்னேற்றக் கழக கட்சியினர் கூறினார்கள். நான் அதை ஆட்சேபிக்கவில்லை. இந்த உலகம் நடப்பதற்கே அவர்கள்தான் காரணம் என்று கூறுவார்களேயானால் எனக்கு ஆட்சேபணை இல்லை என்றுதான் சொன்னேன். அதோடு அவர்கள் விட்டிருக்க வேண்டும். அதை மீண்டும் மீண்டும் வற்புறுத்தி, நாங்கள் எடுத்துக்காட்டாமல் போனால் இவ்வளவு தூரம் தொழில்கள் வளர்ந்திருக்குமா என்று கேட்டார்கள். என்னென்ன தொழில்கள் வளர்ந்திருக்கின்றன என்று அவர்களுடைய தலைவர் உள்பட ஒருவரும் தெரிந்து கொள்ளாமல், நாங்கள்தான் காரணம் என்று கூறினால் அது கோழி கூவிதான் பொழுது விடிகிறது என்று நினைப்பதுபோல் இருக்கிறது, எனக்கு ஒன்றும் ஆட்சேபணை இல்லை

10th March 1961] [Sri A. Vedarathnam]

என்று சொன்னேன். உதாரணங்கள் கூறுவதற்கு எத்தனையோ ஆயிரம் ஆண்டுகளாக சிங்கம், புலி, காடி போன்ற மிருகங்கள் எல்லாம் உபயோகப்படுத்தப்பட்டு வந்திருக்கின்றன. எதிர்க் கட்சித் தலைவர் எத்தனையோ புத்தகங்களை எழுதியிருக்கிறார்கள். அதிலே சான்று கூறி இருக்கிற இடங்களிலெல்லாம் அந்த மிருகங்களின் பாஷையைத் தெரிந்துக்கொண்டுதான் உபயோகப்படுத்தியிருக்கிறார்களா என்று கேட்கிறேன். இதற்கு அவர்கள் வருத்தப்படவேண்டிய காரணம் இல்லை. அவர்களை மரியாதைக் குறைவாக பொதுக்கூட்டத்திலோ அல்லது இந்த அவையிலேயோ நான் ஒரு வார்த்தைகூட பேசினது கிடையாது. அகில இந்தியாவிலேயே முதன்மையான ஸ்தானத்தை நம்முடைய மாநிலம் அடைந்திருந்தும், அதை உணராமல் குற்றச்சாட்டு கூறுகிறார்கள், அது நியாயமல்ல. அகில இந்தியாவில் இருக்கிற எல்லா மாநிலங்களைக் காட்டிலும், நம்முடைய மாநிலம் இன்றைக்கு முன்னணிக்கு வந்திருக்கிறது என்பதை யாரும் மறுக்க முடியாது. நமது தொழில் அமைச்சர் கூட, தொழில் வளர்ந்திருக்கிறது என்பதை ஒப்புக் கொண்டால் போதும், யாரால் இருந்தாலும் பாதகமில்லை என்று சொன்னார்கள். அந்த அளவோடு நிறுத்திக்கொண்டிருந்தால், இந்த உதாரணத்தைச் சொல்லுவதற்கு அவசியம் ஏற்பட்டிராது. கோழி பாஷை, மிருகங்களின் பாஷையை எல்லாம் தெரிந்து கொண்டு இங்கே சட்டசபை அங்கத்தினர்கள் பயன்படுத்துகிறார்கள் என்று சொல்லுவார்களேயானால், அது நியாயமற்ற குற்றச்சாட்டு.

சென்ற ஆண்டிலேகூட குடிசைக் கைத்தொழில்களைப்பற்றி எல்லாம் எதிர்க்கட்சியினர் கேலியாகப் பேசினார்கள். இப்பொழுது கூட கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள், அப்பளமிடுதல், கூடை பின்னுதல், பாய் முடைதல், இந்தத் தொழில்களைப் பற்றி எல்லாம் கேலியாகப் பேசினார்கள். அதேசமயத்தில் இன்னொன்றையும் குறிப்பிட்டார்கள். அகில இந்தியாவிலேயே பஞ்சாப்தான் முன்னணியில் இருக்கிற மாகாணம் என்று குறிப்பிட்டார்கள். அவர்களை நான் ஒன்று கேட்க விரும்புகிறேன். பஞ்சாப் மாகாணத்திலே, நம்முடைய மாகாணத்தில் இருப்பதுபோல், நான் இப்பொழுது படித்த ஜாபிதாவில் உள்ள ஏதாவது ஒரு கனரகத் தொழிலாவது இருக்கிறதா ? இந்தக் குடிசைக் கைத்தொழில்கள் காரணமாகத்தான் பஞ்சாப் இந்த அளவுக்கு முன்னணிக்கு வந்திருக்கிறது என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். அதே மாதிரி இந்த குடிசைக் கைத்தொழில்களைக் கேலி செய்யும் ஒவ்வொரு எதிர்க்கட்சி அங்கத்தினருக்கும் நினைவூட்ட விரும்பு கிறேன். பஞ்சாப் மாகாணத்திலே வீடு தோறும் ராட்டை சுற்று கிறார்கள். அகில இந்தியாவிலேயே கதர் இயக்கத்திற்குப் பெயர் போன மாகாணம் எது என்று சொன்னால், அது பஞ்சாப் மாகாணம்தான் என்று அவர்களுக்கு எடுத்துக்காட்ட விரும்பு கிறேன். அப்பளம் இடுதல், கூடை முடைதல், பாய் பின்னுதல் போன்ற தொழில்களை விட்டுவிட்டால், இந்தமாதிரி கல்வித்

திறன், தொழில் திறன் இல்லாதவர்களுடைய வாழ்க்கையை வளர்ப்பதற்கு, வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்குவதற்கு, இவர்கள் வேறு என்ன யோசனையைக் கூறுகிறார்கள் என்று கேட்கிறேன். அப்பளம் இடுதல், ராட்டை சுற்றுதல் போன்ற கைத்தொழில்கள் மூலமாகத்தான் விதவை போன்றவர்கள் வீட்டிலே உட்கார்ந்துகொண்டு, அவர்களுடைய வாழ்க்கையை கௌரவமாக நடத்த முடியும். இவற்றைக் கேலி செய்தால், வேறு என்ன யோசனைகளை வைத்திருக்கிறார்கள் என்று அவர்களைக் கேட்கிறேன்.

**Sri P. S. CHINNADURAI:** நான் ஒன்றும் சிறு கைத்தொழில்களை கேலியாகச் சொல்லவில்லை. சர்க்கார் இதிலே புகுந்து நடத்த வேண்டிய அவசியமில்லை, இதை எல்லாம் தனியாருக்கே விட்டு விடலாமென்றுதான் சொன்னேன்.

**Sri A. VEDARATHNAM:** இப்பொழுது இந்தத் தொழில்கள் எல்லாம் க்ஷீணமாய் இருக்கின்றன. கொல்லர்கள் பிள்ளைகள் அந்த வேலையைச் செய்வதில்லை. தச்சர் பிள்ளைகள் 7-வது அல்லது 8-வது வகுப்பு வரை படித்துவிட்டு, உபாத்தியாயர், கிராம சேவகர்கள் போன்ற நல்ல வேலைக்குச் செல்லுகின்றனர் அவர்கள் எல்லாம் இந்த வேலையைக் கைவிட்டுவிட்டார்கள்.

**Sri K. ANBAZHAGAN:** உபாத்தியாயர் வேலை நல்ல வேலை இல்லை.

**Sri A. VEDARATHNAM:** உபாத்தியாயர் வேலை நல்ல வேலை தான். இல்லையென்றால் கனம் அங்கத்தினரே உபாத்தியாயராக இருப்பாரா ? (சிரிப்பு.)

**Sri K. ANBAZHAGAN:** உபாத்தியாயர் வேலையைவிட தொழில் செய்வதுதான் நல்லது.

**Sri A. VEDARATHNAM:** இந்த கனரகத் தொழில்கள் எவ்வளவு அத்தியாவசியமோ, அதைக் காட்டிலும் மிக அத்தியாவசியம், இந்தக் குடிசைக் கைத்தொழில்கள். ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸ், காட்டேஜ் இண்டஸ்ட்ரீஸ் இவைகள் மிகவும் அவசியம் என்று நான் சொல்லுவதை யாரும் தவறு என்று சொல்ல முடியாது.

இதுபோன்று, நம்முடைய நாட்டிலே இந்தமாதிரி தொழில்களை வளர்ப்பதற்கு அரசாங்கம் நல்ல பல முயற்சிகளை எடுத்துக் கொண்டிருக்கிறது. தொழில் துறையிலே கடந்த 150 ஆண்டுகளாகப் பின்தங்கிய ஒரு நாட்டை, அந்தத் துறையிலே ஊக்கம் அளித்து, கூட்டுறவு முறையில் பல தொழில்களை ஆரம்பிப்பதற்கு நல்ல சாதனங்களை நமது சர்க்கார் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இருபது சதவிகிதம் மூலதனத்தை தனியார் கூட்டுறவு சங்கத்தின் மூலமாகப் போட முன்வருவார்களேயானால், அரசாங்கம் 80 சதவிகிதம் அவர்களுக்கு உதவி, அதன்மூலமாக தொழில் வளத்தை விருத்தி செய்வதற்கு, ஏராளமாக எவ்வளவு நிதி கேட்டாலும், அதைக் கொடுப்பதற்குத்

தயாராயிருக்கிறது. இதைத் தாராளமாக அவர்கள் பயன் படுத்திக்கொண்டு இந்த மாதிரி தொழில் வளத்தைப் பெருக்க முன்வரவேண்டும். இருபது சதவிகிதம் என்று இருப்பதைக் கூட இன்னும் கொஞ்சம் குறைக்கலாமென்று நான் அரசாங் கத்தைக் கேட்டுக்கொள்கிறேன். ஏனென்ருல் தனியார் துறையிலே கைத்தொழில்கள் வளரவேண்டும். சோஷலிஸ்டு கொள்கை என்பது என்ன? தனியார் துறையே கூடாது என்று நினைக்கிறவர் களுக்கும், காங்கிரஸ் சர்க்காருடைய கொள்கைக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் இருப்பதை நான் எடுத்துக்காட்ட விரும்புகிறேன். காந்தி அடிகளின் கொள்கை என்ன? தனவந்தர் கள் என்று சொன்னுல், அந்த தனத்தை வளர்ப்பதற்கு அவர் களிடத்திலே ஒரு ஆற்றல் இருக்கிறது, அந்த ஆற்றலை அழித்து விடக்கூடாது என்பதுதான். எவ்வளவு தனம் இருந்தாலும்கூட, அவர்கள் எளிய வாழ்க்கை நடத்தி, இல்லாதவர்களுக்கு அத்தியா வசியமான தேவைகளை உதவும்படியாகச் செய்கிருர்கள் என்பது காந்தி அடிகளின் அடிப்படையான தத்துவம். அதற்கு ஒரு உதாரணம் கொடுக்கவேண்டுமென்ருல், இன்றைக்கு உலகத்திலே நோபல் பிரைஸ் வாங்கின அறிவாளிகளை எடுத்துக்கொண்டால், எல்லா இனத்தைக் காட்டிலும், அதிகமான நோபல் பிரைஸ்கள் வாங்கினவர்கள் ஜூஸ்-கள்தான் என்று தெரியவரும். ஜூஸ் என்று சொன்னுல், அதற்கு விளக்கம் கூறத்தேவையில்லை என்று நினைக்கிறேன். உலகத்திலேயே அவர்கள்தான் பணக்காரர்கள். பணம் சேர்க்கிறவர்களுக்கு இந்த ஆற்றல் இருக்கிறது என்பதை இந்த நோபல் பிரைஸ்கள் நிரூபித்துக் காட்டுகின்றன. தனியார் துறையை அழித்துவிடவேண்டுமென்று பல கட்சிகள் இருந்தாலும் இன்று நம்முடைய கொள்கை அது அல்ல. தனியார் துறையிலே தொழில்களை வளர்க்க வேண்டியதுதான் முறை என்று நாம் கருது கிற காரணத்தினுலே, இந்த மாதிரி உதவிகளைக் கொடுத்து வருகிறோம். தனியார் நடத்தும் தொழில்கள் இன்னும் சிக்கன மாக, நல்ல முறையில் கண்காணிப்போடு, சர்க்கார் நடத்துவதைக் காட்டிலும் சிக்கனமான முறையில் நடத்தலாமென்ற காரணத்தி னுலே இதைக் கொன்றுவிடக் கூடாது. தனியார் துறையிலுள்ள திறனை அழித்துவிடக் கூடாது. அவர்களுக்கு இந்தத் தொழில் கள் ஆரம்பிப்பதற்கு 50 சதவிகிதத்திற்கு அதிகமாக இன்றைக்கு அரசாங்கம் உதவி அளிக்கத் தயாராயிருக்கிறது. கூட்டுறவுத் துறைமூலமாகச் செய்தால் 80 சதவிகிதத்திற்கு உதவி அளிக்கப் படுகிறது. இன்னும் அதிகமாக உதவி வேண்டுமென்று சொன்னு லும்கூட, அரசாங்கம் அதைப் புறக்கணிக்கத் தயாராயில்லை என் பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அதோடு இந்தத் தொழிலில் ஈடுபட்டவர்களுக்கு மாத்திரமல்லாமல், தொழில் துறையில் திற மையை வளர்க்க, ஜில்லாவிற்கு ஒரு தொழில் பள்ளிக்கூடம், அது கூடப் போதாது என்று ஜில்லாவுக்கு இரண்டு பள்ளிக்கூடம் விதம், 24 பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்த முன்வந்திருக்கிருர்கள். இந்த 24 பள்ளிகளும்கூடப் போதாது; ஏராளமான ஹைஸ்கூல் கள் இருக்கின்றன. இவையெல்லாம் அரசாங்கக் குமாஸ்தாக்களை

10 a.m.

உண்டாக்கி அந்த வேலைக்குப் பயனுள்ளவர்களாகவே செய்வதாக இருக்கின்றன. இது மெக்காலே வளர்த்த திட்டம், குமாஸ்தாக்களை உண்டாக்கும் பள்ளிகளாகவே இருக்கின்றன. எனவே அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன், இப்பொழுது இருக்கும் ஹைஸ்கூல்களில், ஒரு பாதியையாவது, இல்லாவிட்டால், மூன்றில் ஒரு பாகத்தையாவது, கைத் தொழில் பகுதியாக மாற்ற வேண்டும்; அந்த விதத்தில் தொழில் துறையில் கவனம் செலுத்த வேண்டும்; தொழில் கல்வியைக் கவர்ச்சியுள்ளதாகச் செய்ய வேண்டும். எங்கள் தஞ்சை ஜில்லாவில் உள்ள இண்டஸ்ட்ரியல் ஸ்கூலை இப்பொழுது அரசாங்கம் எடுத்துக் கொண்டு அதைத் தொழில் பள்ளியாக மாற்ற முன்வந்திருப்பதற்காக அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இருபத்திநான்கு தொழில் பள்ளிகளை நம் மாநிலத்தில் ஏற்படுத்த முன் வந்ததற்காகவும் அவர்களைப் பாராட்டுகிறேன். பல ஹைஸ்கூல்கள் இப்பொழுது இருப்பது தேவைக்கு அதிகமாக இருக்கிறது, பயனற்றவைகளாக இருக்கின்றன. அங்கு படித்த மாணவர்களெல்லாம், இங்கே ஒவ்வொரு எம்.எல்.ஏ.-களுக்கு முன்னால் வந்திருந்து, வேலை தேடித்தரவேண்டுமென்று முற்றுகை இடுகிறார்கள். அப்படிப்பட்ட அவல நிலையிலிருந்து அவர்களைக் காப்பாற்ற, முற்றிலும் இல்லாவிட்டாலும், இயன்ற அளவாவது, ஆண்டுக்கு இத்தனை பள்ளிகளை மாற்றுவது என்ற ஒரு திட்டப் படியாவது, அவைகளைத் தொழில் பள்ளிகளாக மாற்றவேண்டும். அப்படிபல ஹைஸ்கூல்களை கைத் தொழில் பள்ளிகளாக மாற்ற முன்வந்தால், மாநிலத்திற்கு தொழில் வளர்ச்சி மட்டுமல்ல, பொருளாதார வளர்ச்சியையும் தேடித்தர முடியும்; இந்த வேலையில்லாத் திண்டாட்டமும் குறையும். இன்றைக்கு விலைவாசி அதிகரித்திருக்கிறது. அதைக் குறைக்க இந்தத் தொழில் உற்பத்தி பெரிதும் துணை செய்யும் என்று தெரிவித்திருக்கிறார்கள் தொழில் நிபுணர்கள். இன்னும் புதிதாக பல தொழில்கள் மாகாணத்தில் ஆரம்பிக்க வேண்டிய அவசியம் இருக்கின்றன. அவற்றையும் அரசாங்கம் சிந்தனை செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

கொள்ளேகாலம் நம்மைவிட்டு இப்பொழுது மைசூர் மாநிலத்திற்குப் போய்விட்டது; அதன் காரணமாக பட்டுத் தொழில் நம்மிடமிருந்து, நம் மாநிலத்திலிருந்து போய்விட்டது. பட்டுத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் பட்டு உற்பத்தி செய்ய, மல்பரிச் செடி முக்கியமானதாக இருக்கிறது. இப்பொழுது அது குடியாத்தம் பிரதேசத்தில் எங்கு பார்த்தாலும் பயிர் செய்யப்படுகிறது. இன்னும் ஆமணக்கு செடிகளைப் பட்டுப்பூச்சிகள் தின்று வளர்கின்றன என்று நிபுணர்கள் சொல்லுகிறார்கள். ஆகவே, இந்த ஆமணக்கை எந்தப் பகுதியிலும் வளர்க்க முடிகிறது என்ற காரணத்தினால், அதை நிறைய உற்பத்தி செய்து, பட்டுப்பூச்சிகள் வளர்க்க அந்தத் தொழிலை விருத்தி செய்யவேண்டும். அப்படிச் செய்தால் நம் மாநிலத்திற்கு பெரும் தொகை மிச்சமாகும்; கைத்தறி நெசவாளர்களுக்கும் குறைந்த விலையில் பட்டு

10th March 1961] [Sri A. Vedarathnam]

வினியோகிக்க வேண்டிய சாத்தியக் கூறுகள் ஏற்படும் என்பதை யும் நினைவூட்ட விரும்புகிறேன். இங்கே ஏராளமான ஜிப்ஸம் . . . (மணியடிக்கப்பட்டது.)

இன்னும் கொஞ்ச நேரம். எனக்கு அன் லிமிடட் டைம் என்று நினைத்தேன்.

**Mr. Speaker:** அது எப்படி? நான் அப்படிச் சொல்ல வில்லையே. கனம் சின்னதுரைக்கு 15 நிமிஷம் கொடுக்கப் பட்டது; அதிலிருந்து தாங்கள் தெரிந்து கொண்டு இருக்க வேண்டும் தங்களுக்கு எவ்வளவு டைம் என்று. அது போகட்டும். சீக்கிரம் முடித்து விடுங்கள். நான் மணியடிக்க வில்லை.

**Sri A. Vedarathnam:** நம்மிடம் ஏராளமான ஜிப்ஸம் கிடைக்கிறது. அதை ஆராய்ச்சி செய்து எந்தத் தொழில்களுக் குப் பயன் படுத்தலாம் என்ற விஷயத்தை ஆராய்ச்சி செய்ய நம் மாநிலத்தில் அதிகப் பணம் செலவிடவேண்டும். மற்றவர்கள் ஆராய்ந்து அறிந்த விஷயங்களைமட்டும் வைத்துக் கொண்டு காப்பி அடிப்பதைக் காட்டிலும், நம் தொழில்களுக்கு எப்படி அனுகூல மாக இருக்கும் என்று கண்டறியவேண்டும்.

இப்பொழுது மொலாஸஸ் சக்கரை ஆலைகளிலிருந்து ஏராள மாகக் கிடைக்கிறது. அதைக் கொண்டு பவர் ஆயில் உற்பத்தி செய்ய ஒரு தொழிற்சாலை ஏற்படுத்தினால் மிக்க வரவேற்கத் தக்க தாக இருக்கும். தஞ்சை ஜில்லா போன்ற ஜில்லாக்களில், எந்தத் தொழில்களுக்கும் வசதியில்லாத இடங்களில், எஞ்ஜினியரிங் இண்டஸ்ட்ரி, டெக்ஸ்டைல் இண்டஸ்ட்ரி, இவைதான் அங்கே ஆரம்பிக்க முடியும். இப்பொழுது டெக்ஸ்டைல் தொழிற்சாலை ஆரம்பிக்க முன்வந்திருப்பதை வரவேற்கிறேன். அது மாத்திரம் போதாது. டெக்ஸ்டைல் இருந்து, மில் லூம்கள் இல்லாவிட்டால் பயனில்லை. குறைந்த பட்சம் 300 லூம்கள் கொண்ட ஒரு நெச வாலையை ஆரம்பிக்க வேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன். அங்கே ஒரே ஒரு ரோலிங் மில் நாகைப் பட்டணத்தில் இருக்கிறது. அந்தத் தொழிற்சாலை ஜில்லாவின் தேவை அவ்வளவையும் பூர்த்தி செய்ய உதவியாக இல்லை. அதற்கு வேண்டிய உதவிகள் கொடுத்து விருத்தி செய்ய முன்வரவேண்டும்.

லட்சக் கணக்கான டன் உப்பு வியர்த்தமாகப் போகிறது, வேதாரணியம் பிராந்தியத்தில். அங்கே ஒரு சோடா ஆஷ் பாக்டரிவைத்து, ரசாயனத் தொழிற்சாலை ஒன்று அங்கே ஏற்படுத்த முன் வரவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

இந்தத் தொழிற்சாலைகளெல்லாம் நடத்த மூலப் பொருளான நிலக்கரி போதிய அளவு உரிய காலத்தில் வராததால், செமண்ட் போன்ற தொழில்கள் நின்று விட்டு இருக்கிறது. மகசூல் காலத் தில் வாகன்களுக்குத் தேவை, டிமாண்ட் இருக்கிறது. ஏராள மான வாகன்கள் பின்னால் தேங்கிக் கிடக்கின்றன. அந்தக் காலங் களில் நிலக்கரியைக் கொண்டுவந்து டம்ப் செய்து தேக்கி வைத்துக் கொண்டு, பயன் படுத்த அரசாங்கம் முன்வரவேண்டும்

என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அதற்கு வேண்டிய கோடௌன் களேயும் அமைத்துக் கொள்ள வேண்டும். இதைப் பற்றியும் சர்க்கார் யோசனை செய்ய வேண்டும். தலைவர் அவர்கள் மணி யடித்திருக்கிறார்கள். அதிகம் பேசுவதற்கில்லை.

இது போன்று பல கைத்தொழில்களை நம் தொழில் இலாகா ஏற்படுத்தி விருத்தி செய்வதில் கவனம் செலுத்தினால்தான், நமக்கு பயனுள்ளதாக இருக்கும். கைத்தொழில்தான் கல்வி அறிவு உள்ள மக்கள் குறைந்துள்ள நம் பகுதிக்கு அத்யாவசியத் தேவைகளைப் பூர்த்திசெய்ய உதவும். இம்மாதிரி பல தொழில் களில் கவனம் செலுத்தியிருப்பதற்காக அந்த இலாகாவைப் பாராட்டுகிறேன்.

இதற்கெல்லாம் முக்கியமாக இந்த ஐக்கியஸ்தாபனத்தின் தொழில் ஸெமினரை சென்னையில் நடத்த வேண்டும் என்று முடிவு செய்திருப்பதை, அது நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு, முன் னேற்றத்திற்கு உகந்த சாதனமாக இருக்கும் என்ற காரணத்தால் அதைப் பாராட்டுகிறேன். தொழில் இலாகாவை மனமாரப் பாராட்டுகிறேன், அவர்கள் பணிகளை மனமாரப் புகழ்கிறேன், வரவேற்கிறேன். இம்மாதிரிச் செய்து அகில இந்தியாவிலும் மிக்கப் பின்னணியில் இருந்த நம் மாநிலத்தை முன்னணிக்குக் கொண்டு வந்ததற்காகப் பாராட்டுகிறேன். ஆகவே இவர்களைக் குறை கூறுவது கொஞ்சமும் நியாயமில்லை என்பதைத் தெரிவித் துக் கொள்ளுகிறேன். இதை எதிர்கட்சி சகோதரர்களுக்கு எடுத்துச் சொல்லி, இந்த மானியத்தை ஆதரித்து முடிக்கிறேன்.

**Sri S. M. ANNAMALAI :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, மன்றத்தின் முன்னுலிருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன்.

நம் மாநிலத்தைப் பொறுத்தவரை, சர்க்காரின் கைத்தொழில் கொள்கை மிகமிகத் தவறு என்று சொல்ல ஆசைப்படுகிறேன். முதன் முதலில், காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் சமதர்மக் கொள்கையை ஏற்றுக் கொள்ளுகிறோம், என்று சொன்னார்கள். நாளாவட்டத்தில் அவர்கள், சமதர்மக் கொள்கையிலிருந்து மாறி விடுவார்களோ என்ற அச்சம் ஏற்படுகிறது. ஏனெனில், மூன்று ஐந்தாண்டுத் திட்டங்களிலும் தனியார் துறைக்கு ஒதுக்கிய பணத்தைப் பார்த்தால், முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கியதைவிட இரண்டாவது திட்டத்தில் அதிகமாகவும்; இரண்டாவது திட்டத்தில் ஒதுக்கியதை விட மூன்றாவது திட்டத் தில் அதிகமாகவும் பணம் ஒதுக்கப்பட்டிருப்பதையும் பார்க் கிறோம். அதைப் பார்க்கும்போது, உண்மையிலேயே அவர்கள் ஏற்றிருக்கக்கூடிய கொள்கை வெற்றி அடையுமா என்பது சந்தேக மாகத்தான் இருக்கிறது.

அவர்களுடைய சமதர்மக் கொள்கையினால், மக்கள் பலன் அடைந்திருக்கிறார்களா என்று பார்க்கவேண்டிய தாக இருக்கிறது. அவர்கள் போடக்கூடிய திட்டங்களி

ஞல் தேசிய வருவாய் வளர்ந்து கொண்டுதான் இருக்கிறது; அந்த வளர்ச்சியினுல் பாமர மக்களுக்கு எவ்விதப் பலனும் ஏற்படவில்லை. அந்தப் பணம், யாரிடத்தில் போய் சேர்ந்திருக்கிறது என்று கூட, கண்டுபிடிக்க முடியவில்லை; அந்த நிலையில்தான் சர்க்கார் இருக்கிறது. அந்தப் பலனை அனுபவிக்க முடியாமல்தான் பாமர மக்கள் மேலும் மேலும் கஷ்டத்திற்குள்ளாகக்கூடிய நிலையில் இருந்து கொண்டிருக்கிருர்கள்.

தனியார் துறையில் அதிகப்படியான தொழில்களை ஆரம்பிப்ப தன்மூலம் நாட்டில் அதிகப்படியான முதலாளிகளைத் தோற்றுவிப்பதாக இருக்கிறது. நமது மாநில சர்க்கார் பொதுத்துறையை அதிகமாக்காமல் தனியார் துறையைத்தான் அதிகமாக்கிக்கொண்டிருக்கிருர்கள். அந்த முறையில் அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கக்கூடிய கொள்கை வெற்றி அடையுமா என்பதைப் பார்க்க வேண்டியதாக இருக்கிறது. இதை மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு என்று கொடுக்கப்பட்டிருக்கிற புள்ளி விவரத்தைப் பார்த்தால் நன்ருகத் தெரியவரும்.

(Sri K. Sattanatha Karayalar in the Chair.)

திரு. லோகநாதன் தன்னுடைய அறிக்கையை இப்பொழுது தான் தாக்கல் செய்திருக்கிருர்; அந்த அறிக்கையில், ரூ. 2,100 கோடி இருந்தால்தான், பிற மாநிலங்களில் தனி நபர் வருவாய் எந்த அளவுக்கு உயர்ந்திருக்கிறதோ அந்த அளவுக்கு நாம் முன்னேற முடியும் என்று சொல்லியிருக்கிருர். ஆனுல், மூன்ருவது திட்டம் சம்பந்தமாகவுள்ள புத்தகத்தில், சுமார் 45 கோடி ரூபாய்க்கு 14 தொழில்கள் பொதுத் துறையில் ஆரம்பிப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. சில திட்டங்கள் பொதுத் துறையில் போடப்பட்டிருப்பதாகவும் சில திட்டங்கள் போடப்போவதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது; அப்படித் திட்டம் போட்டு பெரிய கைத்தொழிற் சாலைகளை ஆரம்பிக்கப்போகிருேம் என்று சொல்லியிருக்கிருர்கள். அந்த அளவில், மூன்ருவது திட்ட காலத்தில், பெரிய அளவில் இந்த மாநிலத்தில் பெரிய கைத்தொழில்கள் ஆரம்பிக்கப்படும் என்று எதிர்பார்த்தோம்.

ஆனுல், வரவு-செலவுத்திட்டம் சம்பந்தமாகக் கொடுக்கப்பட்ட புத்தகத்தில், மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு ரூ. 335 இலட்சம் ரூபாய் செலவிடப்போவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதில், 1961-62-ம் ஆண்டில் ஒன்பது இலட்சம் ரூபாய் செலவிடப் போவதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த அளவில்தான் பெரிய கைத்தொழில்களுக்குச் செலவிடப் போவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுல், திரு. லோகநாதன் குழுவின் அறிக்கையில், 2,100 கோடி ரூபாய் இருந்தால்தான், தனிநபர் வருவாய் இந்த மாநிலத்தில் உயரும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுல் அமைச்சர் ரூ. 45 கோடி அளவில் சில திட்டங்கள் போடப்பட்டிருக்கின்றன; சில திட்டங்கள் இன்னும் போடவில்லை; இன்னும் அதிகப்படியான திட்டங்கள் போடுவதற்கு இடம் இருக்கிறது என்று சொல்லியிருக்கிருர்.

அந்த அளவில், மூன்ருவது திட்ட காலத்தில் ரூ. 335 இலட்சம்தான் பெரிய கைத்தொழில் சம்பந்தமாக செலவிடப்போகிருேம் என்று சொல்லுவது எப்படி இருக்கிறது என்ருல், உண்மையிலேயே யானையைக் காண்பித்த பிறகு பூனையைக் காண்பித்தது போல் இருக்கிறது.

சமீபத்தில் தேசீய அபிவிருத்திக் குழுக் கூட்டமும், திட்டக் குழுக் கூட்டமும் நடந்தது. அங்கு சென்ற இந்த மாநில அமைச்சர்கள் என்ன பேசினர்—என்ன ஆலோசனைகளைத் தந்தனர்? நம்முடைய மாநிலம் மிகவும் பிற்போக்காக இருக்கிறதே—அதற்காக அதிகப்பணம் ஒதுக்க வேண்டும் என்று கேட்டார்களா என்பது தெரியவில்லை.

இந்த மன்றத்தில் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் இருக்கிருர்கள்; அவர்கள், 'வடநாடு வாழ்கிறது--தென்னுடு தேய்கிறது' என்று சொல்லி வருகிருர்களே; அப்படி, அங்கு சென்ற அமைச்சர்களும் சொன்னுல் ஒருக்கால் திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் சொல்வது போன்று இவர்களும் சொல்லுகிருர்கள் என்று கருதி, தங்களைக் கேலி செய்வார்கள் என்று அங்கே சொல்லாமல் விட்டுவிடுவார்களா என்பதும் தெரியவில்லை. கனம் அமைச்சர்கள் இங்கே வேண்டுமானுல் பேசாமல் இருக்கலாம்; திட்டக் குழுக்கூட்டத்திற்கு சென்று அப்படிப் பேசினுல் வேடிக்கை செய்வார்கள் என்று பேசாமல் இருக்க வேண்டியதில்லை.

எந்த அளவு நமது மாநிலம் பின்தங்கி இருக்கிறது? எந்த அளவுக்கு நமக்குப் பணம் வேண்டும் என்று கேட்டிருக்கிருர்கள்? ஏன் அதிகப்படியாகக் கேட்டு பணத்தைப் பெற முடியவில்லை? அப்படி உண்மையிலேயே நமது மாநிலத்தின் பிற்போக்குநிலையை எடுத்துக்காட்டி பணத்தைப் பெற முடியவில்லை என்று சொன்னுல் அது உண்மையிலேயே மிகமிக வருந்தத்தக்கதாகும்.

நம் மாநிலம் மிகப் பின்தங்கியதாக இருக்கிறது என்று மத்திய சர்க்காரிடம் சொல்லி ஏன் அதிகப்படியான பணத்தை வாங்கி வரவில்லை? வெள்ளைக்காரன் இருந்தது முதற்கொண்டே இந்த நாடு, மிகப் பின் தங்கியதாகவே இருந்துவருகிறது. திட்டம் போட்டு, பிற மாநிலங்கள் முன்னேறிய அளவிற்காவது நம்முடைய மாநிலம் முன்னேறியிருக்கிறதா என்று பார்க்க வேண்டாமா? மற்ற மாநிலத்தின் தனிநபர் வருவாயையும், நமது மாநிலத்தின் தனி நபர் வருவாயையும் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டாமா? தனி நபர் வருமானம் இங்கு எவ்வளவோ அளவு குறைந்திருக்கிறது. அதை எடுத்துச் சொல்லியிருக்க வேண்டும். மற்ற மாநிலங்களில் வரக்கூடிய வருமானத்தைக் காட்டிலும், நமது மாகாணத்தில் வரும் வருமானம் மிகவும் குறைவாகத்தான் இருக்கிறது என்பதை உண்மையிலேயே அமைச்சர் அவர்களே ஒத்துக் கொள்ளுவார். அதையும் லோகநாதன் குழு அறிக்கை நன்ருக விளக்குகிறது. இவர்கள் எவ்வளவு பணம் கேட்டார்கள் அவர்

10th March 1961] [Sri S. M. Annamalai]

கள் எவ்வளவு கொடுத்தார்கள்? என்ன காரணத்திற்காகக் குறைத்தார்கள்? என்பதையெல்லாம் இந்தச் சட்டமன்றத்தில் விளக்க வேண்டும்.

ஆண்டுக்கு ஆண்டு கைத்தொழில் துறைக்கு ஒதுக்கிய பணம் போதிய அளவு செலவிடப்படவில்லை; அதாவது, 1960-61-ம் ஆண்டின் பட்ஜெட் திட்டம் ரூ. 331 இலட்சம்; திருத்தப்பட்ட திட்டம் ரூ. 152 இலட்சம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது ஏன் போதிய அளவுக்கு . . .

THE HON. SRI R. VENKATARAMAN: கனம் அங்கத்தினர் 'பட்ஜெட்'டைப் பற்றிப்பேசும்போது, அதற்குக் கொடுக்கப்பட்டிருக்கிற விளக்கத்தையும் சேர்த்துப் படிக்க வேண்டும். அதை விளக்குவதற்குத்தான் 'மெமோராண்டம்', கொடுக்கப்பட்டிருக்கிறது. காதி போர்டு தனியாகப் போன காரணத்தால், கதருக்கு செலவு செய்யவேண்டியது போர்டுக்குப் போய்விட்டது; சர்க்கார் துறையில் இல்லை.

SRI S. M. ANNAMALAI: அதையும் படித்துப் பார்த்தேன். இருந்தபோதிலும், சர்க்கார் வேண்டிய அளவு செலவு செய்யவில்லை என்றுதான் கூற வேண்டியதாக இருக்கிறது.

அதைப்போலவே அரசினர் உதவிபெறும் தொழில்களுக்கு ஆண்டுக்கு ஆண்டு ஒதுக்கப்பட்ட பணம் எந்த அளவுக்குச் செலவு செய்யப்பட வேண்டுமோ அந்த அளவு செலவு செய்யப்படவில்லை. எல்லா வகையிலும் பல இலட்சம் ரூபாய் மீதப்பட்டிருக்கிறது. 1956-57, 1957-58, 1958-59, 1959-60, 1960-61-ம் ஆண்டுகளுக்கு கணக்குகள் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்தந்த ஆண்டுகளுக்கு செலவு செய்யப்படவேண்டும் என்று பணம் ஒதுக்கியதில், பல இலட்சக்கணக்கான ரூபாய் செலவிடப்படாமலேயே மீதம் ஏற்பட்டிருக்கிறது; ஏன் அப்படி செலவு செய்யப்படவில்லை?

அதைப்போலவே 'ஜியலாஜிகல் சர்வே'; நமது மாநிலத்தில் ஐந்தில் ஒரு பங்குதான் 'சர்வே' செய்யப்பட்டிருக்கிறது. மத்திய அரசால் நியமிக்கப்பட்ட குழு ஏன் மாநிலம் முழுமையும் 'சர்வே' செய்யக்கூடாது. நமது மாநிலத்தில் அப்படி ஒரு குழு நியமித்து 'சர்வே' செய்யச் சொன்னால், அதை மத்திய சர்க்காரில் ஒத்துக் கொள்ளுவார்களா? அவர்கள் எந்தெந்த இடங்களில் தொழிற்சாலைகளை ஆரம்பிக்கலாம் என்று சொன்னால், மத்திய சர்க்கார் உண்மையிலேயே அதை ஒத்துக்கொள்ளுவார்களா? அப்படி இதுவரையிலும் ஏதாவது ஒத்துக்கொண்டிருக்கிறார்களா என்று பார்த்தால் உண்மையில், 'இல்லை' என்று திட்டவட்டமாகச் சொல்ல முடியும். 1956-ம் ஆண்டில், இங்குவந்த ரஷ்ய நிபுணர்கள், காவேரி ஆற்றின் படுகையில் எண்ணெய் இருக்கிறது; இங்கே 'ஆயில் ரிபைனரி' ஏற்படுத்தலாம் என்று சொன்னார்கள். ஆனால் இப்போதுதான் நாலாயிரம் சதுரமைல் அளவுக்கு நாம் 'சர்வே' செய்து பார்த்திருக்கிறோம். இன்னும் பாக்கி எப்போது முடியும் என்று சொல்ல முடியாது. இப்படித்தான் மத்திய சர்க்கார்

நம்மைப் புறக்கணிக்கிறார்கள். திராவிட முன்னேற்றக் கட்சியினர், 'காவேரிப்படுகையில் எண்ணெய் இருக்கிறது', என்று சொன்ன போது, 'ஓ, இவர்கள் தண்ணீரைப் பார்த்துவிட்டு எண்ணெய் என்கிறார்கள்', என்று கேலி செய்தார்கள்! ஆனால் இப்போது நிபுணர்கள், அங்கே எண்ணெய் இருக்கிறது என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். . . .

THE HON. SRI R. VENKATARAMAN: யாரும், 'எண்ணெய் இருக்கிறது' என்று சொல்லவில்லை; 'எண்ணெய் இருக்கலாம்' என்றுதான் சொன்னார்கள்.

SRI S. M. ANNAMALAI: நாங்கள், 'இருக்கிறது' என்று சொன்னோம்.

THE HON. SRI R. VENKATARAMAN: நிபுணர்கள், 'இருக்கலாம்', என்று சொன்னார்கள்; ஆனால் திராவிடக் கட்சியைச் சேர்ந்த நிபுணர்கள், 'இருக்கிறது', என்கிறார்கள்.

SRI S. M. ANNAMALAI: நிச்சயமாக இதன் உண்மை போகப் போகத் தெரியும். அன்றையதினம் எங்களைப் பார்த்து, 'தண்ணீரைக்கொண்டு எண்ணெய் என்கிறார்களே', என்று கேலி செய்தார்கள். அப்படி இனியும் பரிகாசம் செய்யாது, மேற்கொண்டும் பரிசீலனையை துரிதமாக நடைபெறச் செய்து, அங்கே 'ஆயில் ரிபைனரி', ஏற்படுத்தவேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்.

கிராமப்புற மக்கள் நகர்ப்புறங்களுக்கு ஏராளமாக வருகிறார்கள்; அதனால் தொழில் வளர்ச்சி அதிகம் ஏற்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. கிராமப்புறங்களிலிருந்து நகர்ப்புறங்களுக்கு வந்து பிச்சை வாங்கினால் தொழில் வளர்ந்துவிட்டதா? வளர்ந்துவிடுமா? மதுரை நகரைப் பொறுத்த வரையில், இந்த வகையில் 17 சத விகிதம் மக்கள் தொகை அதிகப்பட்டிருக்கிறது என்று சொல்கிறார்கள். இப்படி, கிராமப்புறங்களிலிருந்து நகர்ப்புறங்களுக்கு வந்துவிட்டால், கிராம விவசாயம் பாதிக்கப்படுகிறது. விவசாயத்திற்கு ஆட்கள் தேவை. ஆகவே, கிராமத்தில் உள்ளவர்கள் அங்கேயே தங்கி விவசாயத்தொழிலில் ஈடுபடவும், விவசாய வேலை இல்லாத காலத்தில் இதர உபதொழில்களில் ஈடுபடவும், கிராமப்புறங்களிலேயே பல உபதொழில்கள் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் கேட்டுக்கொள்கிறேன்.

போலீசு இலாகா அறிக்கையில், வாழ்க்கைச் செலவு அதிகமாகிக்கொண்டு வருவதால்தான் குற்றங்கள் அதிகமாகின்றன என்று குறிப்பிட்டிருப்பதைச் சுட்டிக்காட்டினேன். நாட்டில் நாளுக்குநாள் வறுமை பெருகாமல் இருப்பதற்கு ஆங்காங்கு சிறு சிறு கைத்தொழில்களை ஏற்படுத்தவேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்.

சிறு கைத்தொழில்களுக்கு 4 மாவட்டங்களில் மட்டும் 'சர்வே' செய்யப்பட்டிருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எல்லா மாவட்டங்களிலும் 'சர்வே' செய்யவேண்டும்.

10th March 1961] [Sri S. M. Annamalai]

விவசாயத் தொழிலாளர்களுடைய தனிநபர் வருமானம் குறைந்திருக்கிறது. 1951-ல் 104-ஆக இருந்தது. முதல் ஐந்தாண்டுத் திட்டம் முடிந்து, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவுற்று மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பமாகக்கூடிய நிலையில் இருக்கிறேம், ஆயிரக்கணக்கான ரூபாய்களை செலவு செய்திருக்கிறேம். விவசாயப் பொருள்களின் விலையும் ஏகமாக உயர்ந்திருக்கிறது; இருந்தும் இன்றையதினம் விவசாயத் தொழிலாளர்களுடைய தனி நபர் வருமானம் 99 ரூபாயாகக் குறைந்து விட்டது. உண்மையில் இதுதான் சமதர்ம சர்காரின் ஆட்சியா? சமதர்மம் பேசுகின்ற இந்தக் காலத்தில் யார் கையில் பணம் குவிந்துகொண்டிருக்கிறது என்று பார்க்கவேண்டும்.

SRI R. SRINIVASA IYER: On a point of order, Sir. சபா நாயகர் மூலமாக அவர் பேசுகின்ருரா? அல்லது மந்திரிக்கு நேரிடையாகச் சொல்கிருரா? . . . .

Temporary Chairman (Sri K. Sattanatha Karayalar): The hon. Member may continue.

SRI S. M. ANNAMALAI: விவசாயத் தொழிலாளர்களுடைய நிலைமை உயரவேண்டுமானல் கிராமப்புறங்களில் அநேகவிதமான துணைத் தொழில்கள் வளரவேண்டும் என்று இந்தச் சந்தர்ப்பத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யவேண்டும்.

உண்மையில் நம் மாநிலத்தில், 'கோச் பாக்டரி'யைத் தவிர, வேறு பெரிய தொழிற்சாலைகள் எதுவும் கிடையாது. 'சேலம், சேலம்', என்று சொல்கிறேம்; அது செல்லுமோ என்னவோ? பொதுவாக கனரகத் தொழில்கள் ஏற்படவேண்டுமென்ருல் இங்கே மூலப்பொருள்கள் கிடையாது என்று சொல்லலாம். கனரக மின்சாரத் தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு வேண்டிய வசதிகளும், வாய்ப்புகளும் இந்த மாநிலத்தில் இருக்கின்றன. இராணிப்பேட்டை, அரக்கோணம், திருச்சி ஆகிய இடங்களை இதற்காக பரிசீலனை செய்து பார்த்தது எனக்குத் தெரியும். மின்சாரத் துறையில் அதிகம் வளர்ச்சி அடைந்து வருகிறேம் என்று சொல்லப்படுகிற நம் மாநிலத்தில் ஏன் உடனடியாக கனரக மின்சாரத் தொழிற்சாலையை ஏற்படுத்தக் கூடாது என்று பரிசீலனை செய்ய வேண்டும்.

திருவண்ணுமலையில் சர்க்கரை ஆலை ஏற்படப்போவதாகச் சொல்லப்பட்டது. ஆனல் இப்போது திட்டவட்டமாக திருவண்ணுமலைக்கு கிடையாது என்று உத்திரவிட்டிருப்பதாக அறிகிறேன். மிகவும் பின்தங்கியிருக்கக்கூடியது வடாற்காடு மாவட்டம். காட்பாடி, ஆம்பூர் இந்த இரண்டைத் தவிர வேறு ஊரில் தொழில் ஏற்படுத்தப்பட்ட இடம் கிடையாது. திருவண்ணுமலையில் சர்க்கரை ஆலையோடு வந்தவாசியில் நூற்பு ஆலையும் தேவை என்று கேட்டிருக்கிருர்கள். அதையும் ஏற்படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

[10th March 1961

* Sri T. T. DANIEL : Mr. Chairman, Sir, while supporting this demand, I would like to place some facts before the Government. So far as our State is concerned we have really progressed considerably well so far as agriculture and industry are concerned. The progress that we have shown in these two spheres of our activities are really very stupendous and really very great. We must also concede that in spite of our progress in these two fields, there is really very keen unemployment and under-employment in our State. It will not be possible for us, however much we may progress in agriculture side alone, to solve our problems and also to increase the per capita income of the common man. This problem, I think can be solved only by a rapid industrial development in our State. Our Government have also taken note of it and they are trying their level best for the past ten years to improve the industrial development in all sides. As a first step they have taken up the Techno Economic Survey as a result of which they have started some major industries in the State. Attention is also paid by the Government to the improvement of small-scale industries and also village industries. Mention has to be made about the major industry for which our Government have allotted nearly Rs. 22 crores, viz., the Neiveli Lignite Project. It is proposed that about 3½ million tons of lignite would be mined every year from this Project and about 1·4 million tons of good coal is the target of production per year. The Company that is now working in Coimbatore has set up the Pig Iron Plant and is manufacturing 15,000 tons of pig iron every year. It is also gratifying to note that the Government have granted two more licences to private persons to start two more Pig Iron Plants.

10-30 a.m.

We also see that it is proposed to start a Steel Rolling Mill. By that industry, it is proposed to produce 20,000 tons of rolled materials. It is also suggested that our Government have decided to start a Rayon Factory and also a Surgical Instruments Factory in Madras and in that Factory about 2,000 persons will be employed and 2 million surgical instruments will be produced.

In the matter of development of small-scale industries, the Government have also paid proper attention and they have allowed considerable sums under the Second Plan. A sum of Rs. 8 crores is allotted for the small-scale industries; Rs. 3·2 crores is apportioned for Industrial Estates and about Rs. 60 lakhs for the development of handicrafts. For Co-operative Societies, nearly a sum of Rs. 11·8 lakhs has been allotted. We are also glad to hear that Fertilizer industries will also be started and one ammonium sulphate industry will also be started very shortly. This is a glorious picture that we have when we study the report that has been placed before us by the Government.

I would like to say that Coimbatore and Madras can at present form two dynamic centres which will open new avenues of industrial development in our State and will also form the basis of starting some more Chemical Industries. In this connection, it must be noted that the power that we now produce will not be sufficient

10th March 1961] [Sri T. T. Daniel]

to meet our requirements even during the Third Five-Year Plan period. It is also stated then even if the Neiveli Project is completed, we will not be able to get enough power-supply which may be necessary for our industries even for ten years. This possibility of increasing the electric power-supply in our State should be explored. I would suggest that we might form a Southern Zonal Council consisting of all the Southern States of Madras, Andhra and Kerala for the purpose of devising ways and means for increasing electric power-supply so that we may be able to progress industrially in a much more rapid manner than what we have hitherto been able to do. I would also suggest that we must explore the possibility of generating atomic energy in our State. For this purpose a thorough geological survey is necessary to find out the existence of the raw materials which will generate atomic energy. We are living in an atomic world and our industrial development will be rapid if we are able to discover some source by which we will be in a position to generate atomic energy in our State. It is said that thorium is available in some parts of our State. Thorium is one of the most important raw materials which is necessary for generating atomic energy. If a proper and intensive geological survey is conducted, we will be able to know what all minerals we have in our State. There is good scope for expansion of the Mineral Industry in our State. We can increase the possibilities of starting mica industries in several parts in our State. I believe that there is very good scope for starting a Mica Industry in the Kanyakumari district. While Kanyakumari district was in the Travancore-Cochin State, the erstwhile Travancore-Cochin State conducted a geological survey and I understand the report of that survey reveals that Kanyakumari district contains plenty of very valuable minerals. I would suggest that our Government should again conduct a geological survey of the entire district for the purpose of finding out the mineral resources available in that district.

So far as the rubber industry is concerned, I would suggest that we should focus some more attention on the expansion of the rubber plantations. We are deficit so far as rubber is concerned and even for our internal use we need more and more rubber. It is commendable that our Government have allotted nearly 3,000 acres for rubber plantation which they intend to cultivate during the course of the Third Plan. I would suggest that it would be proper to make this programme a little bigger so that at least 15,000 acres of land may be brought under rubber cultivation during the course of the Third Plan. Rubber experts who have conducted a survey of the possibilities of rubber cultivation in our State have already announced that the Kanyakumari district soil is best suited for rubber cultivation. If extensive rubber cultivation is undertaken in that district, I think we can have a very good rubber factory in that district.

The Travancore Minerals Company produce moncsite. I would request the Government to explore the possibilities of starting a Titanium Factory at Manavalakurichi in the Cape district, and also to start a Paper Factory, a Spinning Mill and other

factories there. So far as that district is concerned, I may point out that both economically and industrially, it is very backward because for a century or so, it had been uncared for by several Rulers. The Government must come forward to undertake schemes for the rapid economic and industrial development of that district. It has to be industrially developed and that too quickly. I would request our Government to keep all these points in their view. In order that there may be greater industrial awakening in that district, there must be a railway link between Tirunelveli and Cape Comorin.

Although this extension of railway line is given only second priority, I would suggest that our Government should press before the Planning Commission for the inclusion of this extension of the railway line from Tirunelveli to Cape on the ground that it is quite necessary for the industrial development of that district. I hope that this will be included in the Third Five-Year Plan.

Without communications, it will not be possible to have any development on the industrial side in the modern world. So, if the Government are earnest, they must also develop the Colachel harbour. Much of the materials that are being exported from that district are now brought to Tirunelveli or Cochin in lorries. So much so the cost of expenditure in transport affects producers much whenever they offer these articles in the open market.

There is good scope also for the development of the palmyrah fibre industry in our State. Instead of exporting palmyrah fibre as such to foreign countries, we should try to make use of these articles by producing the necessary goods that we need for our own use. At present there seems to be some sort of dullness in the palmyrah fibre industry because of the competition that our producers have in the open foreign markets especially from Mexican and South African producers. The synthetic palmyrah fibre produced by them is produced at a cheaper rate than our palmyrah fibre and so much so it has begun to affect our exports also.

I would also suggest that the policy of the Government must be to have at least one spinning mill in each district and also they must increase the number of sugarcane factories.

Recently a Division has been opened to explore the possibility of generating electric power from the waters of the Pechipara Dam and we understand that it has been suggested that annually one lakh kilowatts of power could be produced from those waters. There fore, I would request the Government to start a hydro-electric station at Pechipara which will increase our electric supply.

So far as village industries are concerned, I would suggest that some more attention should be paid to the manufacture of Ambar charkas. At present we are not getting enough number of Ambar charkas. As it is, it is only the cottage industry which can help the trainees to get an average income of at least one rupee per day. So, I request the Hon. Minister to start centres in several parts of the State for the manufacture of Ambar charkas.

10th March 1961]

SRI V. SUBBIAH : கனம் தாற்காலிக தலைவர் அவர்களே, இந்த மான்யத்தின் பேரிலுள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து நான் ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். குறிப்பாக, இந்த மான்யத்தின்மீது பேசுகையில் இந்த வெட்டுப்பிரேரணையை ஏன் ஆதரிக்கிறேன் என்றால் தொழில் துறை இன்று இரண்டு பிரிவுகளாக பிரிக்கப்பட்டுவிட்டன. இந்நாட்டில் தொழில் முறைகள், அரசாங்கக் கொள்கைப்படி குவியல் முறையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. காந்தி அடிகள் அன்று சொன்னார்கள், இந்த நாட்டில் இயந்திரச் சக்தியால் ஏற்படக்கூடிய அல்லது இயங்கக்கூடிய உற்பத்திகள் எல்லாம் பரவல் முறையில் இருக்க வேண்டுமென்று அவர்கள் விரும்பினார்கள். ஆனால் இன்றைய பொருளாதார அமைப்பை எடுத்து சிந்தித்துப் பார்த்தால் கிராம, நகர பொருளாதார அமைப்பு பெரிய இயந்திரங்களால் ஏற்படக் கூடிய அமைப்புகளின் வித்தியாசம்தான். இன்றைக்கு, கிராமப் பொருளாதார அமைப்பையும், நகரப் பொருளாதார அமைப்பை யும் எடுத்துப் பார்த்தால், மலைக்கும் மடுவிற்கும் உள்ள வித்தியாசம் இருக்கிறது. கிராமங்களிலிருந்து மக்கள் குவியலாக நகரப் புறங்களுக்கு போய்க்கொண்டிருப்பதற்குக் காரணம், இன்றைய அமைப்பு முறைதான். இதுபற்றிய விஷயத்தில் இன்று பொருளா தார நிபுணர்கள்கூட, யோசிக்கக்கூடிய நிலையில் இருக்கிறார்கள். நமது நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள், நகரங்களுக்கு வேண்டுமானால் குடியேறட்டும் அதுதான் நல்லமுறை என்று அவர்கள் சொன்னார்கள். நன்கு ஊன்றிக் கவனித்துப் பார்ப் போமேயானால், இதனால் விவசாய உற்பத்தி எதிர்காலத்தில் மிகவும் குறைந்து போய் விடுமென்று சொல்ல முடியும். அந்த அளவில் இன்று கிராமங்கள் அழிக்கப்பட்டுவருகின்றன. தொழில் துறை யில், அது பரவல் முறையில் இயங்காததினால்தான் கிராமங்கள் அழிந்துபோய்க்கொண்டிருக்கிறது. இன்றைய அமைப்புதான் விலைவாசி ஏற்றத்திற்கு காரணம். நகரங்களில்தான் பலகோடி ரூபாய்கள் செலவிட்டு தொழில்கள், இயந்திரத் தொழில்கள் அமைக்கப்படுகிறதே தவிர, நகர எல்லையை விட்டு நகர்ந்து எங்கே யாவது ஒரு தொழில் பேட்டை, இன்டஸ்ட்ரியல் எஸ்டேட் இருக் கிறது என்று அமைச்சர் அவர்களால் சொல்ல முடியுமா? இன்றையதினம் கிராமங்களை எடுத்துப் பார்ப்போமேயானால் மழையில் நனைந்து தேக உழைப்பு கொண்டு வேலை செய்பவர் களுக்கு கிடைக்கக்கூடிய கூலி 12 அணா. ஆனால் குளிர்ந்த காற்றில் தேக உழைப்பு அவ்வளவாக இல்லாது எட்டு மணி நேரம் வேலை செய்யும் நகரப்புறத்திலுள்ள தொழிலாளர்களுக்கு நாள் ஒன்றுக்கு 4 ரூபாய் கிடைக்கிறதென்றால் மக்கள் எதை விரும்புவார்கள் என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும். அந்தளவு இன்றைய பொருளாதார அமைப்பு மாற்றியமைக்கப்பட்டு விட்டது. ஆகவே அதன் பயனாக இந்த நாட்டின் ஜீவாதாரமாக இருக்கக்கூடிய 80 சதவிகிதம் கிராம மக்கள் கிராமங்களை விட்டு நகரங்களுக்கு குடியேறும் நிலை ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலை மாற்றியமைக்கப்படவேண்டும். அதற்காக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஏதாவது வகை செய்யப்பட்டிருக் கிறதா என்றால் இல்லை. விவசாயத்திற்கு அடுத்தபடியாக

நம் ராஜ்யத்தில் இன்று இருக்கக்கூடிய பெரிய தொழில் கைத்தறித் தொழில். பவர் லூம்ஸ் வரப்போகிறது. ஆகவே, கைத்தறித் தொழிலின் எதிர்காலம் எப்படியிருக்கும் என்பதைப்பற்றி நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இன்றே கைத்தறித் துணி ஏற்றுமதி யற்ற நிலையில் தேங்கிக் கிடக்கிறது. ஆகவே, பவர் லூம்ஸ் வந்து விட்டால், இதில் உற்பத்தியாகக்கூடிய ஜவுளி எவ்வளவு தேங்கும்? அவைகளை விலைக்கு வாங்கி வைக்க சர்க்காருக்கு சக்தியிருக் கிறதா? அதற்காக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப் பட்டுள்ள பணம் எவ்வளவு? இதை அரசாங்கம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். இந்தளவில்தான் திட்டங்கள் அமைக்கப்பட் டிருக்கின்றன. உதாரணமாக எங்கள் பகுதியில் இரண்டு சிமெண்ட் மில்ஸ் ஓடுகிறது. தாழையுத்து, மதுரை சிமெண்ட்ஸ். பின், டால்மியா சிமெண்ட்ஸ் இருக்கிறது, மதுக்கரையிலும் ஒன்று இருக்கிறது. இவைகளில் இன்று மூன்று ஷிப்ட்கள் ஓடுகின்றன. ஆக, நான்கு மில்ஸ் இருந்தும்கூட, ஆயிரக்கணக்கான டன்கள் உற்பத்தி செய்யும் காலத்திலும்கூட நிலைமை எப்படியிருக்கிறது? நம் ராஜ்யத்தில் சிமெண்ட் இல்லாத காலத்தில் வெளியிலிருந்து இறக்கு மதி செய்யக்கூடிய காலத்தில் ஒரு மூட்டை 10 அணாவிற்கு கிடைத்துக் கொண்டிருந்தது. ஆனால் இன்று இங்கு நான்கு மில்ஸ் ஓடியும்கூட, எவ்வளவோ உற்பத்தியாகியும்கூட, ஒரு மூட்டை 10 ரூபாய்க்குக்கூட கிடைப்பதில்லை என்ற நிலைதான் இருக்கிறது. அதோடு தரத்திலும் வெளிநாட்டு சிமெண்டின் தரத்தைவிட குறைந்த தரத்தில்தான் இருக்கிறது.

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்களுக்கு ஒன்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். பி.பி. ஸ்டான்டேர்டைவிட நமது சிமெண்ட் நல்ல, உயர்ந்த ரகம்.

SRI V. SUBBIAH : அமைச்சர் அவர்கள் நல்ல திறமை யுள்ளவர்கள், நல்ல அனுபவமும் உள்ளவர்கள். ஆகவே அவர்கள் சொல்வதை ஏற்றுக்கொள்கிறேன். இருப்பினும் உற்பத்தி பெருகி யும்கூட . . . . .

THE HON. SRI R. VENKATARAMAN : தரம் நன்றாக இல்லை என்று சொன்ன ஒன்றை மட்டும்தான் எதிர்த்துச் சொன்னேன்.

SRI V. SUBBIAH : அதை நாம் எல்லாத் துறைகளிலும் பார்க்கிறோம். விவசாயத் துறையிலே இன்றைக்கு யந்திரத்தை வைத்து, யந்திர முறையில் மாற்றி அமைக்கலாம் என்று சொன்னால் அதை வரவேற்கலாம். ஆனால் அது அவ்வளவு பொருத்தமாக இருக்க முடியாது. இந்த நாட்டிலே இன்றைய தினம் நடுத்தர விவசாயிகள்தான் ஜாஸ்தியாக இருக்கிறார்கள். இருக்கக்கூடிய பணக்காரர்களெல்லாம் நகரங்களுக்குச் சென்று வேறு தொழில்களில் இறங்கிவிட்டார்கள். விவசாயக் கூலிகளும் நகரங்களுக்கு வந்துவிட்டார்கள். மிச்சம் இருக்கக்கூடியவர்கள் 10 எக்கர், 5 எக்கர் வைத்திருக்கக்கூடிய நடுத்தர விவசாயிகள் தான். அவர்கள்தான் இன்றையதினம் கிராமங்களில் வாழ் கிறார்கள். அவர்கள் எப்படி யந்திரத்தை உபயோகிக்க முடியும்? இந்தப் பிரச்னைகளெல்லாம் இருக்கின்றன. ஸ்மால் ஸ்கேல்

10th March 1961] [Sri V. Subbiah]

இண்டஸ்ட்ரீஸிலே எத்தனையோ தொழில்கள், மாட்ச் பாக்டரி போன்றவைகள் கிராமாந்திரங்களை நம்பி கிராம ஜனங்களுக்கு தொழில் வசதி கொடுக்கக்கூடிய தொழில்கள் விவசாயிகளை அழிக்கக்கூடிய அளவில் அமைந்திருக்கின்றன என்று சொல்லாமல் இருக்க முடியவில்லை. கூட்டுறவு முறையில் தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறதே அந்தத் தொழில்களின் நிர்வாகத்தைப் பற்றி எடுத்துக்கொண்டால் அதிலே பல குறைகள் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். குறிப்பாக தமிழ்நாடு சிறபக்கலை இண்டஸ்ட்ரீஸ் என்று வைத்திருக்கிறார்கள். அதனுடைய நிலைமையைப் பற்றிக் கேள்விப்படும்போது அது இயங்கவே இல்லை என்று சொல்லுகிறார்கள். அதில் யாரையோ ஒருவரை—தொழில் தெரியாதவரை—நியமித்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். அதனால்தான் அது நல்ல முறையில் இயங்கவில்லை என்று சொல்லுகிறார்கள். தொழில் துறைக்கு நிதி கார்ப்பொரேஷனிலிருந்து கொடுப்பதிலும் அரசாங்கம் கொடுப்பதிலும் நல்ல முறையில் குறைந்த வட்டியில், செயல்படும் முறையில், போதிய அளவு கொடுக்கப்படவில்லை என்று கூறப்படுகிறது. தனியார் துறையில் இருந்தாலும், அல்லது ஏனைய துறையில் இருந்தாலும் தொழில்களுக்கு வேண்டிய எல்லா வசதிகளையும் செய்து கொடுக்கவேண்டும். பலர் கையில் இருந்த அவ்வளவு பணத்தையும் தொழிலில் முடக்கிவிட்டு வெளி நாட்டிலிருந்து மூலப்பொருள் வரவில்லை, அதனால் பாதிக்கப்பட்டிருக்கிறது என்ற நிலை இருக்கிறது. இம்போர்ட் செய்துதான் அவர்களுக்கு சாமான்கள் வரவேண்டுமென்றால் அதற்கு வேண்டிய அவ்வளவு சலுகைகளையும் தாராளமாக சர்க்கார் கொடுக்கவேண்டும். அது மட்டுமல்லாமல் ஒரு தொழிலை எந்த இடத்தில் ஸ்தாபித்தால் நல்ல முறையில் செயல்படும் என்று யோசித்துச் செய்யவேண்டும். விருதுநகரில் அமைக்கப்பட்ட தொழில் பேட்டையில் இதுவரையில் யாரும் அதை எடுக்காமல் இருந்தார்கள்—ஆனால் இப்போது எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. அந்த மாதிரி இல்லாமல் பார்த்துக்கொள்ளவேண்டும்.

எங்கள் ஜில்லாவிலே—திருநெல்வேலியிலே—பல ஆண்டுகளுக்கு முன்னர், வெள்ளையர்கள் இருந்த காலத்திலேயே பாபநாசம் என்ற இடத்தில் ஒரு பேப்பர் மில் ஆரம்பிக்கவேண்டும் என்று ஒரு திட்டம் இருந்தது. அதெல்லாம் இப்போது கைவிடப்பட்டுவிட்டது. நமது நாட்டிலே பெங்கால் கெமிகல் வொர்க்ஸ், அடையார் கெமிகல் வொர்க்ஸ் போன்ற ஸ்தாபனங்கள் செய்யக்கூடிய உயர்ந்த ரக மருந்துகளை, 5 ரூபாய்க்கு வாங்கக்கூடிய மருந்தை 5 காசுக்கு வாங்க முடியும். பொதிகை மலையில் கிடைக்கும் மூலிகையைக்கொண்டு மருந்துகளைத் தயாரிக்கும் ஸ்தாபனம் ஒன்று குத்தாலத்திலோ அல்லது வேறு இடத்திலோ இருக்கவேண்டும். யந்திரத்தினாலும் சரி, அல்லது ஏனைய மனித சக்தியினாலானாலும் சரி இந்தத் தொழிலை எங்கள் ஜில்லாவில் அமைக்கவேண்டுமென்று அரசாங்கத்தையும், அமைச்சரையும் கேட்டுக்கொண்டு, மானியத்தின்மீது கொண்டுவரப்பட்டுள்ள வெட்டுப் பிரேரணையை ஆதரித்து எனது உரையை முடித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMI: கனம் தலைவர் அவர்களே, அமைச்சர் அவர்கள் தொழில் சம்பந்தமாகக் கொடுத்திருக்கின்ற

[Sri A. Govindasami] [10th March 1961

விளக்க உரையைத் துருவிப் படிக்கிற நேரத்தில் என்னுடைய மாவட்டத்திலே இருக்கக்கூடிய நெய்வேலியைப் பற்றித்தான் முதல் முதலாக அமைச்சர் அவர்கள் கூறியிருக்கிறார்கள். நெய்வேலித் திட்டம் சர்க்கார் திட்டம் என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. சர்க்கார் திட்டம் என்று ஏன் அவர்கள் ரூசகமாகச் சொல்லவேண்டும், மத்திய அரசாங்கத்தின் திட்டம் என்று வன் வெளிப்படையாகச் சொல்லவில்லை என்று அமைச்சர் அவர்களைக் கேட்க விரும்புகிறேன். இது நம்முடைய ராஜ்ய திட்டமாக மாற வேண்டுமென்று கடந்த பல வருஷங்களாகவே இங்கே நான் குறிப்பிட்டு வந்திருக்கிறேன். ஒவ்வொரு ஆண்டும் தொழில் மான்யக் கோரிக்கை வரும்போது எடுத்துக் கூறியிருக்கிறேன். அதற்காக 86 கோடி ரூபாய் செலவு செய்யப்போகிறார்கள். அந்த 86 கோடி ரூபாயை மத்திய அரசாங்கம் செலவு செய்து 75 சதவிகிதம் பங்கு மத்திய அரசாங்கத்திற்கும் 25 சதவிகிதம்தான் சென்னை அரசாங்கத்திற்கும் உரிமை இருப்பதை மாற்றி முழுக்க முழுக்க பலன் அனுபவிக்கும் பொறுப்பு நம் ராஜ்ய சர்க்காருக்கு வரவேண்டும். இந்த நிலைமையை மாற்றி அமைக்க மான்யமாகவோ அல்லது நீண்ட காலத்தில் திருப்பிக் கொடுக்கக்கூடிய கடனாகவோ பெற்று இந்தத் திட்டத்தை ராஜ்ய அரசாங்கத்திற்குப் பெறுவாரானால் நான் அமைச்சரைப் பாராட்ட முடியும். அந்த நிலைமை இல்லாது மத்திய அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டுவிட்ட காரணத்தினால் தொழில் அமைச்சரோ, முதலமைச்சரோ அல்லது மற்ற அமைச்சர்களோ நெய்வேலி விஷயத்தில் சொல்லுகிறப் பிரகாரம் நடக்கக்கூடிய முறையில் எதுவும் இல்லாதிருக்கிறது நெய்வேலி சம்பந்தப்பட்டமட்டில் இவர்களுக்கு அதிகாரம் எதும் இல்லை. அங்கு இருக்கக்கூடிய அதிகாரிகள் நம்முடைய மந்திரிகளை விடப் பெரிய அதிகாரிகளாக நினைத்துக்கொண்டிருக்கிறார்கள், நம்முடைய ராஜ்யத்திற்கு உரிமை இல்லாத காரணத்தினால் மின்சார நிலையம், உர உற்பத்தித் தொழிற்சாலை, களிமண் பொருள்கள் உற்பத்தித் தொழிற்சாலை எல்லாம் நெய்வேலித் திட்டம் நிறைவேறும்போது வர இருக்கிறது. இது விஷயத்திலே, மின்சாரத் திட்டமும் மற்ற திட்டங்களும் நல்ல முறையில் வெற்றி பெறும் போது அண்டை ராஜ்யங்களுக்கும் உதவிகரமாக இருக்கும் என்று நிதி அமைச்சர் அவர்களுடைய உரையில் கூறப்பட்டிருக்கிறது. நான் நமது தொழில் அமைச்சரைக் கேட்டுக்கொள்ளப்போவதெல்லாம், ஏற்கெனவேயே நமக்கு உரப் பற்றுக்குறை இருக்கிறது; நம்முடைய உர உற்பத்தித் தொழிற்சாலை ஏற்படுகிற நேரத்தில் நம்முடைய ராஜ்யத்தின் தேவையைப் பூர்த்தி செய்த பிறகுதான் அண்டை ராஜ்யங்களுக்கு அனுப்பவேண்டும். அதற்கான ஒரு உத்திரவாதத்தை அமைச்சர் அவர்கள் கொடுக்கவேண்டும்.

அகோடு நெய்வேலி டவுன்ஷிப்பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிறது. டவுன்ஷிப் அமைக்கின்ற நேரத்தில் அங்குள்ள—ஏற்கெனவேயே இருந்துவருகிற—ரைஸ் மில் போன்றவைகள் இந்த டவுன்ஷிப்பிலே இடம் பெறவேண்டும். இப்போது இவைகள் அப்புறப்படுத்தப்படும் நிலைமை இருக்கிறது. பல கடைகள் அப்புறப்படுத்தப்படும் நிலைமை வரும்போது, அவர்களுக்கு டவுன்ஷிப்பிலே வைத்துக் கொள்ள உரிமை வாங்கித் தரவேண்டும் என்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

10th March 1961] [Sri A. Govindasami]

சேலத்துக்கு இரும்பு உருக்குத் தொழிற்சாலை வரும் என்று மக்கள் நம்பக்கூடிய அளவுக்கு அமைச்சர்களினாலே பல முறை உறுதி அளிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இந்த ஆண்டு நிதி நிலை அறிக்கையைப் பார்க்கும்போது, ஏற்கெனவேயே லாபரட்டரி டெஸ்ட் எல்லாம் முடிந்து கிழக்கு ஜெர்மனியிலும் ஜாம்ஷெட்பூரிலும் பரீட்சை செய்து நெய்வேலி நிலக்கரியையும் சேலத்து இரும்புக் கனியையும் வைத்து இரும்புத் தொழிற்சாலை அமைத்து விடலாம் என்று நிபுணர்களெல்லாம் கூறியிருந்தும்கூட மீண்டும் காலம் கடத்துகின்ற நிலையில் நெய்வேலியிலிருந்து 2,000 டன் நிலக்கரி எடுத்துப் பரீட்சை செய்யப்போகிறோம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். இதைப் பார்க்கும்போது இந்தத் திட்டம் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலாவது இடம் பெறுமா என்ற ஐயப்பாடு இருக்கிறது. நிச்சயமாக இந்தத் திட்டம் வரும் என்று அமைச்சர் அவர்கள் உத்திரவாதம் அளிக்கிறேன் என்று கூறியிருந்தால் அவரைப் பாராட்டி இருக்கலாம். அப்படி ஒரு உத்திரவாதம் இல்லாத நிலை இருப்பதைக் கண்டு வருந்தாமல் இருக்க முடியவில்லை.

மேலும் காவிரி வட்டத்தில் எண்ணெய் கிடைக்கக்கூடும் என்று அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள்; இருக்கிறது என்று முன்னேற்றக் கழகத்தினர் சொல்லுகிறார்கள் என்ற வேறுபாட்டைத் தெரிவித்தார்கள். அமைச்சர் அவர்களுடைய உரையிலேயும் மற்ற உரைகளிலும் குறிப்பிட்டிருந்தபோதிலும், இரண்டு ஆண்டுகளாக நிதி அமைச்சர் உரையிலேயும் காவிரி வட்டத்திலுள்ள எண்ணெய் நிச்சயமாக எடுக்கப்படும் என்று சொல்லியும், அதிலும் காலம் கடத்திக்கொண்டு வருகிறார்கள். ஸிஸ்மிக் பார்ட்டி இப்போது வேலை செய்வதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதற்கு வேண்டிய மெஷினரி வராத காரணத்தினால் காலதாமதம் ஆகிறது என்று அமைச்சர் அவர்கள் மறுக்க முடியும். ஏன் வர வேண்டிய முயற்சியில் நமது அரசாங்கம் ஈடுபடவில்லை என்று கேட்கிறேன். இன்னும் கிடைக்கக்கூடும் என்று சந்தேகமாகத்தான் சொல்லுகிறார்களே தவிர, நம்முடைய நிபுணர்களும் ரஷ்ய நிபுணர்களும் எல்லோரும் கூறிவிட்டபோதிலும் அமைச்சரே சந்தேகமாகச் சொல்லும் காரணத்தினால் திட்டம் நிறைவேறுமா என்ற சந்தேகம் இருக்கிறது. மேலும் கரும்பு ஆலைகள் அதிகமாகத் தேவைப்படுகிறது என்பதை நான் இந்த மன்றத்திலே பலமுறை வற்புறுத்திக் கூறிவந்திருக்கிறேன். நம்முடைய அரசாங்கமும் 1 லட்சம் டன் உற்பத்தியை 2 லட்சம் டன்னாக மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே உயர்த்த வேண்டுமென்று கூறியிருக்கிறார்கள். ஆனால் வடக்கு வாழ்கிறது, தெற்குத் தேய்கிறது என்று சொன்னால் மட்டும் அவர்களுக்குக் கோபம் வருகிறது. இப்போது நான் சொல்லப் போவதைக் கேட்டு அமைச்சர் அவர்களுக்கு நிச்சயமாகக் கோபம் வராது என்று கருதுகிறேன். நான் சொல்லப்போகிற விஷயம் அப்படிப்பட்டது. உத்திரப் பிரதேசத்தில் 69 சர்க்கரை ஆலைகள் இருக்கின்றன. பீகாரில் 22 சர்க்கரை ஆலைகள் இருக்கின்றன. ஆனால் நம்முடைய காமராஜ் சர்க்காரிலோ 5 சர்க்கரை ஆலைகள்தான் இப்போது உள்ளன. மேலும் 4

11 a.m.

[Sri A. Govindasami] [10th March 1961

சர்க்கரை ஆலைகளுக்கு லைசன்ஸ் வழங்கியிருப்பதாகக் கூறப்படுகிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே மேலும் 5 சர்க்கரை ஆலைகள் கூட்டுறவு முறையிலே வருவதற்கு இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. ஆகவே அப்படிப் பார்த்தாலும் இந்த மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திற்குள் மொத்தம் 14 சர்க்கரை ஆலைகளே நம்முடைய ராஜ்யத்தில் ஏற்பட இருக்கிறது. இதற்கு அமைச்சர் அவர்கள் என்ன பதில் சொல்ல முடியும்? உத்திரப் பிரதேசம் போன்ற மாகாணங்களிலே உள்ள கரும்பு மிகவும் மட்டமானது, ருசி இல்லாதது, சத்து இல்லாதது என்று கனம் உணவு அமைச்சர் அவர்களே கரூரிலே ஒரு மகா நாட்டிலே குறிப்பிட்டார்கள். அந்த மகாநாட்டிலே நானும் கலந்து கொண்டேன். ஆனால் இப்படி சத்து இல்லாத, ருசி இல்லாத கரும்பிலே தயாரிக்கப்படுகின்ற சர்க்கரைக்கும் ஒரே விலைதான். நம்முடைய நாட்டிலே தயாரிக்கப்படுகின்ற ருசியுள்ள, சத்துள்ள கரும்பிலே தயாரிக்கப்படுகின்ற சர்க்கரைக்கும் ஒரே விலைதான். இந்த விலை நிர்ணயிக்கக்கூடிய அதிகாரம் மத்திய அரசாங்கத்தினிடத்திலே இருக்கிறது. நம்முடைய மாநில அரசுக்கு இல்லாததுதான் குறை.

மேலும், மணிலா தமிழ் நாட்டிலே பல ஜில்லாக்களிலே அதிகமாகப் பயிரிடப்பட்டு வருகிறது. அதிலும் குறிப்பாக எங்களுடைய மாவட்டம் மணிலா ஜில்லா என்றே அழைக்கப்படும். அந்த இடத்திலே மணிலா எண்ணெயிலிருந்து வனஸ்பதி செய்வதற்காக 10 லட்சம் ரூபாய் மானியமாக கொடுக்கப்பட்டு, தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டது. அது சரியாக நடைபெறாததால், அத்தொகையைப் பெறுவதற்காக ஏலம் போடுவதிலே கவனம் செலுத்தப்படுகிறதே தவிர, அதை மேலும் இயங்குவதற்கான எந்த வழிவகையும் செய்யவில்லை. சோப் ஆலையாவது வருமென்று போன ஆண்டு எண்ணினோம். அது இப்போது குத்தகைக்கு விடப்பட்டிருக்கிறது. சர்க்கார் செய்யத் தயங்கிய தொழிலை, தனியார் துணிந்து செய்ய முன்வந்திருக்கிறார்கள். அதிலும் குறிப்பாக சர்தார் வேதரத்னம் அவர்கள் குறிப்பிட்டது போல், விதவைகள் செய்யக்கூடிய தொழிலைச் செய்வதற்கு நமது அரசாங்கம் இப்போது முன்னுக்கு வந்திருக்கிறது. அப்பளம் தனியார் செய்யவேண்டிய தொழில். விதவைகள் செய்ய வேண்டிய தொழில். அதைச் சர்க்கார் எடுத்துக்கொண்டு நடத்துகிறோம் என்று வேண்டுமானால் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். அதேபோல் தீப்பெட்டித் தொழிற்சாலையை இராமநாதபுரத்தில் சிவகாசியில் தனிப்பட்டவர்கள் நல்லமுறையில் நடத்திக் கொண்டு வருகிறார்கள். அதை ஏன் அரசாங்கம் எடுத்துக்கொண்டு நடத்த வேண்டும்? அதேபோல் செருப்புத் தொழிலையும் நாங்கள் ஏற்றுக்கொண்டு நடத்துகிறோம் என்றால், அதை நாம் பெருமையாக ஏற்றுக்கொள்ள முடியாது.

(Mr. Speaker in the Chair.)

பஞ்சாப் மாகாணத்தை குறிப்பாகச் சொல்ல விரும்புகிறேன். அங்கு நானும் சென்று பார்த்திருக்கிறேன். கனம் அமைச்சர் அவர்களும் சென்று பார்த்திருப்பார்கள். அங்கு லூதியானாவில்

10th March 1961] [Sri A. Govindasami]

ஏற்பட்டுள்ள தொழில் வளர்ச்சியைப் பார்த்தால், இங்கு எதை கனம் அமைச்சர் அவர்கள் காட்டுவார்கள் என்று தெரியவில்லை. சும்மா இங்கு வால்டாக்ஸ் ரோடை மட்டும் காட்டி, தொழில் அபிவிருத்தி அடைந்திருக்கிறோம் என்று சொல்ல முடியாது. அந்த நிலைமையில்தான் நம்முடைய தொழில் வளர்ச்சி வளமடைந்திருக்கிறது. நம்முடைய இராஜ்யத்திலே தொழில் வளர்ச்சிக்கு என்னென்ன முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன? வெளி நாடுகளுக்குச் சுற்றுப்பிரயாணம் செய்துவிட்டு வந்த பெருமையும், அனுபவமும் நிறைந்த கனம் தொழில் அமைச்சர் அவர்கள் இந்த நாட்டிலே தொழில் வளத்தைப் பெருக்குவதற்காக பெருமைபடக்கூடிய என்னென்ன தொழிற்சாலைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன என்ற புள்ளிவிவரங்களை இந்தச் சபைக்குக் கொடுத்தாக வேண்டும்.

அகதிகளுக்கு வடநாட்டிலே நிறைய திட்டங்கள் தீட்டி அவர்களைப் பல நல்ல தொழில்களில் ஈடுபடுத்தி, கைநிறையப் பணம் கொழிக்கச் செய்துவிட்டார்கள். ஆனால் அதே சமயத்தில் இலங்கையிலிருந்து திரும்புகின்ற பிற்பட்ட மக்களுக்கு பிற்பட்ட ஜில்லாவாகிய இராமநாதபுரத்தில் என்னென்ன வசதிகள் செய்யப்பட்டன என்றால், ஒன்றும் கிடையாது. இன்றைய தினம் கதருக்கு காட்டக்கூடிய அளவுக்கு சலுகை நம்முடைய அரசாங்கத்தினால் கைத்தறிக்குக் காட்டப்படவில்லை. அப்படி கதருக்கு சலுகைகள் காட்டப்பட்டும், இன்றையதினம் அத்திட்டம் வெற்றி பெறக்கூடிய முறையிலே நடைபெறவில்லை என்பதைப் பார்க்கின்றோம். ஆனால் கதரைப் போட்டுக்கொண்டு, கைத்தறிக்கு ரொம்பவும் பாடுபடுவதுபோல் பேசப்பட்டு மட்டும் வருகிறது. கைத்தறியைப் பொறுத்தமட்டில் அதற்கு மாற்றாந்தாய் சலுகையே இந்த அரசாங்கத்தினால் கொடுக்கப்பட்டு வருகிறது. ஏதோ வெள்ளைக்காரன் காலத்திலே அவர்களை விரட்டுவதற்கு ஒரு அடையாளச் சின்னமாக வேண்டுமானால் கதர் இருந்திருக்கலாம். ஆனால் இன்றைக்கு அதற்கு அதிக அக்கறை காட்டப்படுவதைப் பார்க்கின்றோம். ஆனால் கைத்தறி இன்றைக்கு வெற்றிகரமாக நடைபெற முடியாமல், பல கஷ்டங்களை அனுபவித்துக்கொண்டு வருகிறது. கதருக்கு மட்டும் விசேஷ ரிபேட்டுகள் எல்லாம் வழங்கப்பட்டு இருக்கிறது. இந்த நேரத்திலும் கொடுக்கப்பட்டு வருகிறது.

இன்றையதினம் தென்னாடும் வாழ்கிறது என்பதற்கு ஆதாரமாக கோயம்புத்தூரிலே இருக்கக்கூடிய மில்களை மட்டும் காண்பித்து தப்பித்துக் கொள்ள முடியாது. அதிலும் வட நாடு தான் வாழ்கிறது. தென்னாடு தேய்ந்துகொண்டுதான் இருக்கிறது. அதையும் ஆதாரத்துடன் குறிப்பிட முடியுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அகமதாபாத்தில் 20 லட்சம் கதிர்கள் இருக்கின்றன, 41 ஆயிரம் தறிகள் இருக்கின்றன. ஆனால் சென்னையிலோ 26 லட்சம் கதிர்கள்தான் இருக்கின்றன. 8 ஆயிரம் தறிகள்தான் இருக்கின்றன. ஏன் இங்கு இந்தத் தறிகள் அதாவது லூம்கள்

இவ்வளவு குறைவாக இருக்கவேண்டும்? அதேபோல் மத்தியப் பிரதேசத்திலே 5 லட்சம் கதிர்கள் இருக்கின்றன. 12 ஆயிரம் தறிகள் இருக்கின்றன.

THE HON. SRI R. VENKATARAMAN : இது நல்ல உபயோகமான விவாதம். ஆகவே நம்முடைய இராஜ்யத்திலே அதிகமான லூம்கள், அதாவது விசைத்தறிகள் வைக்கலாம் என்று சொல்கிறார்களா, அல்லது வைக்கக்கூடாது என்று சொல்கிறார்களா என்பதைத் திட்டவட்டமாகச் சொல்லும் படி கேட்டுக்கொள்கிறேன். ஆடோமாடிக் லூம்கள் வைப்பது அவ்வளவு நல்லதல்ல என்று கருதி நமது இராஜ்ய சர்க்கார் அதை ஓரளவு குறைத்து வைத்துக்கொண்டிருக் கிறது. இது நமது இராஜ்ய சர்க்காரின் கொள்கை யாக முடிவு செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் கனம் அங்கத்தினர் எதை ஆதரிக்கிறார்கள் என்பதைத் தெளிவாக அறிவித்தால் மிகவும் உபயோகமாக இருக்கும்.

SRI A. GOVINDASAMI : அமைச்சர் அவர்கள் இப்படிக் கூறி என்னை இந்தப் பிரச்னையில் எப்படிச் சிக்க வைக்கலாம் என்று பார்க்கிறார்கள். (சிரிப்பு) ஆனால் நாங்கள் இங்கே சொல்ல விரும்புவதெல்லாம் நம் நாட்டுக் கைத்தொழிலாகிய கைத்தறிக்குத் தான் நாம் மிகவும் முக்கியத்துவம் கொடுக்க வேண்டுமென்பது தான். இதைத்தான் திட்டவட்டமாகக்கூற விரும்புகிறேன். அதிலும்கூட வடக்கு வாழ்கிறது என்பதற்காகத்தான் இந்தப் புள்ளிவிவரங்களைக் குறிப்பிட்டேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : சர்க்கார் செய்துள்ள கொள்கையின் அடிப்படையில்தான் நாம் கடந்த ஐந்தாண்டுகளாக லூம்கள் எடுத்துக் கொள்ளவில்லை.

SRI A. GOVINDASAMI : இப்போது சர்க்காருடைய திட்டம் அதுவாக இருந்தால் நான் ஒன்றும் ஆட்சேபிக்கவில்லை. அதேபோல் ஆலைகளுக்கு வேண்டிய ஸ்பேர் பார்ட்ஸ் இங்கே கிடைப்பதில்லை. பஞ்சாப், வெஸ்ட் பெங்கால் போன்ற இடங்களில் அதிகமாகக் கிடைக்கிறது. ஆனால் இங்கு கூடுதலான விலைக் கொடுத்து வாங்குவதாகச் சொல்லப்படுகிறது. அதையும் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்றையதினம் கனம் தொழில் அமைச்சர் அவர்களை ஒன்று கேட்க விரும்புகிறேன். என்னுடைய தொகுதியானதாலே இதைக் குறிப்பாகக் கேட்க விரும்புகிறேன். விழுப்புரத்திலே வனஸ்பதி தொழிற்சாலை ஏற்படுத்தப்படும் என்று உத்திரவாதம் அளிக்கப் பட்டதே, அது என்னவாயிற்று? அதைத் தவிர்த்து, அங்கு சோப் ஆலையாவது வைக்கப்படும் என்ற நம்பிக்கை சொல்லப் பட்டதே, அது என்னவாயிற்று? எதற்காக இந்த உத்திரவாதங் கள் கொடுக்கப்பட வேண்டும்? ஆனால் இப்போது எத்தகைய முடிவாகி இருக்கிறது? அது இப்போது மூடப்பட்டு இருக்கிறது. சம்பந்தப்பட்ட அதிகாரிகள் மட்டும் அங்கிருந்து கொண்டு, அதைக் காவல் புரிந்து வருகின்றனர். அதற்குத்தான் அதிகாரிகள் பயன்படுத்தப்பட்டு இருக்கிறார்களே தவிர அதைத் திறப்பதற் கான வழிவகைகள் எதுவும் செய்யப்படவில்லை. இதைச் சர்க்கார் எடுத்து நடத்த முன்வர வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

10th March 1961] [Sri A. Govindasami]

நெய்வேலியிலே தெர்மல் ஸ்டேஷன் ஏற்படுத்துகின்ற நேரத்திலே நாம் அதைப் பயன்படுத்திக்கொண்டு, தொழில் துறையிலே முன்னேற்றம் அடைவதற்கு அதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இன்றையதினம் நம்முடைய இராஜ்யத்தில் 10,000 கிராமங்களுக்கு மின்சாரம் வழங்கப்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது. ஆனால் அது எப்படி வழங்கப்பட்டிருக்கிறது என்று பார்க்கும்போது விவசாயத்திற்கு 19 சதவிகிதமும், தெருக்களுக்கு விளக்குகள் போடுவது போன்றவற்றிற்கு 81 சதவிகிதமும் விநியோகிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே நாம் தொழில் துறையிலே அதிகமான மின்சாரத்தை உபயோகப்படுத்த வேண்டுமென்று இந்த நேரத்திலே குறிப்பிட விரும்புகிறேன். அதே நேரத்திலே இங்கே கிடைக்கக்கூடிய மணிலாக் கொட்டைகளையும் பயன்படுத்திக்கொள்ளும் வகையிலே வனஸ்பதி ஆலையும் ஏற்படுத்த வேண்டும். அதேபோல், தென் ஜில்லாக்களில் குறிப்பாக, தென் ஆற்காடு மாவட்டத்திலும், திருச்சி போன்ற பகுதிகளிலும் நல்ல முந்திரிக் கொட்டைகள் பயிராக்கப்படுகின்றன. இப்போது அரசாங்கமும் முந்திரிக் கொட்டைகள் அதிகமாக உற்பத்திச் செய்யவேண்டுமென்று, புறம்போக்குப் பகுதிகளிலும், காட்டுப் பகுதிகளிலும் இந்தச் செடிகளை வைத்துப் பயிராக்கி வருகின்றனர். அந்த முந்திரிக் கொட்டைகளிலிருந்து பிளாஸ்டிக் செய்யப்படுவதாகக் கூறப்படுகிறது. ஆகவே அதற்கான தொழிற்சாலைகளையும் இந்த இடங்களில் ஏற்படுத்த இந்த அரசாங்கம் தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டும்.

கடைசியாக, என்னுடைய பிளாக்கான போலீனூர் பிளாக்கிலே இண்டஸ்ட்ரீஸ் எக்ஸ்டென்ஷன் ஆபீசர் இரண்டு வருஷங்களாக நியமிக்கப்படாமல், அந்தப் பதவி காலியாக இருந்து வருகிறது. இப்படி காலியாக விடப்பட்டிருந்தால், எப்படி அங்கு நல்ல முறையில் வேலைகள் நடைபெறும்? இரண்டு வருஷமாகியும் அப்பதவிக்கு யாரையும் போடாமல் இருப்பதற்கு என்ன காரணம் என்று தெரியவில்லை. இதைக் கவனித்து அங்கு ஒருவர் நியமிக்கப்பட்டால்தான், தொழில் அபிவிருத்திக்கு வேண்டிய காரியங்கள் செய்ய முடியுமென்று கூறிக்கொண்டு, என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

* Sri K. S. ARDHANAREESWARA GOUNDER : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் தொழில் அமைச்சர் அவர்கள் கொண்டு வந்திருக்கக்கூடிய மான்யத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். குறிப்பாக இதுவரையிலும் சேலம் ஜில்லா பிற்போக்காக இருக்கிறது என்று சொல்லிக்கொண்டிருந்த ஜில்லா. அங்கு கன ரகத் தொழில்களான அலுமினியம் பாக்டரி, பேப்பர் பாக்டரி, இன்னும் இரும்புத் தொழிற்சாலைகள் ஆகியவைகள் ஏற்படுத்தப் போகிறோம். (குறுக்கீடு). நம்முடைய எதிர்க் கட்சியில் இருக்கக்கூடிய திரு. எம். பி. சுப்பிரமணியம் அவர்கள் எங்கு ஆரம்பிக்கப் போகிறார்கள் என்று கேட்கிறார்கள் ஆனால் அவர் சேலம் ஜில்லாவிலேயே இருந்துகொண்டு எங்கு ஆரம்பிக்கப் போகிறார்கள் என்று அவர்களுக்குத் தெரியவில்லை என்றால், அவர் மிகவும் பிற்போக்காக இருக்கிறார் என்றுதான் சொல்லவேண்டும்.

[Sri K. S. Ardhanareeswara Gounder] [10th March 1961

ஏனென்றால், மேட்டூருக்கு வந்து பார்த்திருந்தால் எந்த இடத்தில் அலுமினியம் பாக்டரி ஆரம்பிக்கப்போகிறார்கள் என்பது தெரிய வரும். அதேமாதிரி கஞ்சமலைக்குச் சென்று பார்த்திருந்தால் இரும்புத் தொழிற்சாலை ஆரம்பிப்பது நமக்கு விளங்கும். அதை விட்டுவிட்டு பேச்சு அளவிலே பேசிக்கொண்டிருப்பது அவ்வளவு சரியல்ல என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

குறிப்பாக சேலம் ஜில்லாவைப் பொறுத்தவரைக்கும் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். மேட்டூருக்குப் பக்கத்தில் பக்கநாடு, ஆடையூர் என்ற கிராமங்களில் யுரேனியம் இருப்பதாக மத்திய சர்க்கார் ஆராய்ச்சியாளர்களால் இப்பொழுது பரிசோதனை நடந்துகொண்டிருக்கிறது. உடனடியாக யுரேனியத்தைத் தோண்டி எடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை அமைச்சர் அவர்கள் எடுத்துக்கொள்ளுவார்கள் என்று நினைக்கிறேன். நம்முடைய எதிர்க்கட்சி அங்கத்தினர்கள், குறிப்பாக தி.மு.க அங்கத்தினர்கள் இனிமேலாவது சேலத்தில் யுரேனியம் இருக்கிறது என்பதை உணர்ந்துகொள்ளுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, சேலம் ஜில்லாவிலே சங்ககிரி தாலுகாவிலே ஒரு சிமெண்டு தொழிற்சாலை ஏற்படுவதற்கு வேண்டிய மூலப் பொருள்கள் இருக்கின்றன. அதை உடனடியாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்று சர்க்காருக்கு வலியுறுத்துகிறேன்.

அடுத்தபடியாக, நமது மாகாணத்தில் பூதத்துவ ஆராய்ச்சியாளர்கள் மிகவும் குறைவாக இருக்கிறார்கள் என்பதுபற்றி நாம் எல்லோரும் வருத்தப்பட வேண்டிய விஷயம். உடனடியாக நம்முடைய மாகாணத்திலிருந்து நல்ல நிபுணர்களைத் தேர்ந்தெடுத்து வெளிநாடுகளுக்கு அனுப்பி, நல்ல சிறந்த அறிவாளிகளைத் தேர்ந்தெடுத்து பூதத்துவ ஆராய்ச்சியாளர்களை அதிகப்படுத்தினால்தான் நம்முடைய தொழில் வளம் அதிகமாகப் பெருகும். ஆகவே, விரைவிலே பூதத்துவ ஆராய்ச்சியாளர்களை வெளி நாடுகளுக்கு அனுப்பி வைத்து, அவர்களுக்குப் பயிற்சி கொடுத்துவரவேண்டும் என்று அரசாங்கத்தை வலியுறுத்த ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, சிறு கைத்தொழில்கள் முன்னேறியிருக்கிறதா என்றால், இதற்கு முன்பு இந்தச் சபையிலே கூறியிருக்கிறேன், அதற்கு வேண்டிய மூலப் பொருள்கள் நல்ல முறையில் கிடைக்காத காரணத்தினால்தான் சிறு கைத்தொழில்கள் விரைவிலே முன்னேறவில்லை என்று. இண்டஸ்டிரியல் எஸ்டேட்டில் உள்ளவர்களுக்கு மூலப்பொருள்கள் எந்தவிதமான தடையுமில்லாமல் சர்க்கார் கிடைக்கச் செய்தால், நம்முடைய மாகாணத்தில் அதிவிரைவிலே சிறு கைத்தொழில்கள் முன்னேறுவதற்கு வாய்ப்பு இருக்கிறது என்பதை சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அடுத்தபடியாக, திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்கள் சொன்னார்கள், 'வடநாடு வளர்கிறது, தென்னாடு தேய்கிறது' என்று. ஒன்றை அவர்கள் உணரவேண்டும். இப்பொழுது சென்னையில் இருக்கக்கூடிய இண்டஸ்டிரியல் எஸ்டேட்டில் வெளிமாகாணங்களிலிருந்து எவ்வளவு பேர்கள் வந்து இருக்கிறார்கள் என்பதை

10th March 1961] [Sri K. S. Ardhanareeswara Gounder]

அவர்கள் பார்க்கவேண்டும். அமைச்சர் அவர்கள் சொல்லுகிறார்கள் நம்முடைய மாகாணத்தில் சிறு கைத்தொழில்களைச் செய்வதற்கு இந்த மாகாணத்தில் உள்ளவர்கள் முன்வருவதில்லை என்று. அதற்கு எடுத்துக்காட்டாக நமது கிண்டி எஸ்டேட்டில் பல வெளி மாகாணங்களிலுள்ளவர்கள் இங்கு வந்து தொழில் செய்கிறார்கள் என்பதை நான் அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். அதுவும் குறிப்பாக தி.மு.க. அங்கத்தினர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். இந்த மகாணத்தில் தொழில் வளம் முன்னேறவேண்டுமானால் இந்த மாகாணத்திலுள்ள பொதுமக்களை உற்சாகப்படுத்தி சிறு கைத்தொழில்களில் அவர்களை அதிகமாக ஈடுபடச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால்தான் தென்னாட்டை நாம் வளம்மிக்க நாடாகச் செய்ய ஆசைப்படுகிறோம் என்பது தெரியவரும். இதை அவர்கள் உணர வேண்டும்.

அடுத்தபடியாக, வரி அதிகமாகப் போடுகிறோம் என்று கூறினார்கள். அதுவும் அன்றாடம் உபயோகப்படும் பொருள்களுக்குப் போட்டிருக்கக்கூடிய வரி குறையவேண்டுமென்றால், நம்முடைய மாகாணத்தில் பெரிய தொழில்களும், சிறு கைத்தொழில்களும் அதிகமாக ஏற்படுத்தப்படவேண்டும். குறிப்பாக நாட்டில் பல கைத்தொழில்கள் ஏற்பட்டு முன்னுக்கு வந்தால்தான், இந்த வரியைக் குறைப்பதற்கு வழிவகை இருக்கும் என்பதை நான் எடுத்துக்கூற விரும்புகிறேன்.

அடுத்தபடியாக, கனம் அங்கத்தினர் திரு. கோவிந்தசுவாமி அவர்கள் தென்னாட்டில் அதிக கரும்பு ஆலைகள் இல்லை, வெளி மாகாணங்களில் அதிகமாக கரும்பு ஆலைகள் இருக்கின்றன என்று சொன்னார்கள். அவர்கள் யோசிக்கவேண்டும். தென்னாட்டில் ஆலைகள் குறைவாக இருந்தாலும், இந்த ஆலைகளுடைய 'கபாஸிடி' என்ன, எவ்வளவு டன்கள் தினத்திற்கு இந்த ஆலைகள் அறைக்கின்றன, வெளி மகாணங்களிலுள்ள கரும்பு ஆலைகள் தினம் எவ்வளவு அறைக்கின்றன, அவைகளுக்கு எவ்வளவு டன் 'கபாஸிடி' என்பதைப் பரிசீலனை செய்து பார்த்தால், நம்முடைய மாகாணத்தில் குறிப்பாக 1,000, 1,500 டன்கள் அதிகமாக அறைக்கக்கூடிய 'கபாஸிடி' உள்ள கரும்பு ஆலைகள் ஏற்பட்டிருப்பது தெரியவரும். அது போற்றத்தக்கது. அதே மாதிரி சிறு கைத்தொழில்களாக வெல்லாம், நாட்டுச் சர்க்கரை போன்ற பொருள்களை உற்பத்தி செய்வதற்குப் பல விவசாயிகள் கரும்பு உற்பத்தி செய்கிறார்கள். ஆனால் அஸ்காவுக்குக் கிடைக்கக்கூடிய விலையையும், வெல்லத்திற்குக் கிடைக்கக்கூடிய விலையையும் சீர்தூக்கிப் பார்த்தால், கரும்பு ஆலைகளுக்கு கொடுக்கக்கூடிய கரும்பினுடைய விலையையும், அவர்கள் உற்பத்தி செய்யக்கூடிய வெல்லத்திற்கு கொடுக்கக்கூடிய கரும்பினுடைய விலையையும் சீர்தூக்கிப் பார்த்தால், சிறு கைத்தொழில்கள் செய்யக்கூடிய விவசாயிகளுக்கு டன் ஒன்றுக்கு, ரூ. 15 அல்லது ரூ. 20 குறைவாகத்தான் கிடைக்கிறது. அதற்குக் காரணம் சிலோன்

ஏற்றுமதியை தடை செய்ததுதான். ஆகவே, சிறு கைத்தொழில்கள் மூலம் செய்யக்கூடிய வெல்லாம், நாட்டுச் சர்க்கரை ஆகியவைகளை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவேண்டிய வழிவகைகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

நம்முடைய நாட்டிலிருந்து 15 லட்சம் டன் சர்க்கரை வெளியிலே ஏற்றுமதி செய்கிறோம். ஒன்றுமில்லாத ஊசி முதற்கொண்டு இறக்குமதி செய்துவந்த நாட்டிலே இன்றைக்கு பெரிய கனரகத் தொழில்களுக்கு வேண்டிய பெரிய யந்திரங்கள் முதல்கொண்டு உற்பத்தி செய்கிறோம். அது மிகவும் போற்றத்தக்கது. நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் சென்ற பட்ஜெட்டில் ஒரு தாலுகாவிற்கு ஒரு தொழில் பள்ளிக்கூடம் விதம் ஏற்படுத்தப்போகிறோம் என்று சொன்னார்கள். நம்முடைய நாட்டிலே தொழில் வளம் இன்னும் அதிக விரைவிலே ஏற்படவேண்டும். ஒரு பிளாக்கிற்கு ஒரு தொழில் பள்ளிக்கூடம் என்ற முறையில் ஏற்படுத்தவேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். முக்கியமாக நம்முடைய நாட்டில் தொழில் வளம் பெருகவேண்டுமானால், அதிக நிபுணர்களை உண்டாக்கக்கூடிய அளவிலே தொழில் பள்ளிக்கூடங்கள், பாலிடெக்னிக்குகள் ஏற்படுத்தவேண்டும்.

அடுத்தபடியாக, சேலத்தில் இண்டஸ்டிரியல் எஸ்டேட் ஏற்படுத்துவதற்கு வேண்டிய நிலம் கிடைக்கவில்லை. அதனால் கால தாமதம் ஏற்படுகிறது என்று சொல்லுகிறார்கள். என்னைப் பொறுத்தவரையில், அதுவும் குறிப்பாக மேட்டூரில் 'மேட்டூர் இண்டஸ்ட்ரீஸ்' என்று ஒரு ஆங்கிலேயர் நூல் ஆலை வைத்திருக்கிறார்கள். அந்த ஆலையை ஆரம்பிப்பதற்கு அவர்களுக்குக் கிட்டத்தட்ட 250 ஏக்கர் நிலம் கொடுத்தார்கள். இப்பொழுது அவர்கள் இந்த இடத்திலே 50 ஏகர் நிலம்தான் தொழிலுக்காக உபயோகப்படுத்திக்கொண்டிருக்கிறார். பாக்கி 200 ஏகர் நிலத்தை தரிசாகத்தான் போட்டிருக்கிறார். அதை வேறு தொழில்கள் ஏற்படுத்துவதற்கு உடனடியாக சர்க்கார் எடுத்துக்கொள்ளவேண்டும். மேட்டூரில் பல தொழில்கள் வரக்கூடிய நிலைமை இருக்கிறது. அப்படியிருக்கும்போது இந்த நிலத்தை விவசாயம்கூட செய்யாமல் தரிசாக வைத்துக் கொண்டிருக்கிறார்கள் வேண்டுமென்றே. அதை உடனே சர்க்கார் எடுத்துக்கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும். அது ஒரு பல கனரக தொழில் ஏற்படுத்தக்கூடிய இடம். அந்த இடத்தை தொழில் ஏற்படுத்துவதற்கு உபயோகப் படுத்தவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, கைத்தறி நெசவாளர்களைப் பொறுத்தவரையில், அநேக கைத்தறி நெசவாளர்களுக்கு வேலை இல்லை என்று பலர் கூறிக்கொண்டிருக்கிறோம். நம்முடைய மகாணத்தில் லட்சக்கணக்கான மக்கள் கைத்தறியில் ஈடுபட்டிருக்கிறார்கள். அந்தத் தொழிலில் அவர்கள் இருப்பதைவிட, வேறு சிறு கைத்தொழில்களிலும், கனரகத் தொழில்களிலும் அவர்களை ஈடுபடுத்தினால் தான், நமது மகாணத்தில் கைத்தறி நெசவாளர்களுடைய பிரச்னை

தீரும் என்பதை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். அவர்கள் நெய்யக்கூடிய துணியை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து, அவர்களுக்கு விற்று பணத்தைக் கொடுப்பதைவிட, இங்கேயே தொழில்கள் வளரக்கூடிய பிரதேசமாக இருக்குமானால் வேறு தொழில்களை ஏற்படுத்தி அதிலே அவர்களை ஈடுபடுத்தினல், உடனடியாக நிவாரணம் அளிக்கலாம். துணியையே நம்பிக்கொண்டிருந்தால், அது மிகவும் கஷ்டமாக இருக்கும் அதுவும் குறிப்பாக சேலத்தைப் பொறுத்தவரையிலே கைத்தறி நெசவாளர்கள் அதிகமாக இருக்கிருர்கள். அமைச்சர் அவர்கள் அதை அனுசரித்து சேலம் ஜில்லாவில் பல கனரகத் தொழில்கள் ஏற்படுத்துவதற்கு வழிவகை செய்வதுபற்றி நான் அவர்களைப் பாராட்டுகிறேன்.

சேலம் ஜில்லாவில் பல உலோகங்கள் இருக்கின்றன என்று கேள்விப்படுகிறோம். சேலத்தைப் பொறுத்தவரைக்கும் உடனடியாக நல்ல பூதத்துவ ஆராய்ச்சியாளர்களைக் கொண்டு அங்கு இருக்கக்கூடிய பல உலோகப் பொருள்களை ஆராய்ச்சி செய்து எடுத்தால், இந்த மாகாணத்தை மட்டுமல்ல, இந்த நாட்டையே மிகவும் வளம் பெறச் செய்வதற்கு வழிவகை இருக்கிறது என்று சொல்லிக்கொண்டு, என்னுடைய உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

Sri K. SATTANATHA KARAYALAR : சபாநாயகர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கைமீது பேசும்பொழுது ஒரு விஷயத்தை நான் வற்புறுத்த விரும்புகிறேன். நமது மாகாணத்திலே தொழில் அபிவிருத்தி அடைந்துகொண்டு வருகிறது என்பதிலே எந்தவிதமான ஆட்சேபணையும் இருக்க முடியாது. ஆனல் தேவைக்குத் தகுந்த அளவு தொழில் வளர்ச்சி உண்டா என்று பார்த்தால் அதிலே பல அபிப்பிராயங்கள் இருக்கக்கூடும்.

The Hon. Sri R. VENKATARAMAN : தொழில் வளர்ச்சி போதாது என்பதுதான் அபிப்பிராயம்.

Sri K. SATTANATHA KARAYALAR : அதோடு மாத்திரம் அல்ல. பொதுவாக, தொழில் வளர்ச்சி நீண்ட நாட்களாக இல்லாமல் இருந்து இப்பொழுது ஆரம்பிக்கக்கூடிய காலத்திலே கொஞ்சம் வேகம் இருக்கக்கூடும். இதே ரேட் ஆப் குரோத் தொடர்ந்து இருந்துகொண்டுபோவது கொஞ்சம் கஷ்டப்படலாம். எந்த வேகத்திலே இப்பொழுது தொழில் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறதோ, அதே வேகத்திலே இந்தத் தொழில் வளர்ச்சியின் வேகத்தைக் கொண்டுபோவதற்கு முழு முயற்சி எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஏதோ தொழில் வளர்ந்துவிட்டது என்ற காரணத்தினலே உதாசீனமாக இருந்து விடக்கூடாது என்று வலியுறுத்திக்கூற ஆவாவுறுகிறேன். குறிப்பாக, இன்று பலதரப்பட்ட தொழில்கள் பலதரப்பட்ட முறையிலே செயலாற்றப்பட்டு வருகின்றன. பெருவாரியான அளவிலே, பெருவாரியான மூலதனங்களைப் போட்டு மூலப் பொருள்களை உற்பத்தி செய்யக்கூடிய தொழில்கள்; அதற்கு அடுத்தபடியாக இயந்திர

ரத்தை உபயோகித்து உற்பத்தி செய்யக்கூடிய சிறு தொழில்கள்; அதைப் போல கிராமாந்திரப் பகுதிகளிலே ஓரளவு இயந்திரத்தை உபயோகித்து உற்பத்தி செய்யக்கூடிய சிறு தொழில்கள்; இதற்கு அப்பால் ஹாண்டி கிராப்ட்ஸ் அதாவது அழகுப் பொருள்கள் செய்யக்கூடிய சிறு குடிசைத் தொழில்கள். இந்தத் தொழில்களை எல்லாம் பார்த்தால் ஒன்றுக்கொன்று எந்த அளவுக்கு இணைப்பு இருக்கிறது என்பதை சிந்திக்க வேண்டியது அவசியம். ஓரளவு கோவார்டினேஷன் இல்லை என்றே நினைக்கிறேன். ஏனென்றால் சில தொழில்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்ட தொழில்கள் போல் வளருகின்றன. ஒரு துறையில் இருக்கக்கூடிய தொழிலுக்கும், இன்னொரு துறையில் இருக்கக்கூடிய தொழிலுக்கும் போட்டிகள் பல சந்தர்ப்பங்களில் ஏற்படுகின்றன. குடிசைத் தொழிலாகவும் கைத்தொழிலாகவும் இருக்கக்கூடிய ஒரு தொழில் மாச் இண்டஸ்டிரி. இது ராமநாதபுரம், நெல்லை ஆகிய மாவட்டங்களிலே மிக விரிவாகப் பரவி இருக்கக்கூடிய ஒரு தொழில். வேலை வாய்ப்பு அதிகம் கொடுக்கக்கூடிய ஒரு தொழில். அதே நேரத்திலே இயந்திரத்தை உபயோகித்தும் இந்தத் தொழில் நடத்தப்பட்டு வருகிறது. இதனால் ஏற்படக்கூடிய தீமை என்னவென்றால், பல ஆயிரக்கணக்கான தொழிலாளிகள் வேலை செய்யக்கூடிய ஒரு இடத்தில், நூற்றுக்கணக்கான தொழிலாளிகள் ஒரு தொழிற்கூடத்திலிருந்து உற்பத்தி செய்யக்கூடிய நிலைமை ஏற்பட்டு விடுகிறது. இதிலே வரையறை அகில இந்திய ரீதியிலே இருக்க வேண்டும். மாகாண ரீதியில் இருந்தால் மட்டும் போதாது. நம் நாட்டை எடுத்துக்கொண்டால் இங்கே உற்பத்தி செய்யக்கூடியதைப் பொருத்து பிற மாகாணங்கள் திட்டமிடுவது இல்லை. அதனால் பொருள் தேக்கம் ஏற்படக்கூடிய சந்தர்ப்பங்கள் ஏற்படுகின்றன. ராமநாதபுரம் வட்டாரத்தில் சில பகுதிகளில் சில காலத்திற்கு முன்பு பவுண்டன் பென் நிப்புகள் மிக அழகாகச் செய்து கொண்டிருந்தார்கள். அது ஒரு நல்ல வளரக்கூடிய தொழிலாக இருந்தது. மிகவும் செல்வாக்குள்ள பல கம்பெனிகள் சர்வதேச ரீதியில் அந்தத் தொழிலை முக்கியமான தொழிலாகக்கொண்டு இயந்திரத்தை உபயோகித்து செய்யக்கூடிய தொழிலாக பல இடங்களில் இப்பொழுது வரும்பொழுது, இந்தத் தொழில் செய்து வந்தவர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். இதைப் போல அகில இந்திய ரீதியிலே எந்தத் தொழிலுக்கும் ஒரு வரையறை செய்யப்படாத காரணத்தினாலே இந்தத் தொழில்கள் நசித்துப்போகின்றன. ஹாண்டிகிராப்ட்ஸை எடுத்துக்கொண்டால், அழகு சாதனங்களாக இருக்கக்கூடிய பொருளாதலால், இது ஒரு பெரிய தொழிலாக இருக்கமுடியாது. பனை ஓலையிலிருந்து கிலுக்கு முதலிய பொருள்கள் செய்வதினால் இது ஒரு விளையாட்டுப் பொருளாக, ஒரு க்யூரியாசாக ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் வாங்கக்கூடிய பொருளாக இருக்கலாம். ஆனால் திரும்பத் திரும்ப விற்பனையாகக்கூடிய வாய்ப்பு இல்லாமல் போகும். எங்கள் வட்டாரத்தில் இது போன்ற பொருள்கள் குற்றாலத்தில் சீசன் தோறும் விற்கப்படும். ஒரு சீசனிலே விற்ற பொருள்கள் அடுத்த சீசனிலே

விற்கும் என்ற அவாவுடன் அதிகமாக உற்பத்தி செய்துகொண்டு வருவார்கள். ஆனல் அவற்றை மக்கள் அதிகமாக வாங்க விருப்பம் இல்லாததினல் தேக்கம் ஏற்படுகிறது. இதைப் போல் பத்தமடைப் பாயும் ஒன்று. சமீபத்தில் நடந்த எக்ஸிபிஷனிலே, நாள முழுவதும் இருந்துவிட்டு ஒரு பாய்கூட ஒருவரும் வாங்க வில்லை என்று சொல்லக்கூடிய நிலைமையிலேதான் விற்பனை நடந்தது. இந்தப் பொருள்கள் எல்லாம் மக்கள் அன்ருடம் உபயோகப்படுத்தக்கூடிய பொருள்களாக இருக்காத காரணத் தினல், இவைகளுக்கு நிரந்தரமாக சந்தை கிடைக்க முடியாது. இதுபோல் அல்ல வேறு சில தொழில்கள்.

எங்கள் வட்டாரத்திலே கத்தாழை நார் எடுக்கக்கூடிய தொழில் மிகவும் பரவலாக நடைபெறுகிறது. விவசாயிகளைப் பொறுத்தவரையில் விவசாய காலங்களைத் தவிர இதர காலங்களில் இந்தத் தொழிலை பெண்கள், தாய்மார்கள் நம்பி இருக்கிருர்கள். வயல் வரப்புகளிலே உள்ள கத்தாழைக் குருத்தை எடுத்துக் கொண்டுவந்து அதை அடித்துப் பக்குவப்படுத்தி நாராகச் செய் கிருர்கள். அலுாபைபர் என்று சொல்லுகிருர்கள். அதிலிருந்து செய்யக்கூடிய பொருள்கள் பிற மாவட்டங்களுக்கு ஏற்றுமதி செய்யப்படுகின்றன. குறிப்பாக ஆலப்புழைக்கு அனுப்பப்பட்டு வருகிறது. அங்கிருந்து பக்குவப்படுத்தி கல்கத்தா போன்ற நகரங்களுக்கு அனுப்புகிருர்கள். ஒரு ஆளுக்கு சராசரி வருமானம் 8 அணு அல்லது 10 அணு கிடைக்கிறது. இந்த அளவுக்கு மக்கள் தரித்திரத்தில் இருப்பதால்தான் இந்தத் தொழிலிலே ஈடுபடுகிருர்கள். ஏற்கெனவே இருந்த வாய்ப்பும் கூட இன்றைக்குக் குறைந்து வருகிறது. இது ஏன் இப்படிக் குறைந்து வருகிறது என்று சொன்னல் இதை வாங்கி அனுப்பி வந்த வியாபாரிகள் இப்பொழுது இதற்கு நல்ல விலை கிடைப்ப தில்லை என்று சொல்லுகிருர்கள். நமது நாட்டிலே கத்தாழையை ஒரு பயிராகப் பயிரிடுவதில்லை. வேலிக்கு வைக்கக்கூடிய ஒரு பொருளாகத்தான் இது வைக்கப்பட்டு இந்த நார் கிடைக்கிறது. வெளி நாடுகளிலிருந்து, குறிப்பாக ஆப்ரிகாவில் மிகவும் நீளமுள்ள நாரையுடைய கத்தாழை பயிரிடப்படுவதாகச் சொல்லப்படுகிறது. நமது நாட்டிலே இந்த நாரின் நீளம் 2 அல்லது 3 அங்குலம்தான் இருக்கிறது. ஆனல் அங்கே 6 அல்லது 8 அங்குல நீளம் வரை இருக்கிறது என்று சொல்லுகிருர்கள். இது எந்த அளவு உண்மையோ, பொய்யோ எனக்குத் தெரியாது. வியாபாரிகள் சொல்லுகிருர்கள்.

SRI S. LAZAR : அதே நீளம் இங்கேயும் கிடைக்கிறது.

SRI K. SATTANATHA KARAYALAR : எனது நண்பர் கத்தாழையைப் பற்றிச் சொல்லுகிருர்கள். அதில் இருக்கக்கூடிய நாரின் நீளத்தைப் பற்றித்தான் நான் குறிப்பிட்டேன். அந்தத் தரம் எங்கள் மாவட்டத்தில் இல்லை. இதர மாவட்டங்களில் கிடைக்கிறது என்று சொன்னல், வெளி நாடுகளிலிருந்து தருவிப்

[Sri K. Sattanatha Karayalar] [10th March 1961

பதை நிறுத்தவேண்டும். நமது பொருள்களுக்குச் சரியான விலை கிடைக்கவில்லை என்பதைச் சொல்லுகிறேன். சர்க்கார் இதைக் கவனிக்கவேண்டும். நேற்று ஒரு கேள்விக்குப் பதில் சொல்லும் பொழுது உள் துறை அமைச்சர் இவைகள் எல்லாம் கவனிக்கப் பட்டு வருகிறது என்று பொதுவாகப் பதில் சொன்னார்கள். தொழில்துறை அமைச்சர் அவர்கள் பதில் சொல்லுவார்கள் என்று எதிர்பார்த்தேன். என்னுடைய மாவட்டத்தில் இப்படிச் சொன்னால் சிரிப்பார்கள். ஏனென்றால் அதற்கு அங்கே எந்தவித மான பாதுகாப்பும் இல்லை. ஊக்கமும் கொடுப்பது இல்லை. வேலியில் வளர்க்கூடிய பொருளாகத்தான் இந்தக் கத்தாழை அங்கு கிடைக் கிறது. வெளி நாட்டிலிருந்து நல்ல கத்தாழையைக் கொண்டு வந்து எங்கள் மாவட்டத்தில் பரப்பினால் நல்ல முறையில் வளரும். அதனால் இந்தத் தொழிலும் நல்ல முறையில் வளர முடியும். இது ஒரு அழகுப் பொருள், அதாவது க்யூரியாஸ் என்று சொல்லக் கூடிய பொருள் இல்லை. இதை உபயோகித்து கயிறு செய்யக் கூடிய ஒரு தொழிலை ஏற்படுத்தலாம். மக்கள் வேறு ஏதாவது வேலை செய்துவிட்டு மற்றொரு பகுதி நேரத்தைச் செலவிடுவதற்கு உள்ள வாய்ப்பு இந்தத் தொழில் மூலம் உண்டாகும். இது போன்று என்னென்ன தொழில்கள் எந்தெந்த மாவட்டத்தில் இருக்கின்றன என்பதைப் பார்க்கவேண்டும். வேலையில்லாத் திண்டாட்டம் அதிகரித்துக்கொண்டே வருகிறது. ஓரளவு இதைச் சமாளிப்பதற்கு இந்தத் தொழில்கள் பயன்படும். நாட்டிலே ஏற்கெனவே இருக்கக்கூடிய குடிசைத் தொழில்கள் எந்த அளவு நமது சுய தேவையைப் பூர்த்தி செய்துள்ளன, அவைகளை இணைப்பது எப்படி என்று ஆலோசித்து முடிவுகள் எடுக்க வேண்டும். நமது மாகாணத்திற்கு மட்டும் முடிவு எடுத்தால் போதாது. அகில இந்திய ரீதியில் எடுத்தால்தான் பலன் கிடைக்கும். லன் ஹெம்பு பைபர் மூலம் எங்கள் பகுதியிலே டிரக்கெட்டுகள் முதலியவை செய்கிறார்கள். மந்திரி அவர்கள் நேற்று பதில் சொல்லும்பொழுது, அப்படிச் செய்வதாகத் தெரிய வில்லை என்று சொன்னார்கள். உண்மையிலேயே நான் வருத்தப் படுகிறேன். எங்கள் பகுதியிலே செய்யக்கூடிய இந்தப் பொருள் களை எல்லாம் பார்த்துவிட்டு, இங்கே சட்டசபை அங்கத்தினராக இருக்கும் ஒரு நண்பர், எங்கள் பகுதிக்கு அனுப்பிக் கொடுங்கள் என்று சொன்னார். தோலிலே மற்ற மாவட்டங்களில் செய்யப் படுகிறது. ஆனால் அதன் விலை அதிகம். தண்ணீர் இறைக்க கமலைக்கு இதை உபயோகப்படுத்துகிறோம். இது பல மாவட்டங் களிலே பல பெயரால் அழைக்கப்படுகிறது. எங்கள் மாவட்டத்தில் இதைத் துறுத்தி என்று சொல்லுகிறார்கள். கமலையில் கட்டும் இந்தப் பகுதி, தோல் எத்தனை காலம் வேலை செய்யுமோ அவ்வளவு காலம் இதுவும் செய்யும். விலையோ, தோலைப் பார்க்க நாலில் ஒரு பங்கு விலைதான். ஆகவே இந்தத் தொழிலை ஊக்கு விக்கும் முறையிலே, இந்தத் தொழிலை எவ்விதத்தில் உபயோகிக்க முடியும் என்று பார்க்கவேண்டும். இம்மாதிரிச் சிறுசிறு குடிசைத் தொழில்களை எவ்விதங்களிலெல்லாம் பயன்படுத்தலாம் என்று சர்க்கார் பரிசீலிக்க வேண்டியது அவசியம்.

11-30 a.m.

10th March 1961] [Sri K. Sattanatha Karayalar]

அடுத்தபடியாக சொல்லப்படுவது :—எங்கள் மாவட்டத்தில் நடுவயல் ஆராய்ச்சிக்கூடம் என்கிற ட்ரெயினிங் சென்டர் இருக்கிறது. இந்த ஆராய்ச்சிக்கூடத்தால் பலன் இல்லை. ஏனெனில், வெறும் தொழில் தெரியாதவர்களுக்கு ட்ரெயினிங் சென்டர் என்றால், அத்தொழிலை எப்படிப் பாதுகாப்பது என்பதைப் பார்க்காமல் இருப்பது சரியல்ல. தொழிலை அபிவிருத்தி செய்ய ட்ரெயினிங் சென்டர் இருந்தால் போதாது; தொழிலுக்குப் பாதுகாப்பு அளிப்பது எப்படி என்று பார்க்கவேண்டும், அதற்கான நடவடிக்கைகளை எடுக்கவேண்டியது அவசியம்.

அங்கே காயர் இண்டஸ்ட்ரீஸுக்கும் நிறைய வாய்ப்பு இருக்கிறது. அதற்கும் ஊக்கம் கொடுக்கும் முறையில், ஏதாவது செய்ய வேண்டும். வாசனைத் திரவியங்கள் தயாரிக்க வேண்டிய பல பட்டைகள், பொருள்கள் அங்கே கிடைப்பதால் அவற்றைப் பயன்படுத்தி, தொழிலை அபிவிருத்தி செய்ய ஊக்கமளிக்க வேண்டும். அதனால் வேலையில்லாத் திண்டாட்டம் வெகுவாகக் குறையும்.

அடுத்ததாகப் பட்டுப் பூச்சி வளர்ப்பு. இந்த பட்ஜெட்டிலே, ரீலிங்குக்கு என்று நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதை வரவேற்கிறேன். கிணறு வெட்ட நிதி கொடுக்கப்பட்டுள்ளது. அதையும் வரவேற்கிறேன். அதை நல்ல முறையிலே, லிபரலேஸ்டு முறையிலே கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். பட்டுப் பூச்சி வளர்க்க மல்பரி அவசியம். அந்தச் செடிகள் மழை இல்லாததால், உலர்ந்து போகின்றன. அப்படி அவைகள் வீணாகிப் போய்விடாமல் இருக்கத் தக்க பாதுகாப்பு கொடுக்கவேண்டும். பயிரிடும் செடிகள் பாழ்பட்டுவிட்டால், அவைகளுக்குப் பாதுகாப்பு அளிக்க இவைகளுக்காவது க்ராப் இன்ஷூரன்ஸ் கொண்டு வரவேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன்.

இன்னொன்று குறிப்பாகச் சொல்ல விரும்புகிறேன். இதிலே கூட்டுறவு சங்கங்கள் மூலமாகச் செய்வதில் 'பாட்டரீஸ்' சட்டி பானை செய்வது ஒரு தொழில். அது ஒரு சாதாரணக் குடிசைத் தொழில். அதைக் கூட்டுறவு இயக்கத்தில் கொண்டு வந்தோம். பல நண்பர்களுக்குத் தெரியும் அதிலே இன்று நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. தனியாகச் சட்டி பானை செய்து வியாபாரம் செய்தால் அதற்கு விற்பனை வரி கிடையாது. ஆனால், கூட்டுறவு சங்கத்தில் சேர்ந்து விற்பனை செய்தால், அதற்கு வரி உண்டு. மேலும், ஒரு பானை 13 அணா என்றால், கூட்டுறவு சங்கத்தில் சேர்ந்திருப்பதற்காக அதை அவன் ஒரு அணா கூட்டி, விற்க வேண்டியிருக்கிறது; சங்கத்தில் சேர்ந்த அபராதத்திற்காக அப்படி விற்க வேண்டியிருக்கிறது. அதற்கு ஏன் விற்பனை வரி என்று தெரியவில்லை. இதைத் தயவுசெய்து சர்க்கார் பரிசிலனை செய்து, குடிசைத் தொழிலாக இருக்கக்கூடியவை கூட்டுறவு இயக்கத்தில் வந்தாலும், அவைகளை உற்சாகப்படுத்தும் முறையில் விற்பனை வரியை விலக்க வேண்டும் என்று வலியுறுத்திச் சொல்ல விரும்புகிறேன். இத்துடன் என் உரையை முடிக்கிறேன்.

MR. SPEAKER இன்னும் ஆறு அங்கத்தினர்கள் பேச இருக்கிறார்கள். ஆகையினால், இனிமேல் பேசுகிறவர்களுக்குப் பத்து, பத்து நிமிஷம் கொடுக்கிறேன். கனம் திரு. கல்யாணசுந்தரம் அதன் பிறகு பேசுவார்கள்; அவர்களுக்குச் சில நிமிஷங்கள் அதிகம் கொடுக்கவேண்டும். ஆகவே இனிமேல் பேசுகிற அங்கத்தினர்கள் 10 நிமிஷம் பேசலாம். அதற்குள்ளே உட்கார்ந்தால் தப்பில்லை. அதற்கு மேல் வேண்டாம் என்று சொல்லுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN: கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மானியத்தின் பேரில் கொடுக்கப்பட்டிருக்கும் வெட்டுப் பிரேரணையை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். நம் ராஜ்யத்திலே தொழில் அபிவிருத்தி அடியோடு ஏற்படவில்லை என்று சொல்ல முடியாது. ஓரளவுக்கு ஏற்பட்டிருக்கிறது. ஆனால், இந்தப் பதின்மூன்று ஆண்டு காலத்திலே எந்த அளவுக்கு அபிவிருத்தி உண்டாகியிருக்க வேண்டுமோ, அந்த அளவிற்கு ஏற்பட்டிருக்கிறதா என்பதைப் பார்க்க வேண்டும். அப்படிப் பார்க்கும் நேரத்திலே, அதைக் கனம் அமைச்சரவர்களும் ஒப்புக்கொள்வதற்காக அவர்களைப் பாராட்டுகிறேன். ஆனாலும், என் அபிப்பிராயம் என்னவென்றால், இன்றைக்கு மிகமிக அத்யாவசியமான தொழில்களைச் சர்க்காரே எடுத்து நடத்தவேண்டும் என்பதுதான். அப்படிச் சொல்லும் நேரத்திலே, நேற்றையதினம் கூட கனம் நிதியமைச்சரவர்கள், 'பெரிய அளவிற்குத் தொழில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது; கிராமத்தில் உள்ளவர்களெல்லாம் நகரங்களுக்குக் குடியேறுகிறார்கள் என்பதைப் பார்க்கும்போது, அத்தனை தொழில் அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறது' என்று சொன்னார். விவசாய அபிவிருத்திக்கு வேண்டிய நவீனக் கருவிகளை நாம் கொடுக்காததனால், கிராமத்தில் உள்ளவர்கள் அங்கே விவசாய அபிவிருத்தி இல்லாத நிலைமையில், நகரப் புறங்களில் ஏதாவது வேலை கிடைக்குமா என்று குடியேறுகிறார்கள். மூன்றாவது திட்ட காலத்தில் விவசாய அபிவிருத்தி ஏற்படவேண்டுமானால், உணவுப் பொருள்கள் அதிகப்படவேண்டும் என்று சொல்லும் நேரத்தில், போதுமான விவசாயத்திற்கு வேண்டிய நவீனக் கருவிகள் உற்பத்தி செய்தோ, இறக்குமதி செய்தோ கொடுக்கப் போகிறோமா என்று பார்க்க வேண்டும். மூன்றாவது திட்ட காலத்தில், திட்டம் பரிபூரணமாக நிறைவேற்றப்படவேண்டுமானால், உணவுப் பொருள்கள் மேன்மேலும் அதிகப்படியாக உற்பத்தியாக வேண்டுமானால், அவை குறைந்த விலையில் கிடைக்கச் செய்ய வேண்டுமானால், வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க வேண்டுமானால், உண்மையிலேயே, விவசாயத்திற்கு வேண்டிய கருவிகளான ட்ராக்டர்கள், புல் டோசர்கள் முதலியவைகள் நம் ராஜ்யத்தில் கிடைக்கச் செய்தாக வேண்டும். நம் ராஜ்யத்தில் பல ஜில்லாக்களில் கிணறுகள் வெட்டப்படுகின்றன. பல இடங்களில் பாறைகளாக இருக்கின்றன. ஆகவே, அதற்கு வேண்டிய ராக் ட்ரில்லிங் மெஷின்கள், பம்பு செட்டு கருவிகள், அதற்கான உப கருவிகள் இவைகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளை பெரிய அளவில் நாம் ஆரம்பிக்க

10th March 1961] [Sri V. K. Kothandaraman]

வேண்டும். அதுபோன்ற தொழிற்சாலைகள் ஆரம்பிக்காத வரையில், மூன்றுவது திட்டம் போட்டாலும், இன்னும் எவ்வளவு திட்டங்கள் போட்டாலும், விவசாய அபிவிருத்தி என்பது, உணவு உற்பத்தி என்பது வாயளவில்தான் சொல்லலாம், ஏட்டள வில்தான் எழுதலாம்; உண்மையாக உதவி செய்தவர்களாக ஆக மாட்டோம்.

கரண்ட் சம்பந்தமாக, இந்த ராஜ்யத்திலே விவசாயத்திற்கு எவ்வளவு மின்சாரம் கொடுத்திருக்கிறோம், பம்பு செட்டுகள் இருக் கின்றன பார்த்தீர்களா என்று சொல்லிவிட்டால் மட்டும் போதாது; இன்றையதினம் பம்பு செட்டு கள்ள மார்க்கெட்டில் வாங்கப்படுகிறது; கள்ள மார்க்கெட்டில் மோட்டார்கள் வாங்கப் படுகின்றன. அதற்குத் தேவையான உப கருவிகள் வாங்கக்கூடிய அளவுக்குக் கிடைக்கவில்லை. அதையெல்லாம் சர்க்கார் கவனிக்க வேண்டும். எந்த அளவுக்குத் தேவை யிருக்கிறதோ அந்த அளவுக்கு அதிகப்படியாக தொழிற்சாலைகளை மேன்மேலும் நாம் வளர்ப்பதில் கவனம் செலுத்தவில்லையென்றால், விவசாய அபி விருத்தி ஏற்படக்கூடிய நிலைமை ஏற்படாது என்பதுதான் நான் இந்த நேரத்திலே ஞாபகப்படுத்த விரும்புவது.

இன்றைக்கு இரும்புத் தொழிற்சாலை, நிலக்கரி உற்பத்தியெல்லாம் நடக்க கவனம் செலுத்தி வருகிறோம். அதே போன்று, பல ஜில்லக்களிலேகூட அது போன்ற வாய்ப்புகளும், வசதிகளும் இருப்பதாகச் சொல்லுகிறார்கள். வட ஆற்காடு மாவட்டத்தில் பல இடங்களில் நிலக்கரி, இரும்பு இவை இருப்பதாகவும், கண்ணா டிக்கு வேண்டிய கண்ணாடிக் கற்கள் இருப்பதாகவும் சொல்கிறார் கள். இன்றைக்கு வாலாஜா தாலுக்காவிலிருந்து அம்மாதிரிக் கற்கள் திருட்டுத்தனமாக லாரிகளில் சென்னைக்குக் கொண்டு வரப்பட்டு, வேறு விதமாக பம்பாய், கல்கத்தா போன்ற இடங்க ளுக்குக் கொண்டு போவதாகச் சொல்லப்படுகிறது. அதேபோன்று பல மூலப் பொருள்கள் கிடைப்பதாக ஜியாலஜிகல் ரிப்போர்ட்டும் மற்ற ரிப்போர்ட்டுகளும் கொடுத்திருப்பதாகத் தெரிய வருகிறது. ஆனால் சொல்லுகிறார்கள் கொஞ்சம்தானே கிடைக்கிறது என்று. அதை எடுத்து என்ன செய்வது என்றும் சொல்லுகிறார்கள். இன்றைக்கு சிறிய தொழிற்சாலைகளை ஆரம்பித்தாலும்கூட அதைப் பயன்படுத்தக்கூடிய அளவுக்கு அதை நாம் உபயோகப் படுத்த கவனம் செலுத்தப்பட வேண்டும். அதே போன்று இன்றைக்கு பவர் லூம்களைக் கொண்டு வரப்போவதாகச் சொல்லு கிறார்கள். அதை இங்கு உபயோகப்படுத்த வேண்டுமா வேண்டாமா என்ற பிரச்னை இருக்கிறது. நேற்றைக்கு முந்திய ஹிந்துப் பத்திரிகையைப் பார்த்தால் தெரியும், ஆந்திராவில் பவர் லூம்களை உபயோகப்படுத்திய காரணத்தால் லட்சக்கணக்கான வர்களுக்கு வேலை இல்லாமல் திண்டாடக்கூடிய நிலைமை ஏற்பட்டி ருக்கிறது என்று எழுதி இருக்கிறார்கள். சுமார் இருபது கைத் தறிகள் உற்பத்தி செய்யக்கூடிய துணியை ஒரு பவர் லூமால் உற்பத்தி செய்ய முடியும் என்ற நிலைமை ஏற்படுகிறது. அந்த நிலை

[Sri V. K. Kothandaraman] [10th March 1961

ஏற்பட்டால் ஐந்து லட்சம் கைத்தறி நெசவாளர்களுடைய நிலைமை என்னவாகும்? இந்த ராஜ்யத்தில் அதிலும் இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன் ஏற்றுமதி செய்யப்பட்டதை விட இப்பொழுது ஏற்றுமதி குறைந்திருக்கிறது. ஆகவே பவர் லூம்களை இங்கே கொண்டு வருவதன் மூலம் வேலை இல்லாத் திண்டாட்டத்தை இன்னும் அதிகரிக்கக்கூடிய நிலைமை ஏற்படும். ஆகவே அதைக் கொண்டு வருவதற்கு முன்பாக அவர்கள் எல்லோரையும் மீண்டும் கலந்து ஆலோசனை செய்து அந்தக் காரியத்தில் ஈடுபட வேண்டும் என்பதைத் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். அது மாத்திரம் அல்ல. கைத்தறி நெசவுத் துணிகளை இன்றைக்கு சர்க்கார் கைத்தறி கூட்டுறவு சங்கங்கள் மூலமாக வாங்கி அதைக் கொள்முதல் செய்து வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக்கொண்டால் அதுதான் உசிதமாக இருக்கும். அதேபோன்று இப்பொழுது ப்ளீடிங் மெட்ரூஸ் என்ற ஒருவித ரகத் துணி இருக்கிறது. அது தனி முதலாளிகளால் தனிப்பட்ட முறையில் ஏற்றுமதி செய்யப்பட்டதால், அதுவும் கீழ்த்தரமான துணியை ஏற்றுமதி செய்த காரணத்தால் அதன் கிராக்கி அந்நிய நாடுகளில் குறைந்து போய்விட்டது. நமது ராஜ்யத்திலுள்ள பல லட்சக்கணக்கான முதலாளிகள் லாபம் சம்பாதிக்க வேண்டும் என்ற காரணத்தால் இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது. அதனால் கைத்தறி நெசவாளர்கள் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அதற்குக் காரணம் தனியார் துறையில் ஏற்றுமதி செய்ய அனுமதித்ததுதான். ஆகவே இன்றையதினம் சர்க்காரே கொள்முதல் செய்து அவைகளை ஏற்றுமதி செய்வதன்மூலம் அந்தத் தொழிலைப் பாதுகாக்க முடியும் என்பதை இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதேபோன்று தோல் பதனிடும் தொழில். தோல் பதனிடும் தொழில் சுமார் 75 சத விகிதம் இந்த நாட்டில்தான் செய்யப்படுகிறது. இப்பேர்ப்பட்ட ஒரு தொழில் அந்நியச் செலவாணியை சம்பாதித்துக் கொடுக்கக்கூடிய தொழிலாக இருக்கிறது. அந்தத் தொழில் நாளுக்கு நாள் க்ஷீணித்துக்கொண்டு வருகிறது. அந்தத் தொழில் அபிவிருத்தி அடைவதற்கு அதற்குக் கடன் உதவி கொடுக்கக்கூடிய அளவில் இருக்கிறது. இதைப்பற்றி கேள்வி கேட்கும்போது கனம் தொழில் அமைச்சர் அவர்கள் அதற்கு பதில் சொல்லும்போது, அதாவது எவ்வளவு பேர்களுக்குக் கடன் உதவி கொடுக்கப்பட்டிருக்கிறது என்று கேட்டதற்கு, சுமார் 586 பேர்களுக்குக் கடன் கொடுக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னார். ஆனால் ஒன்று அல்லது இரண்டு பேர்களுக்குத்தான் கொடுத்திருப்பதாகத் தெரிகிறது. மற்றவர்களுக்குக் கிடைக்கவில்லை. மற்றும் உப கேள்விகள் கேட்டதற்கு தனிப்பட்ட வேறு கேள்வி கேட்டால் பதில் சொல்லுகிறோம் என்று சொன்னார். அப்படி வேறு கேள்வி எழுதி அனுப்பினேன். ஆனால் அந்தக் கேள்வி அனுமதிக்கப்படவில்லை என்பதையும் இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

10th March 1961] [Sri V. K. Kothandaraman]

குறிப்பாக இதை ஏன் சொல்லுகிறேன் என்றால் இந்தத் தொழிலைப் பாதுகாப்பதற்கு, இந்தத் தொழிலை அபிவிருத்தி செய்வதற்குப் போதுமான அளவில் நிதி உதவி கிடையாது. அதனால் அதற்கு வேண்டிய போதுமான நிதி ஒதுக்கவேண்டும் என்பதை இந்த நேரத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

இது போன்று ரப்பர். இதைப் பெரிய அளவில் அபிவிருத்தி செய்வதற்கு கவனம் செலுத்தப்பட வேண்டும். இன்றைக்கு சில்க் டிமான்ஸ்ட்ரேஷன் என்று சில்க் பாரம்கள் எல்லா ஜில்லாக் களிலும் இருந்தாலும் அது போதாது. சில்க் துணிகளைப் போதிய அளவுக்கு உற்பத்தி செய்ய வேண்டும். இதற்கு முன் குடியாத் தத்தில் இண்டர் நேஷனல் பேமஸ் மில் பெரிய அளவில் தயார் செய்து வந்தார்கள். சர்வ தேச ரீதியில் அது நடைபெற்று வந்தது. என்ன கொடி வேண்டுமானாலும் அதைத் தயார் செய்து கொடுக்கக்கூடிய அளவில் அது நடைபெற்று வந்தது. சர்க்கார் எதைக் கேட்டாலும் அந்த அளவுக்குத் தயார் செய்து கொடுக்கக் கூடிய அளவில் சிறந்த மில் அது. போட்டா போட்டியின் காரண மாகவும் சில ஊழல்கள் காரணமாகவும் சில நாட்களாக அது வேலை செய்யவில்லை. பல வருஷங்களாக அது மூடப்பட்டிருக் கிறது. இன்னும் ஆரம்பிக்கவில்லை. ஆனால் ஆரம்பிக்கப்போவ தாகச் சொல்லப்படுகிறது. அந்த மில்லை சர்க்காரே எடுத்து நடத்த முன் வந்தால் ரொம்பவும் நலமாக இருக்கும். இன்னும் இரண்டு நிமிஷங்கள் கொடுத்தால் முடித்து விடுகிறேன். (மணி அடிக்கப்பட்டு பேச்சு நிறுத்தப்பட்டது.)

**SRI S. LAZAR**: கனம் சபாநாயகர் அவர்களே, தொழில் துறை நிர்வாக மானியக் கோரிக்கையை வரவேற்று எனது கருத் துக்களைச் சொல்ல நான் விரும்புகிறேன். பொதுவாக நாட்டி னுடைய பொருளாதார அபிவிருத்திக்கு எந்த அளவு தொழில்கள் உதவுகின்றன என்பதை எல்லா அங்கத்தினர்களும் எடுத்துச் சொன்னார்கள். அதிலும் குறிப்பாகத் தமிழ் நாட்டில் பொருளா தாரம் மேலும் மேலும் ஓங்கவேண்டுமானால் நிச்சயம் அதிகப் படியான தொழில் ஏற்பட வேண்டும். இப்பொழுது ஏற்பட்டிருப் பதோடு இன்னும் அதிகப்படியாக ஏற்பட வேண்டும் என்ற கருத்தினை எல்லோரும் எடுத்துச் சொன்னார்கள். ஆனால் எதிர் கட்சியில் பேசிய ஒரு சில அங்கத்தினர்கள் ஏதோ தொழில் எல்லாம் தயாராக இருக்கின்றன போலும் அதை எடுத்துக் கொள்ள அரசாங்கம் தவறிவிட்டது போலும் கருத்துப்பட இங்கே பேசினார்கள். அப்படிப் பேசுவதோடுகூட வெட்டுப் பிரேரே பணையையும் கொடுத்திருக்கிறார்கள். அரசாங்கத்தைப் பொறுத்த வரைக்கும் அதற்கான முயற்சி செய்வதில் அமைச்சர்களோ அல்லது அவர்களைச் சார்ந்திருக்கக்கூடிய அதிகாரிகளோ எந்த விதத்திலும் உற்சாகம் குறைந்தவர்கள் அல்ல என்பதையும் அவர் களே எடுத்துச் சொன்னார்கள். அப்படிச் சொல்லி அவர்களுக்குப் பாராட்டும் தெரிவித்தார்கள். தொழில்களை மேலும் மேலும் அமைக்க வேண்டும் என் றுசொன்னால் நிச்சயமாக மூன்று காரி யங்களைக் கவனிக்க வேண்டியதாக இருக்கிறது.

[Sri S. Lazar] [10th March 1961

முதலாவதாக அதற்கான ஆராய்ச்சித் துறை. அந்த தொழில் நுட்ப ஆராய்ச்சித் துறைக்கு வேண்டிய ஏற்பாடுகளை நிச்சயமாக நல்ல முறையில் செய்ய வேண்டும். அப்படி ஏற்படக் கூடிய அளவுக்கு நமக்கு டெக்னிகல் அட்வைஸ் கிடைக்க வேண்டும். அப்பொழுதுதான் தொழில் அதிகப்படியாக ஏற்படுவதற்கு வசதி உண்டாகும். அத்துடன்கூட தொழிலை ஆரம்பிப்பதற்கு சிலர் முன்னுக்கு வரவேண்டியதாக இருக்கிறது. பொதுவாக இம்மாதிரி துறையை எடுத்துப் பார்த்தால் அதைப் பொறுத்த வரைக்கும் இப்பொழுது அரசாங்கம் கவனம் செலுத்திக் கொண்டு வருகிறது என்று சொன்னாலும் இன்னும் அதிகப்படியான கவனம் செலுத்த வேண்டியது அவசியமாக இருக்கிறது என்பதை இங்கு வலியுறுத்துச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஓரளவு பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது, அதற்கான நிபுணர்கள் அகப்படவில்லை என்று சொல்லி வருகிறார்கள். இனிமேலாவது இப்பேர்ப்பட்ட நெருக்கடி ஏற்படாமல் அதிக நிபுணர்கள் கிடைக்கக் கூடிய அளவுக்கு வெளிநாட்டிலிருந்து ஏராளமான நிபுணர்களை வரவழைக்கலாம். நம் நாட்டிலேயே பல திறமை வாய்ந்தவர்கள் இருக்கிறார்கள். அப்படிச் சொல்லக்கூடிய அளவில் தமிழ் நாட்டில் அநேகம் திறமை வாய்ந்தவர்கள் இருக்கிறார்கள். அவர்களையாவது வெளிநாடுகளுக்கு அனுப்பி அதில் நிபுணத்துவம் அடைந்து வரும்படி அனுப்பலாம். அதற்கு வேண்டிய முயற்சியையும் எடுத்துக் கொள்ள வேண்டும். பணம் ஒதுக்கியும் டெக்னிகல் அட்வைஸ் கிடைக்கக்கூடிய அளவுக்கு வாய்ப்பு ஏற்படுவதற்கு அரசாங்கம் அதிகப்படியான முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அப்படி நிதி ஒதுக்கும்போது இதற்கு முன் பேசியவர்கள் சொன்னார்கள், ஒதுக்கப்பட்ட நிதி பூராவும் செலவிடப்படவில்லை என்று. தமிழ்நாட்டைப் பொறுத்த வரைக்கும் நிதி படைத்தவர்கள் மிகவும் குறைவு. ஆகவே அரசாங்கம் அதிகப்படியாக நிதியை சேகரித்துக் கொடுக்க வேண்டியதான அவசியம் ஏற்படுகிறது. அதைப் பொறுத்த வரைக்கும் அரசாங்கம் ஒரு திட்டத்தை வகுத்திருக்கிறார்கள். அதாவது பேசிக் இண்டஸ்ட்ரிஸ், ஆதாரத் தொழில் எதையெல்லாம் அரசாங்கம் எடுத்து நடத்துவது, எந்தெந்த தொழில்களை எடுத்து நடத்துவது என்று எல்லாம் முடிவு செய்திருக்கிறார்கள். அதுதான் மூன்றாவது காரணமாக எடுத்துச் சொல்லப் பட்டது. அதைப்பற்றியும் நாம் நன்றாக கவனிக்க வேண்டியதாக இருக்கிறது. எந்த அளவுக்கு வசதியை அளிக்கிறார்களோ அந்த அளவுக்கு அதை எடுத்து நடத்துவதற்கு ஒருவரும் முன்வருவதில்லை. எவ்வளவு தொழில்களை ஆரம்பித்து நடத்த அரசாங்கம் உதவி செய்ய முன்வந்தாலும் அதை எடுத்து நடத்துவதற்கு யாரும் முன்வருவதில்லை என்று அவர்கள் அடிக்கடி சொல்லிக் கொண்டு வருகிறார்கள். அப்படிப்பட்ட நிலைமை இருக்கும்போது அரசாங்கத்தையே குறை கூறிக்கொண்டிருக்கக்கூடிய அங்கத்தினர்கள் ஓரளவு பொதுமக்களைத் தட்டி எழுப்ப முயற்சி செய்தால் அது நல்ல பலனைத் தரும் என்று சொல்ல விரும்புகிறேன். இன்னொன்று. இந்த மாநிலத்திலே பெரிய பல தொழில்களை ஆரம்பிப்பதற்கு வேறு ராஜ்யத் தொழில் அதிபர்கள் நினைக்கிறபோது

10th March 1961] [Sri S. Lazar]

கூட இவர்களுடைய கட்சிக் கொள்கையான வடநாடு தென்னாடு என்பது அறிந்து—தயங்கிவிடுகிறார்கள். ஒரு சிலர் முன்னுககு வருகிறபோதுகூட இவர்களுடைய கொள்கை அவர்களைப் பின்னுக்கு நிற்கச் செய்கிறது. இதையும்கூட சர்க்காரைக் குறை சொல்கிற எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். இதை எல்லாம் உணர்ந்து பார்த்தார்கள் என்றால் இந்தமாதிரியாகக் குறை சொல்வதை இனி நிறுத்திக் கொள்வார். கள் என்று நினைக்கிறேன்.

இப்போது ஏற்படுத்தப்பட்டிருக்கும் தொழில்களைப் பொறுத்த வரையிலும் ஒரு சில பெரிய முட்டுக் கட்டைகள் இருப்பதை எனக்கு முன்னால் பேசியவர்களும் எடுத்துச் சொன்னார்கள். அரசாங்க இலாகா அறிக்கையிலும் அது சுட்டிக் காட்டப்பட்டு வருகிறது. குறிப்பாக ரெயில்வே போக்குவரத்து வசதிகள் போதுமான அளவு இங்கே பெருகாததுதான் பெரிய தடை. இந்தத் தடையை நீக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத் திருக்கிறது என்பதை விளக்க வேண்டும். மத்திய சர்க்காரிலே பேசுகின்றபோதுகூட இதற்குச் சாதகமான வார்த்தைகள் வர வில்லை. தமிழ்நாட்டைப் பொறுத்தவரையிலும், ஏன் கேரளாவும் கூட—ஆந்திரத்தையும் சேர்த்துக் கொள்ளலாம் என்று நிபுணர்கள் சொல்கிறார்கள்—இந்த மூன்று ராஜ்யங்களிலும் தொழில் வளர்ச் சிக்குப் பெரிதும் தடையாக இருப்பது ரயில்வே போக்குவரத்துத் தான். ரெயில்வே போக்குவரத்து வசதிகளை அதிகப்படியாக ஏற் படுத்தித் தர தக்க வழிவகை செய்ய வேண்டும். மற்ற ராஜ்யங் களின் நிலைமையைப்பற்றி நான் சொல்லவில்லை. இந்த மூன்று ராஜ்யங்களையும் பொறுத்தவரையிலாவது ரயில்வே போக்கு வரத்து வசதிகளை அதிகப்படுத்தி விஸ்தரித்துத் தருவதோடுகூட வாகன் வசதிகளையும் அதிகப்படுத்தித் தரவேண்டும் என்று மத்திய சர்க்காரிடம் வலியுறுத்தவேண்டும்.

தொழில் வளர்ச்சிக்கு இன்னொரு பெரிய முட்டுக்கட்டையாக இருப்பது மின்சாரம் என்று சொன்னார்கள். அரசாங்கத்தின் அறிக்கையிலும்கூட இதுபற்றி குறிப்பிடப்பட்டு இருக்கிறது. மின்சாரத்தின் தடையினால் தொழில் தேக்கம் ஏற்படும் என்று சொல்லியிருக்கிறார்கள். இந்தச் சங்கடம் நமக்கு ஏற்படாமல் இருப்பதற்கு அவர்கள் இரண்டு வழிகளைச் சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் சொல்லி இருக்கக்கூடிய முதல் யோசனை நெய்வேலியில் இருந்து இப்போது எடுப்பதற்குத் திட்டமிட்டிருக்கிற நிலக்கரி அளவை இன்னும் ஒரு பங்கு சேர்த்து எடுத்தால் அதைக் கொண்டு பவர் உற்பத்தி செய்து கொள்வதற்கு வாய்ப்பு ஏற்படும் என்று சொல்லி இருக்கிறார்கள். அதற்குரிய நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று சொல்லிக் கொள்கிறேன்.

இன்னொரு யோசனை. இந்தப் பிராந்தியத்தில் அணுசக்தி மின் நிலையத்தை ஏற்படுத்தினால் அதைக் கொண்டும் போது மான அளவு மின்சக்தியைப் பெறலாம் என்றும் குறிப்பிடப்பட் டிருக்கிறது. இதுபற்றியெல்லாம் நன்றாக யோசனை செய்ய வேண்டும் என்பதாகத் தெரிவித்துக் கொள்கிறேன்.

[Sri S. Lazar] [10th March 1961

நம் ராஜ்யத்தில் சென்னையிலும் இதர இடங்களிலும் ஏராள மான தொழில்கள் ஏற்பட்டு வருகின்றன. சென்னையைப் பொறுத்த வரையிலும் ஒரு குறை சொல்கிறார்கள். அவர்களுக் குத் தேவையான நீர் வசதி குறைவாய் இருப்பதாகக் கூறப்படு கிறது. அதையும் கவனிக்க வேண்டும். மற்றொன்று தொழில்கள் ஓரிடத்தில் குவியலாக ஏற்படுவதற்குப் பதிலாக பரவலாக வேண்டும் எனறும் சொல்கிறார்கள். திருச்சியைப் பொறுத்த வரைக்கும் கன ரக மின்சார இயந்திரத் தொழிற்சாலையை ஏற் படுத்துவதற்குப் போதுமான வசதிகள் இருப்பதாக நான் அறிகிறேன். ஆனல் கேரளத்தில் இத் தொழிற்சாலை ஏற்பட வேண்டும் என்று கேரள கவர்னர் குறிப்பிட்டிருக்கிறார்கள். இது பற்றி நம் மாநில அமைச்சர் கொஞ்சம் ஜாக்ரதையாக இருப்ப துடன்—அத்தொழிற்சாலை நம் மாநிலத்தில் ஏற்படுவதோடுகூட அதைத் திருச்சியில் ஏற்படுத்துவதற்கு தக்க வழிவகைகளைக் காணவேண்டும் என்பதாகக் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* SRI T. KARIA GOUNDER : கனம் சபாநாயகர் அவர்களே, இன்றையதினம் கொண்டுவரப்பட்டுள்ள தொழில் துறை மானி யத்தை ஆதரித்து ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். தொழில் துறையில் முன்னேற்றமே காணவில்லை என்று தொழில் துறையில் மிகவும் புகழ் பெற்றிருக்கும் அமைச்சருக்கு எதிரி லேயே எதிர்க்கட்சி அங்கத்தினர்கள்—(ஸ்ரீ கே. அன்பழகன் : தைரியத்தோடு சொல்கிறார்களே என்கிறீர்களா ?) தைரியத்தோடு சொல்கிறார்களே என்று நாங்களும் தைரியத்தோடுதான் கேட் கிறோம். பிரிட்டிஷ் ஆட்சி காலத்தில் வருடம் 60 கோடி ரூபாய்க்கு இந்த நாட்டில் இறக்குமதி செய்து கொண்டிருந்த துணிக்கு இன்றையதினம் பல நூறு கோடி ரூபாய்க்கு நாம் வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்கிற நிலையை அடைந்திருக்கிறோம் என்றால் இது முன்னேற்றம் இல்லையா? ஆனல் ஒன்று கொஞ்சம் தரம் குறைந்து வருகிறது. தொழில்துறை வளரவில்லை என்று இங்கே குறை சொல்கிற அங்கத்தினர்கள் பொதுக்கூட்டங்களில் பேசுகிற போது இந்தத் தரம் குறையாமல் பார்த்துக்கொள்ளவேண்டும் என்று தொழிலாளர்களிடத்தில் சொல்லவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

இன்றையதினம் இந்த நாட்டில் ஓடுகின்ற மோட்டார் வண்டி கள் முதல் சிறிய மின்சாரக் கருவிகள் வரையில் எல்லாம் இங்கேயே உற்பத்தி செய்கின்ற நிலையைக் கண்டிருக்கிறோம். கார் வேண்டுமென்றால்கூட க்யூவில் நிற்க வேண்டியிருக்கிறது. இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்களிலும் ஒன்றும் செய்யவில்லை. தொழில் வளர்ச்சிக்கு மின்சாரம் போதவில்லை என்பதாக வெல்லாம் சொல்லப்படுகிறது. குந்தாவில் உற்பத்தி செய்கின்ற மின்சாரமானது மேட்டுப்பாளையத்தில் இருந்து கோயம்புத்தூர் நகரம் வரைக்கும் 50 ஆயிரம் கிலோவாட் மின்சார விநியோகம் செய்ய—தொழில் துறைக்கு ஒப்பந்தம் செய்யப்பட்டிருப்பதாக

10th March 1961] [Sri T. Karia Gounder]

அறிகிறேம். கோயம்புத்தூர் ஜில்லாவைச் சீர்தூக்கிப் பார்த்தால் எந்த எந்தத் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறதென்று தெரியும். ஆனல் தனியார் துறையில் தொழில் நடத்த சர்க்கார் ஆர்வம் காட்டுகிறுர்களோ என்றும் இங்கே பேசப்படுகிறது.

12 noon.

தனியார்கள் அப்படி முன்வந்தால் உடனே தொழிலாளர் இயக்கங்கள் எல்லாம் வந்து விடுகின்றன. முதலாளிகள் ஒழிக, தொழிலாளிகள் வாழ்க என்ற முறையில் சொல்லி முட்டுக் கட்டைகள் போடுகிறுர்கள். தொழில் அமைச்சர் அவர்களும், நிர்வாகத்தை நடத்துகிற அதிகாரிகளும் நம் நாட்டில் தொழில் சச்சரவின்றி நல்ல முறையில் செயல்பட்டு வருகிறுர்கள் என்பதைக் கண்டு அவர்களை எங்களால் பாராட்டாதிருக்க முடியாது. நமது தொழிலமைச்சர் அவர்கள் இங்கு வருவதற்குமுன் எவ்வளவு வேலை நிறுத்தம் ஏற்பட்டதென்பதை நாம் அறிவோம், ஆக, அரசியல் காரணங்களுக்காக உள்ளதை ஒப்புக் கொள்ளாதிருக்கக் கூடாது என்று எதிர்க்கட்சியினரைக் கேட்டுக்கொள்கிறேன். பின்னர், சர்க்கரை ஆலை பற்றி திரு. கோவிந்தசாமி அவர்கள் குறிப்பிட்டார்கள். நம் நாடு சுதந்திரம் அடைந்து பிற்பாடுதான் இங்கு, தமிழ்நாட்டில் சர்க்கரைத் தொழில் ஆரம்பிக்கப்பட்டது. நான் ஹைஸ்கூலில் படிக்கிறபோது படித்திருக்கிறேன், வட நாட்டில் பீஹார் மாகாணத்திலும், யு.பி.யிலும் சர்க்கரை உற்பத்தி ஆங்கிலேயர் காலத்திலிருந்தே செய்துகொண்டிருந்தார்கள். சுதந்திரம் அடைந்த பிறகு தமிழ் நாட்டில் ஆரம்பித்திருக்கும் இந்தத் தொழிலைப் பெரிய அளவில் செய்திருக்கிறுர்கள், இங்கு நாள் ஒன்றுக்கு 1,000 டன்னுக்குக் குறையாமல் உற்பத்தி செய்யப்படுகிறது. மூன்றுவது திட்ட காலத்தில் 8 சர்க்கரை ஆலைகளுக்குச் சர்க்கார் அனுமதி வழங்குவதாகக் கண்டிருக்கிறது. இத்துறையில் வட ஆற்காடு பின் தங்கிக் கிடக்கிறது. எங்கள் தாலுகாவில் ஒரு சர்க்கரை ஆலை ஆரம்பிக்கப்பட்டு வேலை நடந்து கொண்டு வருகிறது. கூட்டுறவு முறையில், அதற்குத் தேவை, 7,000 ஏக்கர் கரும்பு உற்பத்தி செய்தால் போதுமானதென்று கணக்கிட்டிருக்கிறுர்கள். அந்தப் பகுதியில் மட்டும் 22,000 ஏக்கர் கரும்பு சாகுபடியை விவசாயிகள் செய்திருக்கிறுர்கள். மிகுதியுள்ள கரும்பால் உற்பத்தி செய்கிற வெல்லாம் ரொம்பக் குறைந்து போயிருக்கிறது. நம் நாடு பொருளாதார வளர்ச்சி அடைய ஒரு துறை மட்டும் முன்னேறினுல் போதாது. விவசாயிகளாகிய நாங்களும் நல்ல முன்னேற்றம் அடைந்தால்தான் தொழிலாளர்களும் முன்னேற்றம் அடைய முடியும் என்பதை எல்லோரும் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். ஸ்ரீமதி பண்டாரநாயகர் இந்தியா வந்த பிறகுதான் வெல்லம் ஏற்றுமதி தடை செய்யப்பட்டு விட்டதால் நம் நாட்டில் ஒரு மூட்டை 20, 23 ரூபாய்க்கு விற்கப்படுகிறது. சிலோன் தேசத்தில் 75 ரூபாய்க்கு விற்கப்படுகிறது. ஏனெனில் இந்த நாட்டின் விளை பொருள் அங்கு ஏற்றுமதி செய்யப்படாததையொட்டி அந்த விலைக்கு விற்கப்படுகிறது. ஆகவே, இந்தக் கரும்பு உற்பத்தி செய்யும் வெல்ல தொழில் நசித்து விடாதபடி மத்திய அரசாங்கத்தோடு பேச்சுவார்த்தை நடத்தி

[Sri T. Karia Gounder] [10th March 1961

இந்தக் கட்டுப்பாட்டைத் தளர்த்த வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளுமாறு அமைச்சரவையையும், குறிப்பாக தொழில் அமைச்சர் அவர்களையும் வேண்டிக் கேட்டுக்கொள்கிறேன். பின்னர் அமைச்சர் அவர்கள் இரண்டு மாதங்களுக்கு முன்பு ஆறு ரசாயன உரத் தொழிற்சாலைகள் தமிழ்நாட்டில் ஆரம்பிக்கப் போவதாகக் கூறியிருந்ததைப் பத்திரிகையில் பார்த்தேன். மூன்று லட்சம் டன் உற்பத்தி செய்யப்படும் என்று கூறியிருப்பதைக் கண்டு மகிழ்ச்சியடைகிறோம். அந்த ரசாயன உரத் தொழிற்சாலைகளை விரைவில் ஆரம்பித்து வைக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். பின், கதர் அபிவிருத்தி. முன்பு கதர் போட்டால், 'என்ன இந்தமாதிரி துப்பட்டி போட்டுக் கொள்கிறீர்களே' என்று கேட்பார்கள், எதிர்க்கட்சி நண்பர்கள். கதர் அபிவிருத்தியில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. கோடி ரூபாய்க்கு மேல் உற்பத்தியாகும் கதரை வாங்கும் அளவிற்கு கதர் உற்பத்தி முன்னேறியிருக்கிறது என்றால் அதை யாரும் மறுக்க முடியாது. சிறு சிறு கைத்தொழில்கள் முன்னேறுவதிலும் கோயம்புத்தூர் ஜில்லாதான் முன்னணியில் நிற்கின்றது. எந்தத் துறையை எடுத்துக்கொண்டாலும் கோயம்புத்தூர் ஜில்லாதான் முன்னணியில் நிற்கிறது, கதர்த் துறையிலும்கூட தமிழ்நாட்டில் இது கோவையில்தான் அதிகமாக உற்பத்தி செய்யப்படுகிறது. ஆக, எதிர்க்கட்சியினரும் இந்தத் தொழிலில் அக்கரை கொண்டு இத்தொழில் முன்னேற தீவிர முயற்சி எடுத்துக்கொண்டு இதுபற்றி பிரசாரம் செய்யுமாறு அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, நெய்வேலி பற்றி ஒரு வார்த்தை. இதுபற்றி அரசாங்கத்தின் சார்பில் பல முறை பேசப்பட்டிருக்கிறது, எதிர்க்கட்சியினரும் இதுபற்றி பல முறை பேசியிருக்கிறார்கள், நிபுணர்களும் இதுபற்றி ஆராய்ச்சி நடத்திக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் மத்திய சர்க்கார் இத்தொழிலை நடத்தினால் நிலக்கரியை அங்கு எடுத்துச் செல்லப் போவதில்லை, அந்தப் பணம் அவர்களுக்குப் போய்விடுமே என்றால், அதற்கு ஒரு வழி சொன்னால் இந்த சர்க்கார் 100 கோடி கூட கடன் வாங்கத் தயார். ஆனால் வரி போட்டால் வரி போடுகிறார்கள், மக்களை அம்பலத்தில் விட்டுவிடுகிறார்கள் என்கிறார்கள். எதிர்க்கட்சியினர் தைரியம் சொல்லி இதற்கு ஆதரவு கொடுத்தால், மத்திய சர்க்கார் செலவு செய்திருப்பது பூராவையும் கொடுத்துவிட்டு நாமே நிலக்கரி உற்பத்தியை எடுத்துக் கொள்ளலாம். நிபுணர்கள் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறார்கள், ஆகவே மக்களின் மனதை விணாக் குழப்பி சர்க்கார் ஒன்றுமே செய்யவில்லை என்று சொல்லாமல் நாங்கள் செய்திருப்பதையாவது ஒப்புக்கொள்ள அவர்களுக்கு ஆண்டவன் அருள்புரிய வேண்டுமென்று சொல்லிக்கொண்டு, இந்த மான்யத்தை ஆதரிக்கிறேன்.

* **Sri M. R. KANDASWAMI MUDALIYAR :** அந்த சபை முன் வந்திருக்கக்கூடிய கைத்தொழில் மான்யக் கோரிக்கையை ஆதரித்து சில விஷயங்கள் கூற விரும்புகிறேன். நம் ராஜ்யத்தில்

10th March 1961] [Sri M. R. Kandaswami Mudaliar]

தொழில் அபிவிருத்தி நன்கு அடைந்திருக்கிறதென்பதில் சந்தேகமேயில்லை. எதிர்த் தரப்பினர் எவ்வளவோ குறைகள் சொல்வதாகயிருந்தாலும், அவர்கள்கூட அழுத்தந்திருத்தமாக ஒன்றும் குறை சொல்லவில்லை. லேசான முறையில், அமைச்சர் அவர்களுக்கு இன்னும் சிறிது உற்சாகம் ஊட்டக்கூடிய முறையில்தான் அவர்கள் உரைகள், இந்த பட்ஜெட்டின் பேரில் இருக்கின்றனவே தவிர தொழில் துறை வளர்ச்சியடையவில்லை அல்லது முன்னேறவில்லை என்ற காரணத்தைக்கொண்டு பேசக்கூடிய முறையில் இந்த பட்ஜெட் விவாதத்தில் அவர்கள் பேச்சு இல்லை. அதிலிருந்தே நம் ராஜ்யத்தில் தொழில்துறை நல்லமுறையில் அபிவிருத்தி அடைந்திருக்கிறது என்பதையும், தொழில் அபிவிருத்தியில்தான் நாம் நல்ல முற்போக்கு அடைந்திருக்கிறோம் என்பதும் எதிர்த்தரப்பு அங்கத்தினர்களின் வாதத்திலிருந்தே தெரிகிறது. தொழில் துறையில் முன்னேற்றம் ஏற்பட்டும்கூட உற்பத்தி செய்யப்படுகிற பொருள்களுக்கு ஏற்கனவே இருந்ததை விட இன்று தட்டுப்பாடு அதிகமாகயிருக்கிறது என்று சொல்லலாம். அதற்கு நம் நாட்டில் அதிக உற்பத்தியில்லாதது காரணம் அல்ல. நம் உள்நாட்டில் ஏற்பட்டிருக்கிற தொழில் அபிவிருத்தியோடு, வெளிநாடுகளிலிருந்து வரக்கூடிய பொருள்கள் இன்று கட்டுப்படுத்தப் பட்டிருப்பதால் எவ்வளவு அதிகம் நாம் உற்பத்தி செய்தாலும் நமக்குப் பற்றுக்குறை ஏற்படுகிறதே தவிர தொழில் துறையில் நாம் அபிவிருத்தி அடையாததால் அல்ல.

(Deputy Speaker in the Chair.)

ஸ்டர்லிங் நிலையை அனுசரித்து பல பொருள்களின் இறக்குமதியைக் கட்டுப்படுத்தும் நிலையை நம் அரசாங்கம் ஏற்படுத்தியதால்தான் இது ஏற்பட்டது. குடிசைத் தொழிலானாலும் சரி, நடுத்தரத் தொழிலானாலும் சரி, பெரிய தொழில்களானாலும் சரி, நம் அரசாங்கம் அவைகளின் வளர்ச்சியில் மிகுந்த அக்கறையும், உற்சாகமும் கொண்டுள்ளதைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். ஆனால் சிறிய தொழில்களுக்கு அரசாங்கம் இன்னும் அதிக பாதுகாப்பு அளிக்க வேண்டும். கைத்தறி நெசவாளர்களும், கைத்தறித் தொழிலும் அபிவிருத்தி அடைவதில் மிகுந்த ஆர்வமும், சிரத்தையும் கொண்டிருக்கிறார்கள் நமது அமைச்சர் அவர்கள். அவர்களைவிட இந்தத் தொழிலில் அதிக ஆர்வம் காட்டக்கூடியவர்கள் இருக்கிறார்கள் என்று சொல்லமுடியாது. ஆகவே இத்துறைபற்றி நான் குற்றம் சொல்ல விரும்பவில்லை. இருப்பினும், அரசியல் அமைப்பின் காரணமாக சிற்சில சங்கடங்கள் ஏற்படுகின்றன. அவைகளை நிவர்த்தி செய்து இத்தொழிலுக்கு ஊக்கம் கொடுக்கவேண்டுமென்று அவர்களைக் கேட்டுக்கொள்கிறேன். சுமார் 1½ ஆண்டுகளுக்கு முன்பே நூல் குறைந்த விலையில் நெசவாளர்களுக்குக் கொடுக்கவேண்டுமென்பது பற்றி சிரத்தை எடுத்து காரியங்கள் செய்தார்கள். ஆனால் அதன் பலன்

[Sri M. R. Kandaswami Mudaliar] [10th March 1961

இன்னும் நெசவாளர்களுக்குக் கிடைக்கவில்லை. அதுமட்டுமல்ல. மத்திய அரசாங்கம் அமைச்சர் அவர்கள் மில் அதிபர்களைக் கூப்பிட்டு பலமுறை வற்புறுத்தியும் குறைந்த விலையில் நூல் கொடுக்கக் கூடிய முறையில் ஒரு திட்டம் வகுக்கப்பட்டது. அதுவும் இன்றைக்குச் சரியான முறையில் நடைபெறவில்லை. இதன் காரணமாக சிறிய தொழிலாக வைத்துக்கொண்டு சுமார் 40 ரூபாய், 30 ரூபாய் மூலதனத்திலே தங்கள் தொழில்களை நடத்திக் கொண்டிருக்கிற கைத்தறி நெசவாளி 1½ ஆண்டு காலமாக நூலை அதிக விலை கொடுத்து வாங்கினால், கிடைக்கக்கூடிய கூலியைக் கொண்டு, அதிக விலையினால், எப்படி வாழ முடியும் என்று அமைச்சரவை சிந்தித்துப் பார்க்கவேண்டும். தங்களுக்குக் கிடைக்கக்கூடிய 1½ அல்லது 1¼ ரூபாய் கூலியில் நூல் விலை அதிகம் காரணமாக 12 அணா அல்லது 8 அணா அதிகம் கொடுத்து விட்டால், மீதி இருக்கக்கூடிய வருவாயை வைத்துக்கொண்டு அவர்கள் வாழ்க்கை நடத்துவது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. இது இப்போது மட்டும் இல்லை—1½ ஆண்டு காலமாக இருந்து வருகின்றது. இந்த விஷயத்தில் அமைச்சரவை சிறந்த கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். நூல் விலை ஏற்றத்தைத் தடுக்கும் அதிகாரம் மத்திய அரசாங்கத்திற்குத்தான் இருப்பதால் நாமாக ஒன்றும் நடவடிக்கை எடுக்க முடியவில்லை. மத்திய அரசாங்கத்திற்குத்தான் அதிகாரம் இருக்கிறது, இதில் நாம் ஒன்றும் செய்வதற்கில்லை என்று சொல்லி நடவடிக்கை எதும் எடுக்காமல் அவர்களைப் பட்டினியில் கிடக்கச் செய்தால் அது சரியான முறை அல்ல, இந்த அமைப்பும் சரியான அமைப்பாக இருக்காது. இதற்கு விரைவில் பரிகாரம் கண்டுபிடித்து மத்திய சர்க்கார் அதிகாரத்தை உபயோகித்து குறைந்த விலையில் நூல் கிடைக்கக்கூடிய வகையில் மில் அதிபர்களின் மீது தகுந்த நடவடிக்கை எடுக்கவில்லை என்றால் அந்த அதிகாரத்தை நாமாவது பெற்று குறைந்த விலையில் நூல் வாங்கிக்கொடுக்க வழிவகை செய்து நெசவாளிகளின் கொந்தளிப்பைத் தடுக்க அமைச்சர் அவர்கள் இதில் பிரத்தியேக கவனம் செலுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இந்த தொந்திரவைக் குறைக்க ஒரு யோசனையை நான் பல முறை இந்தச் சபையிலே சொல்லியிருக்கிறேன். 16 கதிர்களைக் கொண்ட சிறு நூற்பு யந்திரத்தை வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்து கிராமங்களில் வினியோகம் செய்து நூல் உற்பத்தி செய்ய வழிவகை செய்தால் கைத்தறிக் காரர்களுக்கு மில்லையே நம்பிக்கொண்டிருக்கும் அவசியம் இருக்காது என்று சொல்லிக்கொள்ளுகிறேன். இதை ஏன் அமைச்சர் அவர்கள் செய்ய முன் வரவில்லை என்று மிகவும் வருத்தத்தோடு கேட்கவேண்டியிருக்கிறது. ஒன்று மில் முதலாளிகளைக் கொண்டு கைத்தறிக்கு வேண்டிய நூலை வினியோகிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். இல்லையானால் இந்த முறையிலாவது நூலை உற்பத்தி செய்ய வசதி செய்தாகவேண்டும். வருடம் பூராவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறவர்கள் விஷயத்தில் ஒரு நடவடிக்கையும் எடுக்காமல் இருப்பது அவ்வளவு சரியல்ல என்று சொல்லிக் கொள்கிறேன்.

10th March 1961] [Sri M. R. Kandaswami Mudaliyar]

அது மட்டுமல்லாமல் ஆர்ட் ஸில்க்கை எடுத்துக்கொண்டாலும் அங்கும் அதே நிலைதான். முன்பு சொசைட்டிகள் அவர்களுக்கு வேண்டியதை அவர்களே இறக்குமதி செய்து வந்ததை மாகாணக் கூட்டுறவு சங்கத்தின் மூலமாக இறக்குமதி செய்யவேண்டுமென்று அரசாங்கம் உத்திரவு பிறப்பித்திருப்பதாகச் சொல்லுகிறார்கள். அதன் காரணமாகத்தான் தங்கள் தங்கள் தேவைக்குத் தகுந்தாற் போல இறக்குமதி செய்ய முடியாமலே மாகாண சொஸைட்டியும் தேவைக்குத் தகுந்தாற்போல சப்ளை செய்ய முடியாத நிலையும் இரண்டு வருஷ காலமாக பட்டு நூல் கிடைக்காத நிலையில் கஷ்டப் பட்டுக்கொண்டு 4 ரூபாய்க்கு வாங்கக்கூடிய பட்டுக்கு 10 ரூபாய் விலை கொடுத்து வாங்குகிறார்கள்; 6 ரூபாய் அதிகம் விற்பதால் கட்டுப்படியாகாமல் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். இறக்குமதி செய்யக்கூடிய பட்டை பிரித்துக் கொடுப்பதற்குப் பல தனிப்பட்ட சங்கங்கள் அமைந்திருக்கின்றன. அந்த சங்கங்கள் வரக் கூடிய கோட்டாவை அந்தந்த நெசவாளிக்குப் பிரித்துக்கொடுக்கக்கூடிய முறையில் ஒழுங்காகப் பிரித்துக்கொடுப்பதில்லை; இறக்குமதி செய்யக்கூடிய பட்டுக்கான கோட்டாவும் சரியாகக் கிடைக்காத காரணத்தினால் பல நெசவாளிகள் பட்டு நூலைக் கள்ள மார்க் கெட்டில் வாங்கும் காரணத்தினால், அவர்களுக்குக் கிடைக் கக்கூடிய கூலியிலிருந்தே அதிக விலை கொடுக்கவேண்டி யிருப்பதால், நமது சர்க்கார் நெசவாளிகளுக்குத் தேவையான ஆர்ட் சில்க்கை இறக்குமதி செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இன்றைய தினம் அத்தியாவசியமில்லாத பொருள் களை பல கோடிக்கணக்கான ரூபாய் அளவுக்கு இறக்குமதி செய் கிறோம். இப்படி ஆடம்பரப் பொருள்களை இறக்குமதி செய்வதை நிறுத்திவிட்டு ஜீவனத்திற்காகச் செய்யும் இந்தத் தொழில்களுக்கு வேண்டிய பொருள்களை வெளி நாடுகளிலிருந்து அதிகம் இறக்கு மதி செய்து இந்தத் தொழில்களை விருத்தி செய்வதில் வேண்டிய நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கூட்டுறவு சங்கங்களின் கீழ் இருக்கக்கூடிய சொஸைட்டிகளே, அரசாங்கம் கொடுக்கும் ரிபேட்டை வாங்கக்கூடிய நெசவாளிகளே கஷ்டப்படுகிற நேரத்தில் ரிபேட் கிடைக்காத தனிப்பட்ட நெச வாளி அதிக விலை கொடுத்து வாங்கி ஜீவிக்க முடியுமா என்று அமைச்சரவை கவனிக்க வேண்டும். ஏன், அவர்களும் கூட்டுறவு சங்கங்களில் அங்கத்தினர்களாகச் சேரலாமே என்று அமைச்சர் அவர்கள் கேட்கலாம். கூட்டுறவு சங்கத்தில் சேர்ந்து அதிகமாக உற்பத்தி செய்தாலும், 'பொய்க் கணக்கு வைத்திருக்கிறாய், ஆகையால் கொடுக்க முடியாது' என்று சொல்லக்கூடிய நிலையில் இப்போது 5,000 ரூபாய் அளவுக்கு நிறுத்தி வைக்கப்பட்டிருக் கிறது. குறிப்பாக காலிப்பட்டி வீவர்ஸ் கோவாபரேடிவ் சொஸைட்டியில் இந்த நிலை இருக்கிறது.

அடுத்தபடியாக சேலம் இரும்புக் கனியை எடுத்து இரும்புத் தொழிற்சாலை ஏற்படுத்தும்போது, அதை சேலத்திலேயே ஏற்படுத்தவேண்டும். அதை நிலக்கரி இருக்கக்கூடிய இடத்தில் ஏற்படுத்தவேண்டுமா அல்லது இரும்பு கிடைக்கக்கூடிய இடத்தில்

ஏற்படுத்தவேண்டுமா என்று பார்க்கக் கூடும். ஆனால் இந்தத் தொழிற்சாலையை சேலத்திலேயே ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : The hon. Member's time is up.

SRI M. R. KANDASWAMI MUDALIAR : அடுத்தபடியாக, எல்லா பெரிய தொழிற்சாலைகளும் நடுத்தரத் தொழில்களும், சிறு தொழில்களும் டவுன்புறத்திலேயே ஏற்படுத்தப்படுகிறது. கிராமப் புறங்களில் இவைகளை ஏற்படுத்தவில்லை. அப்படியில்லாமல் கிராமப்புறங்களிலேயே இவைகளை ஏற்படுத்தவேண்டும், அதற்கான நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

* SRI R. CHIDAMBARA BHARATHI : கனம் உதவி சபா நாயகர் அவர்களே, இன்றைய தினம் இந்தத் தொழில் மான்யக் கோரிக்கையை நான் வரவேற்றுப் பேசும்போது பழைய ஒரு ஞாபகம் தோன்றுகிறது. 6,000 மைல்களுக்கு அப்பால் மேற்கே இங்கிலாந்தில் இந்திய நாட்டின் தலைமை சர்க்கார் இருந்தபோது வடக்கு வாழ்ந்தது—தெற்கு தேய்ந்தது ; இது சரித்திரம் . . .

DEPUTY SPEAKER : மான்யத்தைப் பற்றிப் பேசினால் நலமாக இருக்கும். கனம் அங்கத்தினருக்குக் கொடுத்திருப்பது 7 நிமிஷங்கள்தான்.

SRI R. CHIDAMBARA BHARATHI : சந்தோஷம். இப்போது மேற்கேயிருந்து வடக்கே வந்து டில்லியிலே தலைநகரான பிறகு, 7-8 வருஷங்களுக்குள்ளாக தென் நாடு எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறது என்று வாயால் சொல்லுவது அல்ல, எழுத்தால் எழுதுவது அல்ல, கண்ணால் பார்க்க முடிகிறது. நல்ல முறையில் இன்னும் பரவலாகத் தொழில் வளர்ச்சி ஏற்படுவதற்கு மூன்றுவித கொள்கைகளில் தொழில்கள் தென்னகத்தில் வர வேண்டுமென்று நான் அபிப்பிராயப்படுகிறேன். ஒன்று கனரகத் தொழில், மற்றொன்று மக்களுக்குத் தேவையான பொருள்களை யந்திரங்கள் மூலமாக உற்பத்தி செய்யக்கூடிய தொழில், மற்றொன்று கைத்தொழில். ஆக இந்த மூன்றையும் போட்டியில்லாமல் இணைத்துச் செய்வதற்குத்தான் சர்க்கார் இப்போது கொண்டு வந்திருக்கக்கூடிய மான்யத்தில் ஒதுக்கியிருக்கக் கூடிய தொகையையும், திட்டத்தையும் பார்க்கும்போது அந்தக் கருத்துடன்தான் செய்திருக்கிறார்கள் என்று நான் நம்புகிறேன். அந்தக் கருத்துடன் செய்யும்போது மிக முக்கியமாக இருக்கக்கூடியதில் வெல்லம் உற்பத்தி செய்வது, தோலினால் செருப்பு, மணிபர்ஸ், கைப்பெட்டி இவைகள் கையினால் செய்யக்கூடியது. இப்படிக் கையினால் செய்யக்கூடிய அநேக சாமான்கள் இப்போது மறைந்து வருகின்றன. அத்தகைய தொழில்களில் ஈடுபட்டவர்கள், இப்போது அந்தத் தொழில்களெல்லாம் யந்திரங்கள் மூலமாக நடைபெறுவதால் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். ஆதலால் அதைத் தடுக்க சர்க்கார் ஆலோசிக்க வேண்டும். அதிலும் முக்கியமாக

ராமநாதபுரம் ஜில்லாவிலும், பரவலாகத் தமிழ் நாட்டிலும் வெல்ல உற்பத்தியும் தோல் பொருள்கள் உற்பத்தியும் கைத்தொழில் முறையிலே சிறுகச் சிறுக, ஆங்காங்கு, சொற்ப முதலில் நடந்து வருகின்றன. அதற்கு நாம் ஒரு முனை வரி போடுவதன் மூலமாக, உற்பத்தி செய்கிறவர்களே வரி கொடுக்க வேண்டியிருக்கிறது. அந்த நிலைமை காரணமாக 1,000 அல்லது 2,000 ரூபாய் மூலதனம் போட்டு சொற்ப லாபத்தில் கையால் அந்த சாமான்களைச் செய்து மற்ற மாநிலங்களுக்கு அனுப்புவதோடு, மற்ற மாநிலங்களில் செய்யக்கூடிய சாமான்களோடு போட்டி போடக்கூடிய நிலையில் அவர்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அதில் தோல் சாமான்கள் மிகவும் முக்கியமானது. ஒரு முனை வரி ஜாபிதாவில் தோல் சாமான்களைச் சேர்த்திருக்கிறார்கள். அதை விட்டு அவை களுக்கு வரியே இல்லாமல் செய்யவேண்டும்; இல்லை போட்டுத் தான் ஆகவேண்டுமென்றால் பல முனை வரியாக ஆக்கினால் அந்தத் தொழில் இன்னும் சிறக்கும்.

அடுத்தபடியாக கிழக்கு ராமநாதபுரத்தின் மத்திய பாகமாக மானாமதுரை இருந்து வருகிறது. மத்திய பாகத்தில் இருப்பது மாத்திரமல்லாமல் பல தொழில்கள் வளர்ச்சி அடையக்கூடிய அளவுக்குக் கட்டிட வசதிகளை உண்டு பண்ணிக்கொள்ள, தண்ணீர் வசதியை உண்டு பண்ணிக்கொள்ள சாத்தியக் கூறுகள் இருக்கின்றன.

ஆதலால் கிழக்கு இராமநாதபுரத்திற்கு மத்திய இடமாகிய மானாமதுரையிலே ஏற்படுத்துவதற்குக் காரணமாக, அங்குள்ள வாலிபர்கள் பலர் படிப்பதற்கு முன்வருவதாலே, இப்போது அப் பகுதிகளிலே உள்ள வாலிபர்கள் மற்ற இடங்களுக்குச் சென்று படித்துக் கொண்டு வருவதாலும், அந்தப் பகுதியிலே உள்ள மக்கள் பொருளாதாரத் துறையிலே மிகவும் பாதிக்கப்பட்டு இருப்பதால், அவர்களுக்கு உதவக்கூடிய வகையிலே ஒரு பாலிடெக்னிக்கை மானாமதுரையில் ஏற்படுத்துவது மிகவும் நல்லதென்று கேட்டுக் கொள்கிறேன். அப்படி அங்கு ஒரு பாலிடெக்னிக்கை ஏற்படுத்து வதின் மூலம், தொழில் துறையிலே அவர்களுக்கு உதவியதாகவும் இருக்கும். சென்ற பட்ஜெட் கூட்டத்திலும், அதற்குப் பிறகு நடந்த பல கூட்டங்களிலும் மானாமதுரையிலே ஒரு கூட்டுறவு சர்க்கரை ஆலையை ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டு வந்திருக் கிறேன். அதற்கான கோரிக்கையும் சர்க்காருக்கு அனுப்பப் பட்டிருக்கிறது. ஆனால் இது குறித்து இதுவரை எந்தவிதமான பதிலோ, தகவலோ கிடையாது. இதற்குப் பிறகு நான் கேள்விப் பட்டதன் மூலம் தெரிந்துகொண்டது, தனிப்பட்ட ஒருவருக்கு அதே சர்க்கரை மில்லுக்கு சர்க்கார் உதவி செய்வதற்கு அபிப் பிராயம் இருந்து வருவதாகத் தெரிகிறது. ஆனால் மொத்தத்திலே பார்க்கும்போது, கூட்டுறவு முறையிலே அங்கே ஒரு சர்க்கரை ஆலையை ஏற்படுத்துவதைத்தான் அங்குள்ள மக்கள் விரும்பி ஏற்பார்கள். அந்த முறையிலே மக்கள் விரும்பி விண்ணப்பம் அனுப்பிய பிறகு, தனிப்பட்டவர்களுக்குக் கொடுப்பதற்கு

[Sri R. Chidambara Bharathi] [10th March 1961

யோசிப்பது ஏன் என்று தெரியவில்லை. ஒருவேளை அதை நிறுவு கின்ற முறையிலே, அதிக மூலதனம் சேர்ப்பதில் ஏதாவது சிரமங்கள் ஏற்பட்டு, அதனால் தனிப்பட்டவர்களுக்குக் கொடுப்ப தற்கு முற்பட்டிருக்கலாம். அப்படி முற்பட்டாலும், ஏதாவது ஒரு துறையில் சர்க்கரை ஆலை அங்கு சீக்கிரமாக வருவதற்கு சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இப்போது வெல்லமானது ஒரு கைத்தொழில் முறையிலே தயாரிக்கப்பட்டு வருகிறது. சிறுசிறு விவசாயிகள் நாங்களாகவே குறைந்த அளவு சாகுபடி செய்து, தாங்களாகவே சிறிய அளவில் வெல்லத்தைத் தயாரிக்கின்றனர். அது ஒரு நல பரம்பரையான தொழிலாக சிறிய சிறிய விவசாயிகளுக்குப் பெரிய அளவில் உதவிக் கொண்டு வருகிறது. ஆனால் இதில் மற்றவர்களும் இப் போது ஈடுபட்டு தொழில் செய்துகொண்டு வருகிறார்கள். ஆனால் இப்போது வெல்லத்தின் விலை மிகவும் குறைந்துவிட்டது. இதற்கு என்ன காரணம் என்று கேட்டால், இப்போது இதை ஏற்றுமதி செய்வதற்கு அனுமதியில்லை. அதன் காரணமாக விலை இறங்கி விட்டது என்று சொல்லப்படுகிறது. ஆகவே இதை நம்முடைய சர்க்கார் கவனித்து, ஆவன செய்ய வேண்டும். காரணம், வெல்லத் தினுடைய தன்மையை நாம் கவனிக்க வேண்டும். அதை மாதக் கணக்கில் வைத்துக்கொள்ள முடியாது. அது சீக்கிரம் எடையும் குறைந்துவிடும். உருகித் தண்ணீராகவும் போய்விடும். ஆகவே இதுபற்றி சீக்கிரமாகக் கவனித்து, விலையைக் கட்டுப்படுத்தி, தற் போதுள்ள நிலைமையைச் சீர்படுத்துவார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தாற்போல், திருப்பத்தூரிலிருந்து ராமநாதபுரம் டிவி ஷனில் ஆபீசர் அவர்கள் இரும்புச் சத்துள்ள மண்ணை அங்கிருந்து பரிசோதனைக்காக அனுப்பியிருப்பதாகத் தெரிகிறது. அந்த மண்ணில் சேலத்தைப் பார்க்கிலும் அதிகமான சதவிகிதம் இரும்புச் சத்து இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

THE HON. SRI R. VENKATARAMAN: அது பரிசீலனை செய்யப்பட்டு, அங்கே இரும்பு இல்லை என்பது தீர்மானமாகி, இந்தச் சட்டசபையிலும் அதைச் சொல்லியாகிவிட்டது.

SRI R. CHIDAMBARA BHARATHI: அந்த மாதிரி இல்லா விட்டால், அதைப் பற்றி பேசவில்லை. நாட்டரசன்கோட்டையில் வார்னீஷ் செய்வதற்கு அங்கு நல்ல கலர் மண்கள் கிடைக்கிறது. தனிப்பட்டவர்களால் இத் தொழிலை அபிவிருத்தி செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டு, பல கோளாறுகளினால் இப்போது அந்த தொழில் நிறுத்தப்பட்டது. அதை அரசாங்கம் எடுத்துக்கொண்டு அதை அபிவிருத்தி செய்வதற்கான நட வடிக்கை எடுத்துக் கொள்வார்களேயானால், நமக்கு நல்ல மூலப் பொருள்கள் கிடைப்பதற்கு உதவியாக இருக்குமென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். அதைப் செய்யும்படி கேட்டுக்கொள் கிறேன். அதோடு இவ்வளவு நேரம் பேசுவதற்கு அனுமதி கொடுத்ததற்காகத் தலைவர் அவர்களுக்கு என் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

10th March 1961]

* **Sri M. A. MUTHIA CHETTIAR** : தலைவர் அவர்களே, தொழில் துறை மந்திரி அவர்கள் கொண்டுவந்திருக்கும் இந்த மான்யத்தை நான் ஆமோதித்துப் பேச இருக்கிறேன். நம் தொழில் துறை அமைச்சர் அவர்கள் உலகமெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்வதாலும், அவர்கள் அடிக்கடி அமெரிக்காவுக்கும், யூரோப்புக்கும் போகிற காரணத்தினலே, அவர்களுக்கு ஏற்படும் அனுபவத்திலே நம் நாட்டுக்கு அதிகமான நன்மைகள் தொழில் துறையிலே ஏற்படுவதாலும், அதற்கான முயற்சிகளை அவர்கள் எடுத்துக் கொள்வதாலும், நாம் அவர்களைப் பாராட்டக் கடமைப்பட்டு இருக்கிறோம்.

நம் நாட்டிலே பெரும் தொழில்கள் எல்லாம் ஏற்பட்டிருக்கிறது. நேரம் குறைவாக இருந்து, சுருக்கமாகச் சொல்ல வேண்டியிருப்பதாலே அவைகளையெல்லாம் லிஸ்ட் பண்ணிச் சொல்ல முடியாது. ரயான் போன்ற தொழிற்சாலைகள் ஏற்படுத்தப்பட்டு இருக்கிறது. இன்னும் சில தொழில்கள் வரப் போகிறது. ஆனால் இப்போது நான் சொல்ல விரும்புவது இந்த ப்ரைவேட் செக்டாரைப் பற்றி. இந்தத் தனியார் துறை செய்யக்கூடிய வேலையைப் பற்றிச் சுருக்கமாக ஒரே வார்த்தையில் சொல்வதற்கு கடமைப்பட்டிருக்கிறேன். அதாவது அவர்களுக்குப் பெரிய பாராட்டு தெரிவிக்கக் கடமைப் பட்டிருக்கிறோம்.

பொதுவாக, இந்தியாவிலே அதுவும் தென்னட்டிலே, வட நாட்டிலே இருப்பதைப் போன்ற பெரிய தொழில்கள் இல்லை என்பதை கனம் அமைச்சர் அவர்களே சொல்லி ஒப்புக்கொண்டிருக்கிறார். ஆகையாலே அதற்கு முயற்சி செய்துகொண்டு போவதற்கு நாம் துணையாக, ஆதரவாக இருந்தால்தான், அமைச்சர் அவர்கள் டெல்லியிலே சென்று இன்னும் அதற்கான முயற்சிகள் செய்வதற்கு ஒத்தாசையாக இருக்கும். அதிலும் பப்ளிக் செக்டார் தொழில்கள் நமக்கு அதிகமில்லை. தென்னட்டைப் பற்றியும், வடநாட்டைப் பற்றியும் பேசாமல் இந்த மான்யத்தைப்பற்றி பேசுவதற்கு முடியவில்லை அதைவிட சும்மா இருக்கலாம். ஆகவே மந்திரி அவர்கள் இதைப் பற்றியெல்லாம் முயற்சி எடுத்துக்கொள்வதற்கு வேண்டிய முறையில் அவரைப் பலப்படுத்த வேண்டும்.

ஹெவி எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் தென்னட்டிலே திருச்சிராப்பள்ளியில் எடுக்க வேண்டுமென்று முன்பு அபிப்பிராயங்கள் எல்லாம் சொல்லப்பட்டு வந்தது. ஆனல் இப்போது அதைப்பற்றி தகவலே இல்லை. இந்த ஹெவி எலக்ட்ரிகல் இண்டஸ்ட்ரீஸ் இந்தியாவிலே இரண்டு இடங்களில் ஏற்படுத்தப் போவதாகக் கூறப்பட்டது. இப்போது ஒன்று போபாலில் ஏற்படுத்தப்பட்டு இருக்கிறது. மற்றொன்றை இங்கு ஏற்படுத்துவதற்கு கனம் அமைச்சர் அவர்கள் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறேன். அந்த முயற்சியைப்பற்றி நாம் மத்திய அரசாங்கத்திற்கு வலியுறுத்திச் சொல்ல வேண்டும். இவர்கள் இப்படிச் சொன்னல், மத்திய அரசாங்கமும் செய்வார்கள் என்று நம்புகிறேன்.

[Sri M. A. Muthia Chettiar] [10th March 1961

ஸ்மால் ஸ்கேல் இண்டஸ்ட்ரீஸ் பற்றி சென்ற வருஷம் பேசும் போது இண்டஸ்ட்ரீஸ் எஸ்டேட்டில் பல இடங்கள் காலியாக இருப்பதாகக் கூறப்பட்டது. இப்போது கேள்விப்பட்டால், எல்லாம் பூர்த்தியாகி விட்டதாகச் சொல்லப்படுகிறது மேலும் தேவை என்று சொல்வதாகத் தெரிகிறது. நம்முடைய மக்கள் எல்லோரும் இதிலே அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று தெரிகிறது. ஆனால் இதிலே வேலை செய்யக்கூடிய டெக்னிகல் ஆட்கள் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. என்ஜினியரிங் காலேஜ்கள், பாலிடெக்னிக்குகள் பல ஏற்படுத்தப்பட்டு, இந்த டெக்னிகல் ஆட்கள் கிடைப்பதற்கு ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. ஆனால் அயல்நாடுகளிலே உள்ள சவுகரியத்தைப்போல் இங்குள்ள மாணவர்களுக்கு ஓர்க் ஷாப்பில் பழகுவதற்குச் சந்தர்ப்பம் இல்லை. இரண்டாவது காரணம்; அப்படி பாலிடெக்னிக்குகள் இருக்கக்கூடிய இடத்திற்கு அருகாமையில் பெரிய ஓர்க் ஷாப்புகள் இல்லை. இவைகள் ஒன்றாக இருந்தால், மாணவர்கள் நல்ல முறையில் கற்பதற்கு வசதியாக இருக்கும். ஆகவே இவைகளை எல்லாம் நேரிலே கவனித்து நல்ல முறையிலே வேலை செய்ய ஒரு லயாசன் ஆபிசர் நியமிக்கப் பட்டால், இண்டஸ்ட்ரீஸ் டைரக்டருக்கு மிகவும் உபயோகமாக இருக்கும். முன்பு இண்டஸ்ட்ரீஸ் டைரக்டராக இருந்தவரே இப்போது அந்த இலாகாவுக்குக் காரியதரிசியாகவும் இருந்து வருகிறார். ஆகையினாலே அவர் இவைகளையெல்லாம் நன்கு கவனித்துச் செய்வார். ஆகவே இப்படி ஒரு ஸ்பெஷல் ஆபிசரைப் போட்டு எல்லா இண்டஸ்ட்ரீசுக்கும் வசதி செய்து கொடுத்தால், பூரணமாக 6 மாதம் என்று இல்லாவிட்டாலும் 6 வாரமாவது அல்லது இரண்டு மாதமாவது தொழிற்சாலைக்கு நேரடியாகப் போய் பழகிக் கொள்வதற்கு சவுகரியம் ஏற்படுமென்று நம்புகிறேன். அது முக்கியமானது என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னொன்று முக்கியமானது. நம் நாட்டிலே நாம் தொழில்களிலே மட்டும் விசேஷமாக கவனம் செலுத்திக் கொண்டு வந்தால் போதாது. தொழில் அபிவிருத்தியை அனுசரித்து ரோடு ரயில் போக்குவரத்து ஆகியவைகளையும் அபிவிருத்தி செய்தாக வேண்டும். ரயில் போக்குவரத்தை அபிவிருத்தி செய்யவேண்டுமென்பதைப்பற்றி நாம் டெல்லிக்கு அதிகமாகச் சொல்லி வந்திருக்கிறோம். ஆகவே கனம் அமைச்சர் அவர்கள் டெல்லி ரயில் மந்திரி அவர்களிடம் சொல்லி இதற்கு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். இந்தப் போக்குவரத்துகள் அதிகமானால்தான், தொழில் அபிவிருத்தியையும் நாட்டிலே அதிகப்படுத்த முடியும். ஆகவே அதற்கான முயற்சியையும் கனம் அமைச்சர் அவர்கள் எடுத்துக் கொள்வார்களென்று நம்புகிறேன்.

இப்போது சிலோனைப்பற்றி நான் ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். சிலோனுக்கும், இந்தியாவுக்கும் வியாபாரம் அதிகமாக நடந்து கொண்டிருந்தது ஒரு காலத்தில். முன்பெல்லாம் இங்கிருந்து லுங்கி, நூல் முதலிய பொருள்கள் வியாபாரப் பொருள்களாகப் பெரிய அளவில் இங்கிருந்து ஏற்றுமதியாகி வந்தது. இப்போது சிலோனில் ஏற்றுமதிச் சட்டத்தை மாற்றி

10th March 1961] [Sri M. A. Muthiah Chettiar]

இருப்பதாகத் தெரிய வருகிறது. அதைச் சரி செய்வதற்கு டெல்லியிலிருந்து அனுப்பப்பட்டிருக்கும் ட்ரேட் கமிஷனரோ அல்லது ஏஜெண்டோ அல்லது ஹை கமிஷனரோ நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்கு சென்னை அரசாங்கத்தார் ஏற்பாடு செய்யவேண்டும். முன்புபோல் தொடர்ந்து சிலோனுக்கும், இந்தியாவுக்கும் லுங்கி வியாபாரம் நடக்கும்படி செய்யவேண்டும்.

12-30 p.m.

இப்போது ஒரு நண்பர் சொல்லை சொன்னார். அவரிடம் கேள்விப்பட்டதைச் சொல்கிறேன். இப்பொழுது 'ஷுகர் பாக்டரிகளில்' அதிகமாகச் சர்க்கரை உற்பத்தி செய்கிறார்கள் என்று கேள்விப்படுகிறோம். சிலோனுக்கு 'ஜாகரி' ஏற்றுமதியை நிறுத்திவிட்டார்கள். அதை நிறுத்த வேண்டிய தேவையில்லை. அதிகமாக சர்க்கரை உற்பத்தியாவதால், வெல்லத்தை ஏற்றுமதி செய்வதற்கு அனுமதித்தால், அது வெல்லம் காய்ச்சுபவர்களுக்கு உதவியாக இருக்கும்.

கடைசியாக, தொழில்துறை அமைச்சர் அவர்களை அவர்கள் தொழில் துறையில் எடுத்துக்கொண்ட முயற்சிகளுக்காக பாராட்டுகிறேன். அவர்கள் 'லேபர் மினிஸ்டராகவும்' இருக்கிறார்கள். கடந்த 4 வருஷங்களாக 'லேபர் ரிலேஷன்ஸ்' நல்ல முறையில் இருந்து வருகிறது. அமைச்சர் அவர்களுடைய அனுபவத்தின் காரணமாக அது நம் மகாணத்திற்கு ஒரு பெருமையை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. இது விஷயத்தில் தென்னாட்டில் உள்ள தொழில் சங்கங்களையும் நாம் பாராட்ட வேண்டும். மந்திரி அவர்கள் ஒரு 'லயசனை' இருந்தது இதுவரையில் அவர்களுக்கு அனுகூலமாக இருந்தது. வருங்காலத்திலும் அந்த அனுகூலம் கிடைத்தால்தான் 'தேர்டு பிளான்' நல்ல முறையில் நிறைவேற்ற முடியும் என்பதைச் சொல்லிக்கொண்டு; என்னுடைய உரையை முடித்துக் கொள்ளுகிறேன்.

* SRI K. ANBAZHAGAN : சட்டமன்றத் துணைத் தலைவர் அவர்களே; தொழில் துறை மான்யத்தை ஒட்டி அதற்கு ஒதுக்கப்பட்டிருக்கிற தொகை உண்மையாகவே போதுமானது அல்ல என்ற நோக்கத்தோடு பிரேரேபிக்கப்பட்ட வெட்டுத் தீர்மானத்தைத் தழுவிச் சில வார்த்தைகளை நான் கூற விரும்புகிறேன். ஒதுக்கப்பட்டிருக்கிற தொகை ஏறத்தாழ 3 கோடி ரூபாய். மாநில அரசாங்கத்தினுடைய வரவு செலவு ஏறத்தாழ 90 கோடி ரூபாய். எனவே இந்த 3 கோடி ரூபாய் முப்பதில் ஒரு மடங்காக இருக்கிறது. வளர்கின்ற சமுதாயத்தினுடைய தேவைக்கேற்ற பல்வேறு கடமைகளை ஒரு அரசாங்கம் நிறைவேற்றவேண்டுமானால், விதிக்கப்படும் வரியை நம்பி மட்டும் ஒரு அரசாங்கம் நடைபெற முடியாது என்பதை சமதர்மத்தை வரவேற்கிறோம் என்று சொல்லுகிற அரசாங்கம் உணர்ந்திருக்க வேண்டும். அப்படியானால், தொழில் துறையில் வருமானத்தைப் பெருக்க வேண்டுமென்று சொன்னால், இதற்காக 3 கோடி அல்ல; ஐந்து ஆறு கோடி ரூபாய் மட்டும் ஒதுக்கி யிருப்பது மிகவும் வருந்தத்தக்கது. ஏறத்தாழ அரசாங்கத் துறையில் மொத்த வரவுசெலவுத் திட்டத்தில் பக்தில் ஒரு மடங்கு, எட்டில் ஒரு மடங்கு இதற்காக ஒதுக்கப்படுகிற நிலைமை ஏற்பட்டால்தான், 8 கோடி என்பது 15 கோடி ஆகி, 25 கோடியாக

வளர்ந்தால்தான், அதிலே கிடைக்கிற வருமானம் நிச்சயமாக அரசாங்கத்தின் மூலமாகப் பல துறைகளிலே பொது மக்களுக்கு நன்மை செய்வதற்குப் பயன்படும். அதனால்தான் ஒதுக்கப்பட்ட தொகை குறைவு என்பதை எடுத்துக் காட்ட விரும்புகிறேன். மேலும் வேறு வகையாக சில கோடி கடனுக்கு ஒதுக்கியிருக்கிறோம் என்று அமைச்சர் அவர்கள் தெரிவிக்கக்கூடும் என்றாலும் மேலும் பல கோடி இதற்குத் தேவை. இன்றையதினம் தொழில் துறையிலே மகத்தான வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்று காங்கிரஸ் நண்பர்கள் அமைச்சர் அவர்களை மிகுதியும் பாராட்டினார்கள். அவர்கள் பாராட்டுகிறபொழுது அமைச்சர் அவர்களிடத்திலே எனக்கு ஒரு கோபமும் இல்லை. இன்றையதினம் இருக்கும் தொழில் அமைச்சரை நானும் பாராட்டுகிறேன். ஏனென்றால் அதில் இருக்கக்கூடிய குறைபாடுகளை நன்றாகத் தெரிந்தவர் அவர் என்பதால்; பாராட்டிய காங்கிரஸ் உறுப்பினர்கள் கடைசி வரையில் பாராட்டுகிறார்களா என்று பார்த்தால்—திருமணத்திற்கு வந்தவர்கள் விருந்து பிரமாதம், கலியாணம் தனிச்சிறப்பு என்று சொல்லியவாறு விருந்தில் கலந்து கொண்டு 'என்னுடைய இலையிலே சோறு இல்லை, என்னுடைய இலையிலே பொறியல் இல்லை' என்று உணவு பரிமாறுபவனைக் கேட்பதுபோல்—எங்கள் மாவட்டம் மட்டும் பின்தங்கிவிட்டது, எங்கள் மாவட்டத்தில் மட்டும் தொழில் வளர்ச்சி இல்லை' என்று பலமுறை சொன்னார்கள். நான் கனம் உறுப்பினர்களை வேண்டிக் கேட்டுக் கொள்ளுகிறேன். 'பாராட்டுகின்ற நேரத்திலாவது கொஞ்சம் குறை சொல்லாமல் இருக்கக் கூடாதா என்று. அந்த அளவுக்காவது அமைச்சருடைய செவி குளிரட்டுமே என்று அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். ஒரு நண்பர் கோவை உயர்ந்துவிட்டது என்று—வேதனையோடு அல்லது—மகிழ்ச்சியோடு குறிப்பிடுவதுபோலத் தெரிவித்தார். அவருக்கு நினைப்பு வடஆற்காடு மாவட்டத்தில். ஆனால் நான் ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். எந்த மாவட்டம் உயர்ந்தாலும், தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் வரவேற்கின்ற என் போன்றவர்கள், இராமநாதபுர மாவட்டத்தைப் போன்று இயற்கையிலேயே பல வகையிலே பிற்பட்ட நிலையிலுள்ள மாவட்டங்களுக்குத் தொழிலுக்குத் தொகை ஒதுக்கும்பொழுது அதிகமாக ஒதுக்க வேண்டும் என்று கருதுவார்கள். மற்ற மாவட்டங்களுக்கு ஒதுக்குகிற தொகை ரூ. 75 லட்சம் என்றால் அதே ரூ. 7,580 லட்சம் அளவிற்குத்தான் பிற்பட்ட மாவட்டங்களுக்கும் ஒதுக்கியிருக்கிறார்கள். அது மிகவும் குறைவாகும். பிற்பட்ட மாவட்டங்களுக்குச் சற்று அதிகமாக ஒதுக்க வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன். இதிலே என் வடக்கு தெற்கு காணவில்லையா என்று கேட்கலாம். அவர்களுக்குச் சொல்லுகிறேன், அதுவே திசையைப் பொறுத்த வாதம் அல்ல, நிலைமையைப் பொறுத்த வாதம். நிலைமையைப் புரிந்து கொள்பவர்கள் எங்கே பிற்பட்ட நிலைமை இருந்தாலும், அதை முன்னேற்ற உறுதுணையாக எந்த அரசும் நடந்து கொள்ளவேண்டும் என்பதைத்தான் வற்புறுத்துவார்கள், இதையேதான் கனம் முத்தையா செட்டியார் அவர்கள் பேசுகிற

10th March 1961] [Sri K. Anbazhagan]

பொழுது, முதலிலே தெற்கு பின்தங்கி விடுகிறது என்று சொல்லி விட்டுப் பிறகு மேலும் வறபுறுத்தாத அளவுக்கு குறிப்பாகப் பேசி முடித்தார்கள்.

அடுத்து சர்தார் வேதரத்னம் அவர்கள் பேசும்போது பஞ்சாபில் குடிசைத் தொழில்கள் வளர்ச்சி அடைந்திருக்கிறது. ஆனால் இந்த மாநிலத்தில் குடிசைத் தொழில் வளருவதை ஏனோ கேலி செய்கிறார்கள் என்று குறிப்பிட்டார். பஞ்சாபில் குடிசைத் தொழில்கள் வளர்ந்திருக்கிறது என்றால், அரசாங்கம் நேரடியாக மேற்கொண்டு நடத்துகிற காரியம் அதற்குக் காரணம் அல்ல. அங்கே உள்ள மக்கள் இதை மேற்கொண்டிருக்கிறார்கள். அது போல குடிசைத் தொழில்கள் மக்கள் தாமாகவே முன்வந்து வளர்க்க வேண்டிய பகுதியிலே இருக்கவேண்டும். பெரிய தொழில்களும், தொழில் துறையிலே பல்வேறு வகையான நிபுணர்களைக் கலந்து ஆற்றப்பட வேண்டிய அடிப்படைத் தொழில்களும் தான் அரசாங்கத்தினால் மேற்கொள்ளப்பட்டு பெருக்கப்பட வேண்டும். மேலும் பஞ்சாபில் இன்றையதினம் உள்ள தொழில் குடிசைத் தொழில் என்ற பெயரில் கனம் வேதரத்னம் அவர்கள் அழைத்தாலும், அங்கு வளர்ந்திருக்கிற தொழில்கள் தொழில் நுணுக்கத்தோடு கூடியவை. தொழில் நுணுக்கத்தோடு கூடிய தொழில்கள் வளர்கின்ற காரணத்தினாலே பஞ்சாபில் வேலை வாய்ப்பு பெருகியிருக்கிறது. வேலை வாய்ப்பு பெருகியிருப்பது மட்டுமல்ல, வருமானம் நம்மைப்போல இரண்டு மடங்கு அளவுக்கு தொழில் துறையிலே அங்கு கிடைக்கிறது. அமைச்சர் வெங்கடராமன் அவர்கள் பஞ்சாபுக்கு மட்டும் அல்ல, அமெரிக்காவுக்கும் சென்று வந்தவர். இது தவறானால் சொல்லட்டும். இங்கே உள்ள குடிசைத் தொழில் போன்று குறைவான வருமானம் வரக்கூடிய குடிசைத் தொழில்கள்தான் அங்கே இருக்கிறது என்று சொல்லுவார்களேயானால், நான் தலை வணங்கி ஏற்றுக்கொள்கிறேன். எனவே நமது மாநிலத்தில் வளர்க்கப்படும் குடிசைத் தொழில் கண்டு திருப்தி ஏற்பட முடியவில்லை.

அடுத்து இங்கு தொழில் துறையில் வளர்ச்சி என்று சொல்லுவதை 1958-59-ம் ஆண்டு குறித்து அரசாங்கம் தந்திருக்கிற நிர்வாக அறிக்கையில் தொழில் துறையிலே எவ்வளவு பேர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைத்தது என்று பார்த்தால் விளங்கும். அதில் 0.6 சதவிகிதம், அதாவது ஒரு விழுக்காடு கூட கிடைக்கவில்லை. வேலை வாய்ப்பு எவ்வளவு பேர்களுக்கு அதிகமாக இருக்கிறது என்று பார்த்தால், ஒரு ஆண்டு முழுவதற்கும் 100-க்கு ஒரு ஆளுக்குக்கூட அதிகம் கிடைக்கவில்லை. ½ ஆள் அளவுக்கே கிடைத்திருக்கிறது, 0.6 சதவிகிதம் அளவுக்கு தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பு கிடைக்கக்கூடிய நிலையில் தொழில் வளர்ச்சி ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னால், புதியதாகத் தொடங்கி இருக்கும் தொழில்களின் பட்டியலைப் படித்து, தொழில் வளர்ந்து விட்டது என்று கூறுவது எப்படி இருக்கிறது என்றால்—அமைச்சர் அவர்களுக்குப் புரியும் என்று சொல்லுகிறேன்—பெண்—பார்த்து விட்டு வந்த உடனேயே, திருமணம் நடைபெற்று, குடும்பம் அமைத்து குழந்தை பிறந்துவிட்டது என்பதைப் போன்றதாகவே

[Sri K. Anbazhagan] [10th March 1961

உள்ளது. அமைச்சர் வெங்கடராமன் அவர்கள் பெண் பார்த்து விட்டு வந்திருக்கிறார். பெண் நன்றாக இருக்கிறது. உயரம் பொருத்தமாக இருக்கிறது, படிப்பும் பண்பும் இருக்கிறது, ஆனால் வீட்டிற்குப் பெண் வந்து சேரவில்லை. அதைப்போல இன்றைய தினம் தொழில்துறையில் ஆற்றக் கூடிய திட்டங்களை எடுத்துச் சொல்லி, எனவே இந்தத் திட்டங்கள் இருக்கிற காரணத்தினால், இப்பொழுதே வளர்ச்சி ஏற்பட்டுவிட்டது என்று பேசுவது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளுவதற்குத்தான் பயன்படும் என்று கவலையோடு தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

மேலும் தொழில் வளர்ச்சி இல்லாத காரணத்தினால், தொழிலாளர்களுக்குக் கிடைக்கிற வருமானம், சராசரி வருமானம ஒரு மாதத்திற்கு ரூ. 76. 'இண்டஸ்டிரியல் வொர்கர்ஸ்-க்கு' ஓரளவு தொழில் நுணுக்கத்தோடு பணியாற்றக்கூடிய தொழிலாளர்களுக்குக் கிடைக்கும் சராசரி வருமானம் ரூ. 76, அதிகமானால் ரூ. 77 இருக்கலாம், சற்று உயர்ந்தால் ரூ. 78, புள்ளிவிவரக் குறிப்பு ரூ. 76-ஆக இருக்கிறது. ஏறத்தாழ ரூ. 100 அளவுகூட இல்லாதபொழுது தொழிலாளர்கள் நிம்மதியாக இருக்க முடியுமா? தொழிலாளர்களை உற்சாகப்படுத்தி தொழில் வளர்ச்சி ஏற்படுத்த முடியுமா என்பதை அமைச்சர் அவர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும்.

சிறுவர்களுக்குக் கிடைக்கின்ற சம்பளம் மாதத்திற்கு சராசரி ரூ. 17. இது எவ்வளவு வருந்தத்தக்க நிலைமை. தமிழ் நாட்டு மக்கள் முன்னேறிவிட்டார்கள் என்று கண்ணாலே பார்த்தாலே தெரியும் என்று சொல்பவர்கள், இந்தப் புள்ளி விவரத்தையும் சற்று கண்ணாலே பார்க்க வேண்டும். இந்தப் புள்ளிவிவரத்தைப் பார்க்கும்போது, நாம் எவ்வளவோ பின்தங்கியிருக்கிறோம் என்பது தெளிவாகும்.

வேண்டுமானால் 10 ஆண்டுகளுக்கு முன்னே இருந்ததைவிட இன்றைய தினம் சிறிது முன்னேறியிருக்கிறோம் என்று சொல்லலாம். எப்படி முன்னேறாமல் இருக்க முடியும்? ஒரு வேளை அதிலே பின்னேற்றத்தைக் காட்டுவதற்குக்கூட காங்கிரஸ் முயற்சிக்கக்கூடும் என்று உறுப்பினர்கள் கருதுகிறார்களா? அதனாலேயே இதைப் பெரிய முன்னேற்றமாகச் சொல்லிக்கொள்ளலாம் என்பதா? இந்த முன்னேற்றம் தமிழ் நாட்டு மக்களுடைய வாழ்க்கையிலே எந்த அளவு நிம்மதியை உண்டாக்கியிருக்கிறது என்பதைப் பார்க்க வேண்டும். மக்கள் முன்னேற்றத்துக்கு தொழில்துறைதான் அடிப்படையாக இருக்கிறது என்று நிதி அமைச்சர் அவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். தொழில் அமைச்சர் அவர்கள் திரும்பத் திரும்ப அதை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் எப்படிப்பட்ட தொழில் வளர்ச்சி ஏற்படவேண்டும்? இனி விவசாயத்தை நம்பி மட்டும் தமிழ் நாட்டு மக்கள் முன்னேற முடியாது. நகரத்தை நோக்கி வருகிற மக்களைப்பற்றிக் குறிப்பிடும் பொழுது நிதி அமைச்சர் அவர்கள், அவர்கள் நகரத்திற்கு வருவது அங்கே ஏற்பட்டிருக்கிற தொழில் வளர்ச்சியை காட்டுகிறது என்று சொன்னார்கள். நான் தொழில் அமைச்சர்

10th March 1961] [Sri K. Anbazhagan]

அவர்களைப் பார்த்துக் கேட்கிறேன். நகரத்திற்கு கிராம மக்கள் வருவதை நீங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா? அவர்கள் சென்னை போன்ற நகரத்திற்கு வந்து வாழ்வதை நீங்கள் அனுமதிக்கிறீர்களா? அவர்கள் இங்கே வந்தபின் குடிசைகள் பல கட்டிக் கொண்டு வாழ்வதை ஒத்துக் கொள்கிறார்களா? தொழிலிலே வளம் பெற்றவர்களா வருகிறார்கள் இங்கே? நிபுணர்களா வருகிறார்கள் இங்கே? வேலை வாய்ப்பு அற்ற ஏழை மக்கள் வருகிறார்கள். அவர்கள் வருவதை வரவேற்க முடியாத நிலைமையில் நகரத்தில் உள்ளவர்கள் இருக்கிறார்கள். அமைச்சர் அவர்கள் முழு அளவுக்கு அவர்களை வரவேற்க முடியுமா? அதனால் தான் நகரத்தில் ஏற்படும் தொழில்களில் பல கிராமத்தில் ஏற்பட வேண்டும் என்று விரும்புகிறேன் நான். கிராமத்தில் தொழில் வளர்ச்சி ஏற்பட்டதா என்றால் இல்லை. சில பேரூர்களில் தொழில் பேட்டை ஏற்பட்டிருக்கிறது என்ற கணக்கைக் காட்டினால் போதாது. மக்களிடையே கிராமப் பகுதியில் போதுமான தொழில் வளர்ச்சி ஏற்படவில்லை. அதை ஏற்படுத்த வேண்டுமென்று சொன்னால், பல தொழில்களுக்கு அடிப்படையான தேவையாக இருக்கும் பொருள்களைத் தமிழ் நாட்டிற்குக் கொண்டுவருவதற்கு நல்ல வாய்ப்பு, வசதி இருக்க வேண்டும். சேலத்து இரும்பு இன்று கிடைக்காத நிலை இருக்கட்டும். முதலில் வடநாட்டிலருந்து வரவேண்டிய இரும்பைக் கொண்டு வருவதற்கு சரியான வழிவகை இருந்திருக்கிறதா? வந்து சேர்ந்தது உண்டா? இரும்புப் பட்டரை நடத்துபவர்களுக்கு இரும்பை உருக்குவதற்கு நிலக்கரி தேவைப்படுகிறது. அந்த நிலக்கரியாவது தேவையான அளவு கொடுத்தார்கள் என்று அமைச்சர் அவர்கள் தைரியமாகச் சொல்ல முடியுமா? நிர்வாக அறிக்கையிலே குறிப்பிட்டிருக்கிறது. 1958-59-ம் ஆண்டில் ஏறத்தாழ நமக்கு கிடைக்க வேண்டிய இரும்பு தேவைப்பட்ட அளவு என்பதுகூட அல்ல ஒப்புக்கொண்ட அளவுகூட கிடைக்கவில்லை. அரசாங்கத் துறையிலே 19,000 டன் தேவைப்பட்டது, கிடைத்தது 4,000 டன். எஸ்கு தொழில் துறைகரு 4,400 டன் தேவைப்பட்டது, கிடைத்தது 3,600 டன். எஸ் எஸ். ஐ., சிறு அளவு தொழில் துறைக்குத் தேவைப்பட்டது 5,900 டன், கிடைத்தது 4,300 டன். விவசாயத் துறைக்கு தேவைப்பட்டது 16,000 டன், கிடைத்தது 3,000 டன் வேண்டுமானால் விவசாயமில்லாத பிற துறைக்கு 12,000 டன் தேவைப்பட்டது; கிடைத்தது 8,000 டன். இவைகளை வைத்துக் கொண்டு தான் பல தொழில்கள் வளரவேண்டிய நிலையிலிருக்கிறபொழுது, இவ்வளவு குறைவாக 100-க்கு 35 அல்லது 40 பங்குதான் கிடைத்திருக்கிறது. இதை வைத்துக் கொண்டு எந்தத் தொழில் வளர்ச்சி பெறமுடியும்? இதை என்ன வளர்ச்சி ஏற்பட்டுவிட்டது என்பதை அமைச்சர் அவர்கள் எண்ணிப் பார்க்கவேண்டும். இரும்புப் பட்டரைத் தொழில் நடத்துகிறவர்களுக்கு இந்த இரும்பு கிடைக்காதது மட்டுமல்ல, உருக்குவதற்கும் மற்ற தொழில் செய்வதற்கும் தேவையான நிலக்கரியும் கிடைக்காமல் திண்டாடுகிறார்கள். 1958-59 அறிக்கையின்படி

[Sri K. Anbazhagan] [10th March 1961

நிலக்கரி போதுமான அளவுக்குக் கிடைக்கவில்லை. அமைச்சர் அவர்களும் இந்தத் தொழில் துறையைச் சேர்ந்தவர்களும் மாநிலத்திற்கு அதிக நிலக்கரி ஒதுக்குமாறு மத்திய சர்க்காருக்கு விண்ணப்பித்திருக்கிறார்கள். மேலும் உயர்த்தப்பட்டது. உயர்த் தப்பட்டது என்று சொன்னாலும் :

"During the months of October 1958 to January 1959 there was no movement of soft coke due to the dislocation in the railway traffic and 50 per cent cut on the monthly quota of the consumers had to be imposed."

என்று அறிக்கை விளக்குகிறது. இதைப் பயன்படுத்தித் தொழில் நடத்துகிறவர்களுக்கு 100-க்கு 50 விழுக்காடு தான் கிடைத்திருக் கிறது. இப்படிப் பல்வேறு செய்திகளை நான் இந்த நிர்வாக அறிக்கையிலிருந்து எடுத்துக் காட்ட முடியும். போதுமான இரும்பும் கிடைக்கவில்லை. போதுமான நிலக்கரியும் கிடைக்க வில்லை. நெய்வேலி நிலக்கரி வெளிப்படவில்லை, சேலத்து இரும்பு தோன்றவில்லை. இந்த நிலையிலேயா தமிழ் நாட்டிலே தொழில் வளர்ச்சியை எதிர்பார்க்கிறார்கள்? சிமெண்ட் தொழில் இருக்கிறது, சர்க்கரைத் தொழில் இருக்கிறது என்று சொன்னால், இந்தத் தொழில்கூட இல்லாமல் இன்றைக்குத் தமிழ் நாடு எப்படி தன்னைத் தானே ஓரளவு காப்பாற்றிக் கொள்ள முடியும்? அந்தத் தொழில்களின் வளர்ச்சியை இன்றையதினம் இருக்கின்ற அரசியல் அமைப்பு பல வழிகளிலே பாதிக்கச் செய்கிறது என்று நான் உறுதியாகக் கருதுகிறேன். இந்தத் தொழில் துறைக் கொள் கையைப் பற்றி அமைச்சர் அவர்கள் தந்திருக்கிற அறிக்கையிலே கூறுகிறார் :

"The State Government's Policy conforms to the Policy of the Government of India."

மாநில அரசின் தொழில் கொள்கை—மத்திய அரசின் கொள்கையோடு ஒத்ததாகும் என்று கூறுகிறார். இதைப் பார்க்கும் பொழுது எனக்கு வேதனையாக இருக்கிறது. அகில இந்தியா வுக்கும் தொழில் கொள்கை எதுவோ அதுவே தான் சென்னை மாகாணத்திற்கும் தொழில் கொள்கையாக இருக்குமேயானால், பின்தங்கி இருக்கும் நிலையை மாற்ற என்ன வசதி இருக்கிறது? பின்தங்கி இருக்கும் நிலைமைக்குக் காரணம் ஒரு காங்கிரஸ் உறுப் பினர் சொன்னார், தமிழ் நாட்டு முதலாளிகள் பணம் போட முன் வருவதில்லை, அவர்களிடத்தில் அதிக நிதியும் இல்லை என்று. அப்படிப்பட்ட சூழ்நிலை இருக்குமேயானால், தமிழ் நாட்டு அரசாங்கம் இதிலே அதிகமாக அக்கறை எடுத்துக் கொள்வதற்குத் தேவையிருக்கிறது. அதற்கான வழி இன்றையதினம் உள்ள அரசாங்கத்தின் கொள்கையில் அமையவில்லை.

அதேபோல் மற்றொன்றையும் குறிப்பிட விரும்புகிறேன். தொழில் துறையிலே தனிக் கொள்கை இல்லாதது மட்டுமல்ல. நெய்வேலி, சேலம் போன்ற இடங்களிலே ஏற்பட வேண்டிய அடிப்படைத் தொழில்கள்கூட நம்முடைய மாநில சர்க்காருக்குச் சிறப்பு உரிமையும், தனி அதிகாரமும் இல்லாத காரணத்தினால் ஓரளவு தேங்கிப் போயிருக்கிறது. ஸ்டீல் பிராஜெக்டைப் பொறுத்தவரையில்,

10th March 1961] [Sri K. Anbazhagan]

" The Experts of the German Democratic Republic submitted their report in May 1960. The report was considered by the Technical Committee appointed by the Government of India on August 8, 1960,"

என்ற குறிப்பு அமைச்சரால் தரப்பட்டிருக்கிறது. மே, 1960 என்பதற்கும், ஆகஸ்டு 1960 என்பதற்கும் இடையிலே இருக்கிற மூன்று மாத காலம் டெல்லி சர்க்காருக்கு அர்ப்பணித்திருப்பதால் வீணான காலம். ஒரு குழு ஏற்படுத்துவதற்கு மூன்று மாத காலமானால், பின்னர் ஏற்பட்ட பலவகை தாமதத்திற்கும் என்ன பதில் அளிக்கப் போகிறார்கள்? அமைச்சர் வெங்கட்ராமன் அவர்களுக்கு இந்தப் பொறுப்பு இருக்குமேயானால், கிழக்கு ஜெர்மனி போய் விட்டு வந்த உடனேயோ அல்லது மேற்கு ஜெர்மனி போய்விட்டு வந்த உடனேயோ, மறுநாள் காலையிலேயே ஒரு குழுவை ஏற்படுத்த வேண்டுமென்று துடிதுடிப்பு இருந்திருக்க முடியும். டெல்லி சர்க்காருக்கு இந்த அதிகாரம் இருக்கிற காரணத்தினாலே, இந்த அவல நிலை ஏற்படுகிறது. தாமதம் காலக்கேடு ஏற்படுகிறது. தொழில் வளர்ச்சியைப் பொறுத்த வரையில் காலம்தான் மிகவும் முக்கியமானது. எவ்வளவுக்கெவ்வளவு நாம் காலம் தாழ்த்துகிறோமோ, அவ்வளவுக்கவ்வளவு நாம் பின்தங்கிப் போகிறோம். அமைச்சர் வெங்கட்ராமன் அவர்கள், அமெரிக்காவுக்குச் சுற்றுப் பிரயாணம் செய்ய வாய்ப்புப் பெற்றவர்கள், ஒவ்வொரு மணித் துளியும் அங்கே எப்படிப் பயன் படுத்தப்படுகிறது என்பதைத் தெரிந்தவர்கள், நாட்டின் வளர்ச்சிக்கு இப்படிப்பட்ட கால தாமதம் ஏற்படலாமா என்பதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

கடைசியாக ஒரு வேண்டுகோள். அமைச்சருக்குத் தெரிந்ததைத்தான் சொல்லுகிறேன். சிமென்டைப் பொறுத்தவரையில் அகில இந்திய விலைக் கட்டுப்பாடு இருக்கிறது. ஆனால் நிலக் கரியைப் பொறுத்தவரையில் அகில இந்திய விலைக்கட்டுப்பாடு கிடையாது. வட இந்தியாவிலிருந்து கரி இங்கே வரவேண்டுமானால், எத்தனை மைலுக்கு அப்பால் வருகிறதோ, அத்தனை மைலுக்கு ஏற்றபடி விலை ஏறுகிறது. ஆனால் ராஜபாளையம், கோவை சிமென்ட் வடநாட்டிற்குச் சென்றால்கூட, விலை ஏற முடியாது. குறிப்பிட்ட விலைக்கே வட இந்தியாவிலும் விற்கப்பட வேண்டும். வட நாட்டுப் பொருள் தெற்கே வருகிறபொழுது வருகிற செலவையும் சேர்த்து நம்மிடம் வாங்குகிறார்கள். ஆனால் தென்னாட்டுப் பொருள் வடக்கே போகும்பொழுது செலவு போக கிடைக்கும் விலையையும் தேய்ந்து கொண்டே போகிறது. இந்த நிலைமை நீடிப்பதை நமது தொழில் அமைச்சர் ஏற்றுக் கொள்ள மாட்டார் என்ற நம்பிக்கையுடன், என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன். வணக்கம்.

SRI M. KALYANASUNDARAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே . . . . . .

DEPUTY SPEAKER: I hope the hon. Member, Sri M. Kalyanasundaram will take fifteen minutes and try to finish his speech by 1 o'clock.

[10th March 1961

SRI M. KALYANASUNDARAM: இந்த மான்யத்திற்கு இன்னும் அதிகமாகத் தொகை ஒதுக்கவில்லை என்பதுதான் என்னுடைய குறைபாடு. அமைச்சர் அவர்கள் சமர்ப்பித்துள்ள ஒரு குறிப்பில் இந்திய அரசாங்கத்தின் தொழில் கொள்கையை அனுசரித்து நமது ராஜ்யமும் தன்னுடைய தொழில் கொள்கையை வகுத்து வந்திருக்கிறது என்று பெருமைப்படக் கூறியிருக்கிறார்கள். என்னுடைய குறைபாடு அந்தமாதிரி நடக்கவில்லை என்பது. 1956-ம் வருஷத்தில் நிறைவேற்றப்பட்ட தொழில் கொள்கையின் அடிப்படையில் இந்தியாவின் வளர்ச்சியை எடுத்துப் பார்த்தாலும் சரி, நம்முடைய ராஜ்யத்தின் வளர்ச்சியை எடுத்துப் பார்த்தாலும் சரி, எந்த அளவுக்கு முன்னேறி யிருக்கிறோம், அந்த லட்சியத்தை நிறைவேற்றியிருக்கிறோமா என்பதைப் பார்க்க வேண்டும். அந்த லட்சியம் என்ன? நமது நாட்டிலே சோஷலிஸ அடிப்படையிலே ஒரு சமுதாயத்தை உருவாக்கவேண்டுமென்பது கொள்கை. ஆனால் அந்த சோஷலிஸம் எப்படியிருக்கும் என்பதை திட்டவட்டமாகச் சொல்லவில்லை. சோஷலிஸம் என்று சொன்னாலேயே ஒரு கோட்பாடு நிச்சயம். தனிப்பட்ட முதலாளிகள் இஷ்டம்போல் வளர முடியாது. அரசாகத்தின் நிர்வாகத்தில் இருக்கக்கூடிய தொழில்கள் வளரவேண்டும் என்பதுதான் சோஷலிஸத்தின் அடிப்படையான கருத்துக்களில் ஒன்றாக இருக்க வேண்டும். அப்படிப் பார்க்கிறபொழுது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே நிறைவேற்றப்பட்டிருக்கக்கூடிய தொழில்களை எடுத்துக்கொண்டாலும் சரி, மூன்றாவது திட்டத்தில் திட்டமிட்டிருக்கிற தொழில்களை எடுத்துக்கொண்டாலும் சரி, அடிப்படையான கொள்கையிலே இன்னும் பின்தங்கி இருக்கிறோம். குறிப்பாக, இரும்பு உருக்கு தொழிற்சாலையிலே இரண்டாவது திட்டத்திலே போட்ட இலக்கை நிறைவேறவில்லை என்று பிளான் அவுட்லேயிலே சொல்லியிருக்கிறார்கள். பெர்ட்டிலைசர், உருக்கு, அம்மோனியம் போன்ற தொழில்களிலே நாம் போட்ட இலக்கை நிறைவேறவில்லை என்பது அவர்களுடைய குறைபாடு. அதற்கு என்ன காரணம்? ரூபாய் அளவிலே, போட்ட இலக்கைவிட அதிகமாக நிறைவேற்றி இருக்கலாம். இந்தியா பூராவுக்கும் தொழில் வளர்ச்சிக்காக 1,450 கோடி ரூபாய் செலவு செய்யப்பட்டிருக்கிறது. பொதுத் துறையிலே 775 கோடி ரூபாய், தனியார் துறையிலே 675 கோடி ரூபாய். கிட்டத்தட்ட இரண்டும் ஒன்றுக்கொன்று சமமாக இருந்துகொண்டிருக்கிறது. இது இந்தக் கால கட்டத்திலே. வெளிநாட்டுச் செலவாணியைப் பெறுவதில் தனியார் துறைக்கு இருக்கும் வசதிகூட அரசாங்கத்துக்கு கிடைக்காதது துர்ப்பாக்கியமாக இருக்கிறது. அதனால்தான் தனியார் துறைக்கு அதிக ஊக்கம் அளிக்கக்கூடாது என்று சொல்லுகிறேன். தனியார் துறைக்கு அதிக ஊக்கம் அளிப்பதும் சரி, இன்னும் அந்நியர் மூலதனத்தை இந்த நாட்டிற்குக் கொண்டுவருவதும் சரி, சர்க்கார் துறையிலே தொழில் வளருவதற்கு குந்தகத்தையும், ஆபத்தையும் விளைவிக்கும் என்பதை அமைச்சர் அவர்கள் உணர்ந்திருப்பார்கள் என்று நினைக்கிறேன். சில தொழிலதிபர்கள் எப்படி இரண்டு கணக்குகள் வைக்கிறார்களோ, அதுபோல் வெளிநாட்டுச் செலாவணியைப் பொறுத்தவரையில் இரண்டு கணக்கை வைத்துக்

10th March 1961] [Sri M. Kalyanasundaram]

கொண்டு தனியார் அவர்களுக்கு வேண்டிய வசதியைப் பெற முடிகிறது. ஆனால் அரசாங்கத் துறையில் ஒரு தொழிலை அவசர மாகச் செய்யவேண்டுமென்றால், வெளி நாட்டுச் செலவாணி, அமெரிக்கா, பிரிட்டன், மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகளிலிருந்து கிடைப்பதற்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். இதை அவர்கள் உணரவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

நம்முடைய ராஜ்யத்தை எடுத்துப் பார்த்தால் மூன்றாவது திட்ட காலத்திலே பெரிய பெரிய தொழில்களுக்காக ஒதுக்கப் பட்டிருப்பது என்ன? 3 கோடி, 35 லட்சம் ரூபாய். 23 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருந்தாலும்கூட, பெரிய தொழில்கள் என்கிற தலைப்பில் வந்திருக்கக்கூடியது 3.35 கோடி. அந்தத் தொகையும் எதற்கெல்லாம் ஒதுக்கப் பட்டிருக்கிறது? ஜியாலஜிகல் சர்வே யூனிட்டை வலுப்படுத்துவதற்காக ஒரு கணிசமான தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. சேலம் உருக்குத் தொழிற்சாலையைப் பற்றி பரிசீலனை செய்வதற்காக, ஆரம்பச் செலவுக்காக 75 லட்சம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இது அல்லாமல் புதிதாக என்ன தொழில் உருவாக்கப்பட்டிருக்கிறது? ஒரு கோடி ரூபாய் அளவிலே ஸ்டீல் பாளங்களைக் கொண்டுவந்து, கம்பிகளாகவும், தகடுகளாக வும் ஆக்குவதற்கு ஒரு தொழிற்சாலை ஏற்படுத்துவதற்கு திட்டம் இருக்கிறது. இது ஒன்றுதான் நிறைவேறினால் நிறைவேறலாம். மற்றவைகளைப்பற்றி சாத்தியக் கூறுகள் என்ன? என்னுடைய தகவலிருந்து அரசாங்கத் துறையில் ஒதுக்கப்பட்டிருக்கக்கூடிய தொகை மிகக் குறைவு. அமைச்சர் அவர்கள் சொல்லலாம், நம் முடைய ராஜ்யத்திலே ஒதுக்கப்பட்டிருக்கக்கூடிய தொகையை மட்டும் கணக்கிடாதீர்கள், மத்திய சர்க்கார் பொதுத் துறைக்கு எவ்வளவு ஒதுக்கியிருக்கிறது என்பதையும் கணக்கிடவேண்டு மென்று. அப்படியானால் நம்முடைய ராஜ்யத்தில், மத்திய அரசாங் கத்தின் தொழில்கள் அதிகமாக நிறைவேற்றப்படவேண்டியது முக்கியம். மத்திய அரசாங்கம் நிறைவேற்றக்கூடிய தொழில் களிலே எது எது உருவாகி இருக்கிறது? என்னுடைய அபிப் பிராயத்திலே சேலம் உருக்குத் தொழிலைக் கணக்கிலே சேர்க்கக் கூடாது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் நீங்கள் வாக்களித்தபடி, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே வந்தாலும்கூட நான் இதைச் சேர்க்கமாட்டேன். முதலாவது ஐந்தாண்டுத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம், இதிலே விடப்பட்ட கணக்கில் இது வரவேண்டுமே தவிர, பத்து வருஷ காலமாக காட்டிக் கொண்டே வந்து மூன்றாவது திட்டத்திற்கு ஒதுக்கியிருக்கக்கூடிய நிதியில் இதைச் சேர்க்கக்கூடாது என்பது என்னுடைய அபிப் பிராயம். இதை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால் வேறு எது வருவதற்கு இருக்கிறது? கணிசமான அளவிலே அடிப்படையான தொழில் ஒன்றும் வருவதாக இல்லை. கிண்டியிலே வைக்கக்கூடிய ரண சிகிச்சைக் கருவிகள் தொழிற்சாலையைச் சொல்லலாம். இப்படிச் சில தொழிற்சாலைகளைக் கட்டலாமே தவிர, அடிப்படையான தொழிற்சாலை ஒன்றும் கிடையாது. அரசாங்கத் திட்டத்தின் கீழ் எந்தத் தொழிற்சாலை வர இருக்கிறது என்பதைத் திட்ட வட்டமாகச் சொல்லவேண்டும்.

கடந்த 10 வருஷ காலமாக, நெய்வேலியைப் பற்றியும் இன்டீக்ரல் கோச் பாக்டரியைப் பற்றியும் பேசிக் கொண்டு வருகிறோமே தவிர, இரண்டாவது திட்ட காலத்திலும், மூன்றாவது திட்ட காலத்திலும் எந்தக் கனரகத் தொழில் இங்கே அமையப் போகிறது என்பதற்குக் கணக்குக் கொடுக்க வேண்டும். அப்படி அமையப் போகிறது என்று நிச்சயமாகக் கணக்குக் கொடுத்தால், 1956-ம் வருஷ தொழில் கொள்கைத் தீர்மானத்தின் அடிப்படையில், நம்முடைய ராஜ்ய சர்க்கார் முன்னேறிக் கொண்டிருக்கிறது என்பதை நான் ஒப்புக் கொள்ளத் தயாராயிருக்கிறேன். தொழில் வளர்ச்சி இல்லையென்று சொல்லவில்லை; சர்க்கரைத் தொழிற்சாலைகள், செமண்ட் தொழிற்சாலைகள், அதுவும் தனியார் துறையில், வந்திருக்கின்றன. தனியார் துறையில் அதிகமாகவே வந்திருக்கிறது. அதைப் பாராட்டாமல் இல்லை. ஆனால் பொதுத் துறையில் வளரவேண்டிய அளவுக்கு அது வளரவில்லை. அந்தத் தீர்மானத்தை எந்த அளவுக்கு அமுல் நடத்தியிருக்கிறார்கள். போனது போகட்டும். இனிமேலாவது உஷாராக இருங்கள் என்றுதான் சொல்லுகிறேன். அந்த தீர்மானம் இன்னும் அமுலில் இருக்கிறது; மூன்றாவது திட்ட நகலில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது; அந்த தீர்மானம் இன்னும் வாபஸ் வாங்கப்படவில்லை. அப்படி வாபஸ் ஆகாத வரையில், அதை அமுல் நடத்த வேண்டும் என்று நம்புகிறேன். நான் அந்த தீர்மானத்தை ஆதரிக்கிறேன்.

மூன்றாவது திட்டகாலத்தில், கனரகத் தொழில், கனரக மின்சார சாதனங்களை உற்பத்தி செய்வதற்கான தொழிற்சாலையை தமிழ் நாட்டில் திருச்சியில் நிறுவ உத்தேசித்திருப்பதற்காகப் பாராட்டுகிறேன்; அது தமிழ்நாட்டுக்கு கிடைக்கக்கூடிய ஏற்பாட்டை நிச்சயமாகச் செய்யவேண்டும். இரண்டு தொழில்கள் ஏற்படுத்த ஏற்கனவே முடிவு செய்தாகிவிட்டது. மூன்றாவதற்கு அன்னியச் செலவாணிகூடத் தேவைப்படாது என்று நினைக்கிறேன். முன்னது இரண்டுக்கும் உதவி முதலாளி நாடுகளிலிருந்து வருகிறது; இந்த மூன்றாவது சோஷலிச நாடான செக்கோஸ்லோவேகியாவிலிருந்து என்று நினைக்கிறேன். ஆகையால் அதற்கு அன்னியச் செலவாணிக் கஷ்டமும் இல்லை. அந்தப் பிரச்னை எழாது. மற்ற வசதிகளும் நிறைய இருக்கின்றன; காவேரித் தண்ணீர் இருக்கிறது; திறமையான மக்களின் ஒத்துழைப்பு இருக்கும். தமிழ் நாட்டில் திருச்சி ஜில்லா பொருத்தமான இடம் தான். ஆகவே, மூன்றாவது திட்டத்தில் அதைத் தமிழகத்தில் நிறுவ அரசாங்கம் நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன்.

மேலும் தனியார் துறையில் தொழில் வளர்ச்சியை எந்த அளவுக்கு அனுமதிக்கலாம், கட்டுப்படுத்தலாம் என்று கவனிக்க வேண்டும். தனியார் நடத்தக் கூடிய பல தொழில்களுக்கு சர்க்கார் மூலதன உதவி செய்கிறார்கள். ஆலவாய் பர்ட்டிலைசர் பாக்டரியில் போட்ட மூலதனத்தின் பலன் என்ன? தொழிற்சாலை எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறது? ஏன் தொடர்ச்சியாக லாபமே வராமல் இருக்கிறது? இதைக் கவனிக்க வேண்டும். தனியார் துறை வளர்வதை விடக் கூடாது என்று சொல்லவில்லை. இண்டஸ்ட்

10th March 1961] [Sri M. Kalyanasundaram]

ரியல் பாலிஸி ரெஸல்யூஷனில்கூட தனியார் துறையும் பொதுத் துறையும் ஒன்றுக்கொன்று அனுசரணையாக இருக்க வேண்டும் என்றிருக்கிறதே தவிர, தனியார் துறை பொதுத துறைக்கு உதவியாக இருக்கலாம், ஆனால் பொதுத் துறை தனியார் துறைக்கு உதவியாக இருக்க வேண்டும் என்றில்லை. உண்மையிலேயே தனியார் துறை பொதுத் துறைக்கு உதவக்கூடியதாக இருக்க வேண்டும். தனியார் துறைதான் திறமையாக நடக்கும் என்று இன்றுகூட விவாதத்தில் யாரும் சொல்லவில்லை; செட்டிநாட்டு அரசர்கூட உள்ளபடியே சாமர்த்தியமாகப் பேசி, தொழிலாளிகள், முதலாளிகள், தனியார் துறை, பொதுத்துறை, வட நாடு, தென் நாடு ஆக எல்லோரையும் திருப்தி செய்யும் முறையிலே இப்படியும் இல்லாமல், அப்படியுமில்லாமல் பேசிவிட்டார்கள். தனியார் துறையைப் பெருமைப் படுத்தக்கூடாது என்று சொல்லவில்லை. உண்மையிலேயே, அவர்களுடைய விஷயங்கள் அவ்வளவாக வெளியே வராமல் இருக்கலாம். ஆனால், அரசாங்கம் துரதிர்ஷ்டவசமாக இங்கே எல்லாவற்றையும் வைக்கவேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது. ஜனநாயகத்தில் அப்படிச் செய்ய வேண்டியிருக்கிறது. எதிர்க் கட்சிகளும் இருக்கின்றன அவைகளை வெளிப் படுத்த. ஆகவே சர்க்கார் துறையில் உள்ள குறைபாடுகள் துரிதமாக வெளிப்படுகிறது. தனியார் துறையிலுள்ள கோளாறுகள் அவர்கள் கொள்கைப்படி வெளிவராமல் இருந்து விடுகின்றன.

SRI M. A. MUTHIA CHETTIAR : தனியார் துறையிலும் ஷேர் ஹோல்டர்கள் மீட்டிங்குகள் இருக்கின்றன; பார்ட்டிலைசர் பாக்டரி என்றால் அதற்கு பாலன்ஸ் ஷீட்டு இருக்கிறது. தனியார் துறையிலும் தவறுகளைக் காண சந்தர்ப்பம் இருக்கிறது.

SRI M. KALYANASUNDARAM : அங்கத்தினர் அவர்களுக்கு தனியார் துறையில் மிகுந்த அனுபவம் உண்டு. மெஜாரிடி ஷேர் ஹோல்டர்களிடமிருந்து ப்ராக்ஸி வாங்கிக் கொண்டு விட்டால், என்ன பேச முடியும்? அதன் பிறகு தப்ப முடியுமா? அவர்களுக்கு என்று கெஸ்ட் ஹௌஸ் கட்டி, அதில் வசதிகள் செய்து, பாலும் பழ ரசமும் சாப்பிட்டு விட்டு, நன்றாகத் தூங்கிவிட்டு, கைதூக்கி விட்டுப் போகிறார்கள். ஆகையால் அதில் ஒன்றும் கோளாறுகள் வெளிவந்துவிடப் போவதில்லை. ஆனால் எல்லோருமாகச் சேர்ந்து கொண்டு, ஜனங்களைச் சுரண்டலாம்.

இன்றைக்கு ஏன் காலேச்வரா மில் மூடப் பட்டிருக்கிறது? ஏன் பாலாறு மில் சரியாக நடக்கவில்லை? அவர்கள் சேர்ந்து கொண்டு ஜனங்களை வேண்டுமானால் சுரண்டலாம், அரசாங்கத்தை வேண்டுமானால் ஏமாற்றலாம். அவ்வளவுதான்.

SRI M. A. MUTHIA CHETTIAR : தனியார் துறையின் விவரம் தெரியாது என்று சொன்னதற்குச் சொன்னேன், தெரியும் வழிகள் இருக்கின்றன என்று. தனியார் துறையில் ஊழலே இல்லை என்று சொல்லவில்லை. பொதுத் துறைப்பற்றி சட்ட சபையில் தெரிந்து கொள்ளலாம் என்றதற்கு, அங்கேயும் சுலபமாகத் தெரிந்து கொள்ளலாம் என்று சொன்னேன்.

[10th March 1961

SRI M. KALYANASUNDARAM : வெளியே தெரியும்; கோஷ்டிச் சண்டை வந்தால் ஹைகோர்ட் வரை சிரிக்கும். அப்படி யில்லாவிட்டால் வெளியே வராது.

ஆகவே, தனியார் துறை வளர எதிர் காலத்தில், உலக சூழ்நிலை அதற்குச் சரியாக இல்லை. பஞ்சாலைகளில் லட்சக் கணக்கான தொழிலாளிகள் வேலை வாய்ப்பு அடைகிறார்கள். சிறிதளவு சம்பள உயர்வு என்று வந்தால் உடனே அங்கு கோளாறு. அதற்கெல்லாம், ரேஷனலைசேஷன் கமிட்டிகள் போட்டு, அந்தந்த பிராந்தியத்திற்கு ஒரு கமிட்டியும் போட்டுப் பணியாற்ற வேண்டும். சிக்கனம் சீரமைப்புக்கு அவசியம் இருந்தால் 15-வது கூட்டு மாநாட்டு ஒப்பந்தப்படி நடவடிக்கைகள் எடுக்க வேண்டும். இதனால் அனு கூலம் ஒரு பகுதி முதலாளிகளுக்கும், ஒரு பகுதி தொழிலாளி களுக்கும், பண்டங்களை உபயோகிக்கும் மக்களுக்கு ஒரு பகுதி யுமாக வரவேண்டும். அந்த முறையிலே சிக்கனம் சீரமைப்பு இருந்தால் ஆலோசிக்கக்கூடிய விஷயம்தான் அது. அதற்குப் பதிலாக இன்றைக்குத் தொழிலாளிகளைக் குறைப்பது என்ற சிக்கனம் என்றால், பொது மக்களை சுரண்டுவது என்றால், முதலாளி களுக்கு லாபத்தைத் தேடித் தருவது என்றால் அது சரியான ஏற்பாடு ஆகாது. அது தொழில் வளர்ச்சிக்குப் பலன் கொடுக் காது. அப்பேர்ப்பட்ட கொள்கை யிருக்குமானால், எதிர் காலத்தில் நம் நாட்டில் தொழில் வளர்ச்சி இருக்க முடியாது.

கைத்தறிக்கு மூன்றாவது திட்டத்தில் 8 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அது இந்தத் தொழில் எவ்வளவு முக்கிய மானது என்பதை எடுத்துக் காட்டுகிறது. இந்தத் தொழிலினால், கிட்டத்தட்ட 20 லட்சம் ஜனங்கள் பிழைக்க வேண்டியிருக்கிறது. ராஜ்யத்தின் துணித் தேவையும் இவர்களை நம்பிக் கொண்டுதான் இருக்கிறது. மூன்றாவது, நான்காவது திட்டம் வந்தாலும், கைத்தறியைப் பாதிக்காமல் துணி உற்பத்தி செய்ய நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். இதையெல்லாம் மனதில் வைத்துக்கொண்டு நடவடிக்கை எடுக்க வேண்டும்; நிதி ஒதுக்கி விட்டால் மட்டும் போதாது. அதனால்தான் கைத்தறித் துணிகள் தேங்கி இருக்கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. கைத்தறி நெசவாளர்களுக்கு கூலி உயர்வு அதிகமாகக் கொடுக்க வேண்டிய தாக இருக்கிறது. விலைவாசிகள் உயர்வதால் அவர்களுக்கு கிடைக் கக்கூடிய கூலி கிடைக்க மாட்டேன் என்கிறது. அவர்களால் மில் துணிகளோடு போட்டி போட முடியவில்லை. மில் துணிகளை எந்த அளவுக்குக் கட்டுப்படுத்த முடியுமோ, டெக்ஸ்டைல் பாலிசியை எந்த அளவுக்கு தளர்த்த முடியுமோ அந்த அளவுக்கு தளர்த்தி கைத்தறி துணிகளுக்கு ஏற்றுமதி வசதிகளைச் செய்து கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது. அதற்கு வேண்டிய நட வடிக்கைகளையும் எடுத்துக் கொள்ள வேண்டும். ரொம்ப நாளைக்கு நாம் கைத்தறி தொழிலையும் குடிசைத் தொழில்களையும் நம்பிக் கொண்டிருக்க முடியாது. நாற்பது வருஷ காலமாக அந்தத் தொழில் நடந்து வருகிறது. உலகம் முன்னேற்றமடைந்து கொண் டிருக்கும்போது குடிசைத் தொழில்களை நாம் வைத்துக்கொண் டிருந்தால் பிரயோசனம் இல்லை. சந்திர மண்டலத்தை எட்டிப்

1 p.m.

10th March 1961] [Sri M. Kalyanasundaram]

பிடிக்கக்கூடிய காலத்தில் குடிசைத் தொழிலை வைத்துக்கொள்ள வேண்டும் என்று சொன்னால் உலகத்திலுள்ளவர்கள் நம்மை மதிக்க மாட்டார்கள். இப்பொழுது உலகம் விஞ்ஞான துறையில் எவ் வளவோ முன்னேற்றமடைந்துகொண்டு வருகிறது. அந்த அளவில் நம் நாடும் முன்னேற்றமடைய வேண்டும். அதனால் இந்தக் குடிசைத் தொழிலை அதிக நாட்கள் வைத்துக் கொண்டிருக்க முடியாது. ஆனால் அதை திடீரென்று கைவிட்டு விடவும் முடியாது. இனிமேல் குடிசைத் தொழில்கள் எல்லாம் அபூர்வமாகி விடும். அப்பொழுது குடிசைத் தொழில் மூலம் உற்பத்தியாகும் பண்டங் களை அபூர்வ பொருள்களாகத்தான் வைத்துக் கொண்டிருப்பார் கள். அதற்குத்தான் மதிப்பு கொடுப்பார்களேயொழிய அதை வாங்குவதற்கு முன் வரமாட்டார்கள். அந்தத் தொழில் கொஞ்ச காலத்திற்கு முன்னதாக வயிற்றுப் பிழைப்புக்காகத்தான் வந்தது. குடிசைத் தொழில் மூலமாக வரக்கூடிய வருவாயை வைத்துக் கொண்டு வாழவே முடியாது. அவர்களுடைய வருமானம் ரொம் பவும் குறைவாகவேதான் இருக்கும். அப்பொழுது அதை எடுத்து விட வேண்டும் என்று சொன்னால் அதற்கு யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். அது வரைக்கும் கைத்தறி நெசவாளர்களுக்கு பாதுகாப்பு கொடுக்க வேண்டியது அவசியமாக இருக்கிறது.

கதர் போர்டு சம்பந்தமாக அது எப்படி இருந்தாலும் அதில் போட்டிருக்கக்கூடிய பணம் எந்த அளவு பயன்படப்போகிறது என்பதைப் பரிசிலனை செய்து பார்த்த பிறகுதான் அதைப்பற்றி பேச முடியும். அது எப்படி இயங்கப் போகிறது என்பதையும் பார்த்துத்தான் ஆக வேண்டும். அதற்கு முன்னால் என்னுடைய அபிப்பிராயத்தைச் சொல்ல முடியாது. அந்த முறையில் கைத் தறிக்கும் குடிசைத் தொழில்களுக்கும் ஆதரவு கொடுத்துப் பாது காக்க வேண்டியதாக இருக்கிறது என்பதை வலியுறுத்திக் கூறிக் கொண்டு என் பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

* THE HON. SRI R. VENKATARAMAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பொதுவாக இந்த விவாதத்தில் பங்கு எடுத்துக் கொண்டவர்களெல்லோரும் சிறந்த நல்ல ஆலோசனை களைச் சொன்னதற்காக நான் முதலாவதாக அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த விவாதத்தில் ஈடு பட்டிருக்கும்போது எல்லோரும் ஒத்துக்கொள்வது ஓரளவு இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் எடுத்துக் கொண்ட முயற்சி பூர்த்தி அடைந்திருக்கிறது என்றும் எடுத்துக்கொண்ட முயற்சிகளுக்குச் சற்று அதிகமாகவே இந்த ராஜ்யத்தில் தொழில் துறையில் செலவு செய்யப்பட்டிருக்கிறது, அது போதாது இன் னும் அதிகமாகச் செய்ய வேண்டும் என்றுதான் எல்லோரும் கூறி யிருக்கிறார்கள். அது சம்பந்தமாக எந்தவிதத்திலும் கருத்து வேறுபாடு யாருக்கும் இருக்க முடியாது. தமிழ் நாட்டிற்கு செய்யக்கூடிய தொழில் அபிவிருத்திகளையெல்லாம் செய்துவிட் டோம் என்று சொன்னால் அதன் பிறகு எனக்குப் பெரும் வேலை இந்தக் கணக்கில் வராது. கொடுக்கப்பட்டிருக்கிற புள்ளி விவரங்க ளைப் பார்த்தால் இண்டஸ்ட்ரியல் கார்போரேஷன் பணம் கொடுத் வேண்டும், இன்னும் அதிகமாகச் செய்ய வேண்டும் என்று சொல்

வதில் யாரும் வருத்தப்பட மாட்டார்கள், அதை வரவேற்பார்கள். இன்னும் முன்னேறச் செய்ய வேண்டும் என்று நல்ல அபிப்பிராயங் களைச் ஆலோசனைகளைச் சொன்னால் அதை சர்க்கார் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்ளும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். வேண்டுமானால் ஒன்றிரண்டு புள்ளி விவரங்களை மாத்திரம் நான் கொடுக்க விரும்புகிறேன். ஸ்மால் ஸ்கேல்ஸ் இண்டஸ்ட்ரீஸ் சம்பந்தமாக இரண்டாவது திட்ட காலத்தில் ஒதுக்கிய தொகை 250 லட்சம் ரூபாய். ஆனால் இரண்டாவது ஐந்தாண்டு திட்ட காலம் இப்பொழுது மார்ச் 31-வுடன் முடியப் போகிறது. அதற்குள் 408 லட்சத்தி சொச்சம் செலவழித்திருக்கிறோம். சற்றேறக்குறைய 75 சதவிகிதம் அதிகமாக செலவாகி இருக்கிறது என்று சொல்ல லாம். அடுத்தாற்போல் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டுக்கு 82½ லட்சம் ஒதுக்கினார்கள். ஆனால் 154 லட்சம் ரூபாய் செலவழிக்கப் பட்டிருக்கிறது. அதைப்போலவே ஒவ்வொரு துறையிலும் நாம் எடுத்துக் கொண்ட எல்லா காரியங்களையும் முடித்திருக்கிறோம். ஒதுக்கப்பட்ட பணத்திற்குச் சற்று அதிகமாகவே செலவு செய் திருக்கிறோம் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். மூன் றாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு என்று ஒதுக்கிய தொகை போதாது என்ற பிரச்னையை நாம் முதலில் ஆராய்ந்து பார்க்க வேண்டும். மூன்று கோடி ரூபாய் அடுத்த ஆண்டிற்கு ஒதுக்கப் பட்டிருக்கிறது. தொழில் ஆரம்பிப்பதற்கு நிர்வாகச் செலவு செய்ய வேண்டியதாக இருக்கிறது. தொழில் ஆரம்பிக்க வேண்டு மானால் அதிக காபிடல் எக்ஸ்பெண்டிசர் போட வேண்டும். தொழில் இலாகா நிர்வாகத்திற்கு சுமார் மூன்று கோடி ரூபாயா கிறது. அது குறைவாக இருக்கிறது என்று சொன்னால் நிர்வாகச் செலவு குறைவாக இருப்பதை எல்லோரும் வரவேற்க வேண்டும். நிர்வாகச் செலவு குறைவாக இருக்கிறது என்பதை ஒரு குறை என்று கூறக் கூடாது. அதைக் குறைவாகத்தான் செய்கிறோம். அதனால்தான் நல்ல முறையில் எடுத்துக் கொண்ட காரியங்களை நிறைவேற்றி வருகிறோம் என்பதைப் பார்க்க வேண்டும். மூன்று கோடி ரூபாயை வைத்துக் கொண்டு எல்லா அபிவிருத்தித் தொழிலையும் நடத்தலாம் என்ற நிலைமையில் இல்லை என்பதை மட்டும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்தப் பணத்தை வைத்துக் கொண்டு ஒன்றுமே செய்ய முடியாது. அதற்கு என்று இரண்டாவது டிமாண்டு இருக்கிறது. முதலில் நிர்வாகச் செலவு, அடுத்த படியாக காபிடல் எக்ஸ்பெண் டிசர். அதற்கு 5½ கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதை மாத்திரம் வைத்துக் கொண்டு தொழில்களை நடத்துவது என்பது இல்லை. தொழில்களை நடத்துவதற்கு வெவ்வேறு ஸ்தாபனங்கள் உண்டு. தனியார் துறையில் தொழிலை ஆரம்பிப்பதாக இருந்தால் இண்டஸ்ட்ரியல் இன்வஸ்ட்மெண்ட் கார்போரேஷன் இருக்கிறது. அதற்கு சுமார் ஒன்று அல்லது ஒன்றரைக்கோடி ரூபாய் கொடுக்கிறது. அதெல்லாம் இந்தக் கணக்கில் வராது. கொடுக்கப்பட்டிருக்கிற புள்ளி விவரங் களைப் பார்த்தால் இண்டஸ்ட்ரியல் கார்போரேஷன் பணம் கொடுத் திருக்கிறது என்பதைப் பார்க்கலாம். அவர்கள் பங்குகளை எடுத்துக்

10th March 1961] [Sri R. Venkataraman]

கொண்டு அதிலிருந்து செலவு செய்கிறார்கள். அந்தப் பணம் சர்க்காருடைய பட்ஜெட்டில் வராது. அலுமினியம் தொழிற் சாலைக்கு 1½ கோடி ரூபாய் கொடுத்திருக்கிறார்கள், சேஷசாயி பேப்பர் அண்ட் போர்டுக்கு ஒரு கோடி ரூபாய் கொடுத்திருக் கிறார்கள். கோதாரி ஷுகர்ஸ் அண்ட் கெமிகல்சுக்கு 15 லட்சம் ரூபாய் கொடுத்திருக்கிறார்கள். இதற்கு எல்லாம் கொடுக்கப்பட் டிருக்கிற புஸ்தகத்தில் பத்தாவது பக்கத்தில் விவரங்கள் இருக் கின்றன. அவையெல்லாம் நம்முடைய பட்ஜெட்டுக்கு புரம்பாக வெளியில் இருக்கக்கூடிய செலவுகள். இன்னும் அதிகப்படியான தொழில் ஆரம்பிக்க முன் வந்தால் இண்டஸ்ட்ரியல் கார்ப்போ ரேஷன் அதற்கு உதவி செய்ய இருக்கிறது. எந்தத் தொழி லுக்கும் ஊக்கம் அளிக்கக்கூடிய வசதி இருக்கிறது என்பதை நான் முதலில் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக இந்த மூன்றாவது திட்டத்தில் தனியார் துறை யில் எவ்வளவு தொழில்களை ஆரம்பிக்கப் போகிறோம், பொது துறையில் எவ்வளவு தொழில்களை ஆரம்பிக்கப் போகிறோம், இண் டஸ்ட்ரியல் பாலிசி ரிசொலுஷனை நிறைவேற்றி இருக்கிறோமா என்ற சர்ச்சைகள் எல்லாம் எழுப்பப்பட்டன. என்னைப் பொறுத்த வரையில் துறையைப்பற்றி கவலை இல்லை. என் நிர்வாகத்தில் எந்தத் துறையிலாவது தொழில் வளர வேண்டும் என்பதுதான். தொழில்கள் வந்த பிறகுதான் அதன் துறையைப்பற்றி ஆலோசனை செய்யலாம் என்ற ஒரே நோக்கத்துடன்தான் இருக்கிறேன். அதை மக்கள் ஏற்றுக்கொண்டாலும் ஏற்றுகொள்ளலாம், ஏற்றுக்கொள் ளாமல் போனாலும் போகலாம். அதைப்பற்றி சொன்னால் கனம் சின்னதுரைக்கு கோபம் வரலாம். நாங்கள் செய் வதை கொள்கை அளவில்தான் பார்க்க வேண்டும். இன்றைக்கு நமக்குத் தேவையாக இருப்பது தொழில். அது எந்தத் துறையிலாவது வரவேண்டும். அது தனி யார் துறையா அல்லது பொது துறையா என்பது பேச்சில்லை. இன்றைக்கு ஏராளமான தொழில் வளர வேண்டும் என்பதுதான் கொள்கை. அப்படித் தொழில் வளர்ந்த பிறகுதான் அதை எந்த அளவில் கட்டுப்படுத்த வேண்டும் என்பதைப்பற்றியெல்லாம் யோசிக்க வேண்டும். இன்றைக்கு மற்ற நாடுகள் எந்த அளவில் முன்னேற்றமடைந்திருக்கிறதோ அந்த அளவில் நாமும் முன் னேற்றமடைய வேண்டும் என்பதுதான். 19-வது நூற்றாண்டு காலத்தில் எந்த அளவில் இருந்தோமோ அந்த அளவிலேயே இப்பொழுதும் இருக்க முடியாது. மற்ற நாடுகள் அந்த அளவில் முன்னேற்ற மடைந்திருக்கிறதோ அந்த அளவில் நாம் முன்னேற்ற மடைய எவ்வளவு வேகமாகப் போக வேண்டுமோ அவ்வளவு வேக மாகப் போவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். முன்னால் போனவர்களை எட்டிப் பிடிக்கக்கூடிய அளவில் நாம் வேகமாகப் போவதற்கு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அது எந்தத் துறையானாலும் சரி. தனியார் துறையில் தொழில்களை ஆரம்பிக்கா விட்டால்தான் பொது துறையில் ஆரம்பிக்கப்படும். அதற்கு வேண்டிய முயற்சிகளைச் செய்து கொண்டிருக்கிறார்கள். நமக்குத் தொழில்தான் அவசியம். அந்த முறையில் பார்க்கும்போது

இண்டஸ்ட்ரியல் பாலிசி தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறதா என்பதைப்பற்றி சர்ச்சை இருக்காது. அதற்கு பெரிய விவாதம் அவசியம் இல்லை. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலும் இந்தச் சர்க்கார் நீடித்து இருககுமானுல் இதே கொள்கையைத் தான் கடைப்பிடிக்கும் என்று தெரிவிததுக்கொள்கிறேன். இதே கொள்கை அடிப்படையில் தேர்தல் விஞ்ஞாபனத்தை வைத்து மக்களிடத்தில் வோட்டுப் பெறவும் தயாராக இருக்கிறேன். ஒரு வேளை மூன்ருவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இப்போது ஏற் பட்டிருக்கிற வளர்ச்சியைப்போல இரண்டு மூன்று மடங்கு அதிகம் ஏற்பட்டால் இந்தத் துறையில் கவனம் செலுத்த வேண்டிய அவசியம் ஏற்படலாம். அப்போது இதைப்பற்றி ஆலோசிக்க முடியும் என்பதை ஒப்புக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக கொள்கை பூர்வமாக தொழில்களை பரவலாக ஏற்படுத்த வேண்டும் என்று சொன்னுர்கள். அதை ஒப்புக்கொள் கிறேன். பொதுவாக நாம் எங்கெங்கே அதிகத் தொழில்கள் இல்லையோ, பினதங்கிய பிரதேசமோ அங்கெல்லாம் ஏற்படுத்துங் கள் என்றுதான் சொல்கிருேம். எந்தப் பிரதேசமாக இருந்தாலும் ஆரம்பித்து நடத்தலாம் என்ற அடிப்படையில் உள்ள நூற்பு ஆலை களை எடுத்துக் கொண்டால் வற்புறுத்த முடியும். பத்து நூற்று ஆலைகளுக்கு சென்ற 1½ ஆண்டில் லைசென்சு வழங்கப்பட்டன. அவர்கள் லைசென்சு கோரியபோது திருத்தணியில் வைக்க வேண்டும், காஞ்சிபுரத்தில் வைக்கவேண்டும், திருவாடானையில் வைக்கவேண்டும், ராமநாதபுரத்தில் வைக்கவேண்டும் என்று வற் புறுத்தினேம். அவர்கள் முடியாது என்றிருந்தால் லைசென்சு வழங்கப்பட்டிருக்காது. பொதுவாக ராஜ்ய சர்க்கார் லைசென்சு கொடுக்க சிபார்சு செய்கிறது. ஆனல் ரசாயனத் தொழிற்சாலை, இன்னும் இதுபோன்ற தொழிற்சாலைகளை இன்ன இடத்தில்தான் ஏற்படுத்தவேண்டும் என்று வற்புறுத்துவதன் காரணமாக அந்தத் தொழிலையே இழக்க நாம் தயாராக இல்லை. டிசென்ட்ரலைஸ் பண்ணுவது என்பது ஓரளவுக்குத்தான் முடியும். அதை இந்த ராஜ்ய சர்க்கார் முடிந்த அளவு செய்து வருகிறது.

கனம் சுப்பையா கூடச் சொன்னர், "சிமெண்டு உற்பத்தி செய் கிருேம் செய்கிருேம் என்கிறீர்களே, நாட்டில் நிறைய பற்ருக் குறைதானே இருக்கிறது" என்ருர்கள். இன்றைக்கு நம் ராஜ்யத் தில் 4 லட்சம் டன் சிமெண்டு உற்பத்தி செய்கிருேம். இரண்டு வருஷத்திற்குள் தாளையூத்து பாக்டரியின் உற்பத்தி 2 மடங்கு அதிகமாக்கப்பட்டிருக்கிறது. அகில இந்தியாவிலும் தனியாக இவ்வளவு அதிகமாக உற்பத்தி செய்து வேலை செய்யக்கூடியது இது ஒன்றுதான். இங்கே 200 டன் உற்பத்தி செய்துவந்ததற்குப் பதிலாக இப்போது 400 டன் உற்பத்தியாகிறது. டால்மியாபுர பாக்டரியிலும் இப்படித்தான், ராஜபாளையத்திலும் இப்படித்தான் அதிகமாக உற்பத்தி செய்யப்படுகிறது. இப்படி இன்றைக்கு 14 லட்சம் டன் உற்பத்தி செய்கிருேம், இதுபோதவில்லை என்ருல் மக்கள் இன்னும் அதிகமாக வாங்குவதற்குத் தயாராய் இருக்கிருர் கள் என்றுதான் பொருள். மேலும் மேலும் உற்பத்தியானுலும் வாங்கக்கூடிய சக்தி அவர்களிடத்தில் இருக்கிறது. ஆகவே நாட்டில் பற்ருக்குறை இருக்கிறது. ஆனல் ஒன்று. இந்தப் பற்ருக்

10th March 1961] [Sri R. Venkataraman]

குறையைக் கண்டு பயப்பட வேண்டியது இல்லை. பற்றாக்குறை இருப்பதனால்தான் மேலும் மேலும் தொழில்கள் வளர்வதற்கு இடமேற்படுகிறது. உற்பத்தி செய்யக்கூடிய பண்டமோ விற்பனையாகாமல் தேங்குமானால் தொழில் துறையில் மந்தம் ஏற்படும். புதிதாக யாரும் தொழில் ஏற்படுத்த அஞ்சுவார்கள். தொழில் சரிவு ஏற்படும்.

அடுத்தபடியாக கனம் சின்னதுரை பேசுகின்றபோது ஜப்பானிலே உருக்கு இல்லாத இடங்களில் தொழிற்சாலை ஏற்படுத்தவில்லையா என்று சொன்னார்கள். ரூர்கேலாவில் செய்யவில்லையா, துர்க்காபூரில் செய்யவில்லையா? பிலாயில் செய்யவில்லையா? முடியாது என்பது இல்லை. எல்லாம் கனிப் பொருளின் தன்மையைப் பொறுத்திருக்கிறது.

மேற்கு ஜெர்மனியையும், கிழக்கு ஜெர்மனியையும் ஒப்பிட்டுப் பாருங்கள். அவர்களுக்கு உயர்ந்த ரக இரும்புக் கனி கிடைக்கிறது. ஆனால் கிழக்கு ஜெர்மனியிலே 21 சதவிகிதம்தான் கிடைக்கிறது. நமக்காவது 36 சதவிகிதம் கிடைக்கிறது. அதேபோல அங்கே உயர்ந்த ரக நிலக்கரி கிடைக்கிறது. ஆனால் இங்கே லிக்னைட்தான் கிடைக்கிறது. அதுவும் நம் அளவுக்குத்தான் இருக்கிறது. ஆகவே அங்கங்கே கிடைக்கக்கூடிய இயற்கை வளத்தின் தன்மையைப் பொறுத்துத்தான் தொழில்வளம் அமைகிறது. இன்றைக்கு நமக்கு இருக்கிற கனி வளத்தை வைத்துக்கொண்டு ஆரம்பிக்க வேண்டும் என்கிற காலதாமதம் ஆகிறது. இன்னொன்று. இங்கே கிடைக்கக்கூடிய பழுப்பு நிலக்கரியை டெஸ்டுக்கு அனுப்ப ஜூலை மாதத்தில் கிடைத்துவிடும் என்று சொன்னேன். நாம் ஜூலை மாதத்தில் அனுப்பினால்கூட அவர்களிடம் இருந்து ரிசல்ட் கிடைப்பதற்குள் 62-ம் வருஷம் வந்துவிடும்போல் இருக்கிறது. அத்தனை காலதாமதம் ஆகும் என்பதாகத் தெரிகிறது. அவர்களிடம் இருந்த கடிதங்களைப் பார்த்தபோது. அதற்காகத்தான் உடனே கிழக்கு ஜெர்மானிய பிரதிநிதியை கூப்பிட்டு—எங்களுக்கு சீக்கிரம் இந்த ரிசல்ட் கிடைத்தாக வேண்டும் என்று பேசினோம்.

திடீரென்று ஒரு தொழிற்சாலையை ஆரம்பிக்கவேண்டுமென்று சொன்னவுடன் ஆரம்பிப்பது என்பது முடியாத காரியம். அப்படி ஆரம்பித்து நஷ்டம் ஏற்பட்டாலும் நம் மக்கள்தான் பாதிக்கப்படுவார்கள். ஆகவே எல்லாவித ஆராய்ச்சிகளையும், பரிசீலனைகளையும் ஆரம்பித்தாக வேண்டியிருக்கிறது. நானும் இதைப்பற்றி வெளி நாடுகளுக்குச் சென்றபோது ஒரு தொழிற்சாலையை எத்தனை காலத்தில் ஆரம்பிக்கலாம் என்று கேட்டேன். முன்னால் நடந்து கொண்டிருக்கிற தொழில்களாக இருந்தால் வெகு சீக்கிரத்தில் வைத்துவிடுகிறார்கள். ஆனால் புதுத்தொழிற்சாலை என்றால்—ஆராய்ச்சி, பரிசீலனை என்று நாம் படுகிற கஷ்டத்திற்கும் அதிகமாகவே கஷ்டப்படுகிறார்கள். இதில் சர்க்காரை குறைசொல்லிப் பயன் இல்லை.

[Sri R. Venkataraman] [10th March 1961

அதேபோலத்தான் எண்ணெயும். முதலில் மாக்னடிக் சர்வே பண்ணினர்கள். அதில் எண்ணெ இருக்கலாம் என்று சொன்னர்கள். அப்புறம் பூமியில் குழி தோண்டி மருந்து வைத்து வெடிக்கச் செய்து அலே எந்த இடத்தில் மோதுகிறது என்று பார்த்து—எண்ணெ இருக்கலாம் என்ருர்கள். இதுவும் ஊகம்தான். இப்படி எண்ணெ எங்கே இருக்கிறது என்பதைப் பார்ப்பதற்காக அமெரிகக நாட்டில் செலவழிக்கப்பட்ட பணம் கணக்கு வழக்கில்லே. இதனுல் இன்சால்வெண்டானவர்கள் எத்தனேயோ பேர். "ஆயில்" என்ற புத்தகத்தைப் படித்துப் பார்த்தால் தெரியும். உலகத்தில் பலர் இப்படி ஆராய்ச்சி செய்து செய்து, இன்று ஆராய்ச்சி முறைகளே வளர்ந்திருக்கிற காரணத்திஞல்தான் நாம் கொஞ்சம் வேகமாக இத்துறையில் முன்னேற முடிகிறது. அவசரமாக ஒன்றும் செய்து விட முடியாது.

உதாரணமாக பழுப்பு நிலக்கரியை ஆகஸ்டு மாதத்தில் அனுப்ப வேண்டும் என்று அவர்கள் சொன்னுல்—நாம் டிசெம்பர் மாதத்தில் அனுப்புகிரும் என்ருல் இதற்கு சர்க்கார் பொறுப்பு. இது சர்க்காருடைய குறையாகயிருந்தால் கண்டிக்கத்தான் வேண்டும். ஆனல் நாம் ஜுலே மாதத்திலேயே அனுப்பி அவர்கள் ரிசல்டைச் சொல்வதற்குக் காலதாமதமானுல் அதற்கு எந்தவகையிலும் சர்க்கார் பொறுப்பாளி அல்ல.

**SRI A. GOVINDASAMI :** ஸீஸ்மிக் டெஸ்ட் நடத்தப் போவதாகக் குறிப்பிட்டிருக்கிறதே, எங்கே நடக்கிறது? அதற்குரிய கருவிகள் எல்லாம் வந்தாகிவிட்டனவா?

**THE HON. SRI R. VENKATARAMAN :** எல்லாம் நடந்து முடிந்தாகிவிட்டது. நாங்கள் அறிக்கை தயார் செய்தபோது அதற்கான ஏற்பாடுகள் நடந்தன. அறிக்கை வெளிவருவதற்குள்ளேயே அந்தக் காரியம் நடந்திருக்கிறது என்ருல் எவ்வளவு துரிதமாக செயல்பட்டு வருகிருேம் என்பதை அங்கத்தினர்கள் உணர்ந்து சொல்லலாம். அதேபோலத்தான் டெக்னே எகனமிக் சர்வே நடத்தினேம். ரிப்போர்ட் வெளிவருவதற்குள்ளேயே இதற்கான காரியங்கள் நடந்து கம்பெனிகள் உருவாகிவிட்டன. ரிப்போர்ட்டுகள் வருவதற்குள்ளேயே காரியங்கள் நடந்துகொண்டிருக்கின்றன. திரு. சின்னதுரை அவர்கள் பல்லடத்தில் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட் வைக்கவேண்டும் என்று கட் மோஷன் கொடுத்திருக்கிருர்கள். ஆனல் அதைப்பற்றி அவர் பேசவில்லே. நான் படித்து வைத்திருக்கிறேன். கூட்டுறவு மூலமாக ஏற்படுத்துவதற்கு அவர் முயற்சி செய்யலாம். சர்க்கார் உதவி செய்யும். அதுவும் அவர்கள் கொடுக்க வேண்டியது 20 சதவிகிதம்தான். 80 சதவிகிதம் ராஜ்ய சர்க்கார் உதவி கிடைக்கும் என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, நம் ராஜ்யத்தில் புதிதாக பல தொழில்கள் வேண்டுமென்று சொன்னர்கள். ஸ்ரீ வேதாத்னம் அவர்கள் தெளிவாகச் சொன்னர்கள், மெலாஸஸை உபயோகப்படுத்தக்கூடிய தொழில் வேண்டுமென்று. சோடா செய்யவேண்டும், டம்ப்ஸ் வேண்டும். இவைகளுக்கு வேண்டிய வசதி செய்ய இந்த புத்தகத்

10th March 1961] [Sri R. Venkataraman]

திலேயே அவைப்பற்றி குறிப்பிடப்பட்டிருக்றது. அடுத்தபடியாக, அண்ணுமலே அவர்கள் சொன்னுர்கள், "ஸ்டேட் எய்டு இண்டஸ்ட்ரீஸ்" குறைவாகயிருக்கிறதென்று. 28 லட்சம் ரூபாய்க்கு 22 லட்சம் வரை டிஸ்பர்ஸாகியிருக்கிறது. இன்னும் மார்ச் 31-ம் தேதி வரையிருக்கிறது, டைம். இந்த ரிப்போர்ட் தயாரிக்கும்போது எந்தளவு டிஸ்பர்ஸ் செய்யப்பட்டதோ அது மட்டும் கொடுக்கப்பட்டிருக்கிறது. சாங்ஷன் செய்திருப்பது, 28 லட்சம். இந்த ரிப்போர்ட் தயார் செய்யும்போது அதுவரை டிஸ்பர்ஸ் செய்யப்பட்டிருப்பது 22 லட்சம். 1957-58-ல் கொடுக்கப்பட்ட தொகை 24,88,962 ரூபாய். 1958-59-ல் 4,057 கேஸ்களுக்கு 24,56,687 ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆக, ஏற்றத்தாழ்வு 30,000 இருக்கிறதென்றல் அது ஒரு பெரிய ஏற்றத்தாழ்வல்ல, அதற்காக சர்க்காரை தூக்கு போட வேண்டுமென்று சொன்னுல், எந்த சர்க்காரானுலும், யார் நடத்தினுலும் அது மிகவும் கஷ்டம். இதற்கு முன்னல் "ஸ்டேட் எய்டு இண்டஸ்ட்ரீஸ்" மட்டும்தான் இருந்தது. அங்குதான் எல்லோரும் வாங்கிக் கொண்டிருந்தார்கள். ஆனல் இன்று அங்கு யாரும் அதிகமாகப் போவதில்லை. எல்லோரும் இன்வஸ்ட்மென்ட் கார்ப்பரேஷனிடம்தான் போகிறுர்கள். இங்கு ஜாமீன் கட்டவேண்டும். ஜாமீன் சொத்தில் 75 சதவிகிதம்தான் கொடுக்கப்படும். ஆனல் அங்கோ அதிகப்படியான பணம் கிடைக்கும் என்று இப்பொழுது அங்குதான் சென்று வாங்குகிறுர்கள் அதிகம் பேர்களும். பின்னர், பொதுத் துறையில் என்ன வைத்திருக்கிறீர்கள், என்ன பிரயோஜனம் ஏற்பட்டிருக்கிறதென்றெல்லாம் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் கேட்டார்கள். நெய்வேலியில், நாலேந்து திட்டங்கள் சேர்ந்திருக்கிறது. நிலக்கரியை உபயோகப்படுத்தி 2.5 லட்சம் கிலோ வாட் மின்சாரம் உற்பத்தில் செய்வதை, 4 லட்சம் செய்வதற்கு தொழிற்சாலே அமைக்கயிருக்கிறது, உரத்தொழிற்சாலேகள் அமைக்கயிருக்கிறது. க்ளே வாஷிங் இப்படி ஒரே தொழிற்சாலேயில் பல சேர்ந்திருக்கின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் சர்ஜிக்கல் யுனிட்ஸ், ரா பிலிம் பாக்டரி, டெலிப்பிரின்டர் இவை வைக்க கம்பெனிகள் ரெஜிஸ்தர் செய்யப்பட்டு வேலேகள் நடந்து கொண்டிருக்கின்றன. கோச் பாக்டரி விஸ்தர்க்கப்பட இருக்கிறது. பர்னிஷங் பாக்டரி செய்கிறுர்கள். எல்லாமே நமக்கு வந்துவிட வேண்டுமென்ற ஆசைதான். எல்லாம் எங்களுக்குத்தான் வேண்டும், எல்லாத் தொழிற்சாலேகளும் எங்களுக்குத்தான் வேண்டும், வேறு யாருக்கும் மற்ற ராஜ்யங்களுக்கும் கொடுக்கக் கூடாது என்று தேசீய அபிவிருத்தி கௌன்ஸிலிலோ அல்லது ப்ளானிங் கமிஷனிலிலோ சொல்ல எங்களால் முடியாது. வேறு யாராவது அதிகாரத்திற்கு வந்து சொன்னல் சொல்லட்டும். எல்லாத் தொழில்களும் எங்கள் ராஜ்யத்தில்தான் அமைக்க வேண்டும், வேறு ராஜ்யங்களில் வைக்கக்கூடாது என்று சொல்ல எங்களால் இயலாது. நான் ஒன்று இங்கு திட்டவட்டமாகச் சொல்ல விரும்புகிறேன். எங்கள் ராஜ்யம் பின்தங்கிய ராஜ்யம். அதற்காக எங்களுக்குக் கொடுங்கள் என்று நாங்கள் பேசியதே கிடையாது. எங்கள் ராஜ்யத்தில்

[Sri R. Venkataraman] [10th March 1961

இன்னின்ன வசதிகள் இருக்கின்றன, திறமையிருக்கிறது, தொழில் அனுபவம் இருக்கிறது, நல்ல வாய்ப்புகள் இருக்கின்றன. அதனுல் இந்தத் தொழில்களை எங்கள் ராஜ்யத்தில் வைக்க வேண்டுமென்று கேட்கிறோமே தவிர, எங்கள் ராஜ்யம் பின் தங்கிக் கிடக்கிறதென்று சொன்னுல் அவர்கள் உடனே பேப்பரை எடுத்து மடித்து விடுவார்கள். இங்கு "ஹெவி எலெக்ட்ரிக்கல்ஸ் ப்ராஜெக்ட்" வைக்க வேண்டுமென்று சொல்லும்போது, 10 சதுர மைல் நிலம் வேண்டுமென்று சொன்னுல் நாங்கள் சென்னை ராஜ்யத்தில் கொடுக்கிறோம், அதற்கு தொழில் நுட்பம் வாய்ந்தவர்கள் வேண்டுமா, நாங்கள் தருகிறோம், எங்கள் ராஜ்யத்தில் பயிற்சி பெற்றவர்கள் இருக்கிறார்கள், தருகிறோம் என்று சொல்லி கோல்டன் ராக் வொர்க்ஷாப்பிற்கு அழைத்துச் சென்று காண்பித்தோம், 8,000 பேர்கள் அங்கு திறமையாக வேலை செய்கிறார்கள். அதைக் கண்டு பாராட்டினுர்கள் செக்கோஸ்லேவேக்கியாவிலிருந்து வந்தவர்கள். கோச் பாக்டரியை காண்பித்தோம். உலகத்திலேயே உள்ள ஒரு உன்னத தொழிற்சாலையை நாம் நம் ராஜ்யத்தில் நடத்துகிறோம். ஆக, நமக்குள்ள வசதிகள், நமக்குள்ள திறமை, நம் அனுபவம் இவைகளையெல்லாம் காட்டி கேட்கிறோமேயல்லாது பின் தங்கிக் கிடக்கிறது எங்கள் ராஜ்யம், ஆகவே இத்தொழில்களை இங்கு அமையுங்கள் என்று கூறவில்லை. அடுத்தபடியாக திரு. கோவிந்தசுவாமி அவர்கள் சொன்னுர்கள், நெய்வேலி நம் ராஜ்ய தொழிற்சாலையாக இருக்கக்கூடாதா? என்று. அப்படியானுல், அப்படிச் செய்தால் பிலாய் தொழிற்சாலை அந்த மாகாண அரசாங்கத்தினுடையதாகி விடும், சிந்திரி தொழிற்சாலை பீஹார் ராஜ்யத்திற்கு போய்விடும். இப்படியாக அந்தந்த ராஜ்யத்திலுள்ள தொழிற்சாலைகள் அந்தந்த ராஜ்யங்களுக்கு போய் விட்டால் நிலைமை என்னுவது? அத்தியாவசியப் பண்டங்கள் எல்லாவற்றையும் கூடுமான வரையில் மத்திய அரசாங்கம்தான் வைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்பதுதான் எங்கள் விருப்பம். அப்பொழுதுதான் உருக்கு, இரும்பு இவைகளை நாம் நமக்குப் போதுமான அளவில் கொண்டு வரமுடியும். அப்பொழுதுதான் நமக்கு நிலக்கரி கொண்டு வர முடியும். அந்தந்த ராஜ்யங்கள் அந்தந்தத் தொழிலை வைத்துக் கொண்டு விட்டால் நமக்கு நிலக்கரி எப்படி கிடைக்கும். அப்பொழுது அவர்கள் இஷ்டம்போல்தான் நடக்கும் என்ற நிலை ஏற்பட்டு விடும். ஆகவே, அது ஒருக்காலும் நடக்காது. பின், சிமென்டுக்கு "புல்ப்ரைஸ்" வைத்திருக்கிறார்களே. ஏன் "கோல்" க்கு இல்லை என்று கேட்டார்கள். அவர்கள், ஸ்டீலுக்கு வைக்கவில்லையா என்று கேட்பார்கள். ஆக, இதெல்லாம் உபயோகமில்லாத வாதம். தொழில் வளத்திற்கு நம் ராஜ்யத்தில் என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன என்று பார்க்கவேண்டும். இரண்டு கஷ்டங்கள் இருக்கின்றன. அதை ஒப்புக்கொள்கிறேன். அதை வற்புறுத்திப் பேசுவார்கள் என்று எதிர்பார்த்தேன். திரு. அன்பழகன் அவர்கள்கூட அதைத்தான் சொன்னுர்கள். ஒன்று, நமக்கு இரும்பு கிடைக்கவில்லை; இரண்டாவது, நிலக்கரி கிடைக்கவில்லை. இரும்பு கிடைக்காததற்குப்

1–30 p.m.

10th March 1961] [Sri R. Venkataraman] –

பல காரணங்களை அவர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள். திடீரென்று வெள்ளம் வந்தது, கல்கத்தா-சென்னை போக்கு வரத்து நின்றுவிட்டது, அதனால் நமக்கு நிலக்கரி வரவில்லை என்று பல கஷ்டங்கள் இருக்கின்றன. கப்பல் மூலமாவது நிலக்கரி கொண்டு வந்தாகவேண்டும் நம் ராஜ்யத்திற்கு. நம் ராஜ்யத்தின் தொழில் வளம் பெருக இரும்பும், நிலக்கரியும் நிச்சயமாக எந்த வகையிலாவது கிடைக்கும்படியான நிலைக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். அதைத்தான் மத்திய சர்க்காரிடம் வற்புறுத்திக் கொண்டிருக்கிறோம். இரும்புத் தொழிற்சாலை முன்பின் ஏற்பட்டாலும், ஒரு ஸ்டீல் ரோலிங் மில் நம் ராஜ்யத்தில் ஏற்படுத்த வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டு, மூன்று ஆண்டுகளாக வாதிட்டு, பில்லட் உபயோகித்துக் கொள்கிறோம் என்று சொல்லி, அது வந்திருக்கிறது. பின், அதற்காக "டம்ப்" வைக்கலாம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். தூத்துக்குடியில், ஒரு கப்பல் சார்ட்டர் செய்து நிலக்கரியைக் கொண்டு வந்து, தூத்துக்குடியிலிருந்து உப்பைக் கொண்டு போக ஒரு கப்பல் வைத்துக் கொள்ளலாம். இப்படி பல யோசனைகள் இருக்கின்றன. பொதுவாக நமது ராஜ்யத்தில் தொழில் இன்னும் அதிகரிக்கவேண்டும். நான் ஒரு வேண்டுகோள் விடுத்துக் கொள்ள விரும்புகிறேன். நம் ராஜ்யத்தில் தொழில் அபிவிருத்தி ஏற்படவேண்டுமென்று விரும்புகிற நண்பர்கள் எல்லோரும் சென்னை ராஜ்யத்தில் கம்பெனிகள் ஆரம்பித்தால் அதில் "போக்கனுகை" ஆளுக்கு 100 ரூபாயாவது பங்கு போட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அல்லது வாய் அளவில் தொழில் வளர வேண்டும், தொழில் வளரவேண்டுமென்று சொல்லிக் கொண்டிருந்தால் தொழில் வளர்வது கஷ்டமாக இருக்கிறது. நாம் ஒரு "இன்வஸ்ட்மென்ட் க்ளைமட்"-டை உண்டாக்கவேண்டும். அப்பொழுதுதான் பலர் பல தொழில்களைத் துவக்க முன்வருவார்கள். இன்று நம் ராஜ்யத்திலுள்ள பல்வேறு லைசென்ஸ்களைப் பார்க்கும் போது நாம் வெகு வேகத்தில் தொழில் துறையில் வளர்ச்சியடைந்து முன்னேற்றமடைவோம் என்ற நம்பிக்கையிருக்கிறது. ஆனால் கம்பனி ஆரம்பிக்க நினைப்பவர்களுக்கு போதுமான காப்பிட்டல் திரட்ட முடியுமா, அதற்கு வழியிருக்குமா இருக்காதா என்ற பயம் இருக்கிறது. ஆகவே சில கம்பனிகளை ஆரம்பிக்க வேண்டியவர்கள் 3, 6 மாதங்கள் தள்ளிப் போட்டு பின்னர் ஷேர் இஷ்யூ செய்யலாம் என்று நினைக்கிறார்கள். நம்முடைய ராஜ்யத்தில் இன்றைக்கு இருக்கிற தொழில் முன்னேற்றத்தை வைத்து நம்முடைய ராஜ்ய மக்கள் தொழில் வளம் பெறுவதற்கு ஒவ்வொருவரும் கொஞ்சம் அதிகமான பங்கு எடுத்துக்கொள்வார்களானால், இன்னும் நல்ல முன்னேற்றம் ஏற்படும் என்று நான் நம்புகிறேன். இந்த விவாதத்திலே பங்கெடுத்துக்கொண்ட கனம் அங்கத்தினர்கள் சொன்ன எல்லா அரிய யோசனைகளையும்—அவைகளைப்பற்றியெல்லாம் இப்போது பதில் சொல்ல இயலாவிட்டால்கூட--சர்க்கார் பரிசீலனை செய்து, ஒவ்வொன்றுக்கும் என்ன நடவடிக்கை எடுக்க வேண்டுமோ அதை நிச்சயமாக எடுக்கும் என்று தெரிவித்துக் கொண்டு, இந்த மான்யத்தை சபை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri P S. Chinnadurai, pressing his Cut Motion?

SRI P. S. CHINNADURAI : I am pressing my Cut Motion, Sir.

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs. 2,97,45,400 under Demand XXII—Industries and Cinchona be reduced by Rs. 100.'

The Cut Motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 2,97,45,400 under Demand XXII—Industries and Cinchona.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri S. M. Annamalai, pressing his Cut Motion?

SRI S. M. ANNAMALAI : எனது மோஷனை ஒத்துக் கொண்டு விட்டார்கள்—அதாவது நிறைய கைத்தொழில்கள் ஆரம்பிக்க வேண்டுமென்பதை அமைச்சரே ஒத்துக்கொண்டு விட்டார்.

DEPUTY SPEAKER : Is the hon. Member withdrawing or pressing his Cut Motion?

SRI S. M. ANNAMALAI : Sir, I am pressing my Cut Motion

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs 5,59,44,800 under Demand XLI—Capital Outlay on Industrial Development be reduced by Rs. 100.'

The Cut Motion was put and lost.

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 5,59,44,800 under Demand XLI—Capital Outlay on Industrial Development.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. tomorrow.

The House then adjourned.

## VI—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

*A.—Statutory Rules and Orders.*—Nil.

*B.—Reports Notifications and others papers.*

85. *Notification issued with G.O. Ms. No.* 3847, *Home, dated 26th November* 1960, *amending the Management of Special Homes and Work Houses in the State of Madras (except the City of Madras, Rules*, 1960, *under section* 13 *of the Madras Prevention of Begging Act*, 1945 (*Madras Act XIII of* 1945).

# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

**Saturday, 11th March 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Village maps*

* 741 *Q.*—SRI **S. M. ANNAMALAI :** கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சர்வே நம்பர், நிலங்களின் எல்லைகள், கிராமப் படங்கள் போன்றவைகளைச் சரியானபடி சர்வே செய்து வைத்துக் கொள்ள வேண்டுமென்று மத்திய சர்க்கார் மாநில சர்க்காருக்கு ஆலோசனை கூறியுள்ளார்களா ?

(இ) அப்படியாயின், சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

**SRI S. M. ANNAMALAI :** ஸார், ரயத்துவாரி நிலங்கள் எப்போது சர்வே செய்யப்பட்டன ? அப்படி சர்வே செய்யப்பட்ட மொத்த நிலத்திற்கும் மேப் போடப்பட்டிருக்கிறதா ? அப்படி போடப்பட்ட மேப்புகள் அனைத்தும் வில்லேஜ் கர்ணங்களிடத்தில் இருக்கின்றன. ஆனால் அனைத்தும் சரிவரத் தெரியவில்லை. ஆகவே மறுபடியும் சர்வே செய்யக் கூடாதா ?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** கேள்வி, மத்திய அரசாங்கம் இந்த மாதிரி ஏதாவது சர்வே செய்ய ஆலோசனை சொல்லப்பட்டதா என்பது. அதற்கு இல்லை என்று சொன்னேன். மற்றபடி ஏதாவது சமாசாரம் வேண்டுமானால், வேறு தனிக் கேள்வி போடவேண்டும்.

*Panchayat Executive Officers*

* 742 *Q.*—SRI T. T. DANIEL : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the scale of pay of the Panchayat Executive Officers in the Kanyakumari district and the scale of such officers in the other districts; and

(*b*) the reasons for the disparity in the scale of pay, if any?

[11th March 1961

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The scales of pay of Panchayat Officers in the Kanyakumari District and Shencottah Taluk of Tirunelveli District are—

| | |
|---|---|
| I Grade ... ... ... ... ... | Rs. 45–5–75 |
| II Grade ... ... ... ... ... | Rs. 30–3–45 |

Prior to 1st October, 1960, the scales of pay of Executive Officers of Panchayats in this state were :—

| | | RS. |
|---|---|---|
| 1. | Selection Grade | 100—2½—120 |
| 2. | I Grade | 80—2½—100 |
| 3. | II Grade | 65—1½— 80 |
| 4. | III Grade | 50—1½— 65 |

It was recently decided to constitute a State Subordinate Service for Executive Officers and to have only two grades instead of four. Accordingly with effect from 1st October 1960, their scales of pay have been revised as follows :—

| | RS. |
|---|---|
| I Grade | 125—5—175 |
| II Grade | 90—4—110—5—140 |

(*b*) Panchayats in the Kanyakumari District and Shencottah taluk of Tirunelveli district are different in character from those in the other areas of the State. The question of remodelling the Panchayats in those areas on the lines of Panchayats in other areas and bringing them under the Madras Panchayats Act, 1958, is under consideration separately. In that connection, the question of integrating the services of the Panchayat Officers with the corresponding posts of Executive Officers in this State and also the revision of scale of pay of the Panchayat Officers will be taken up.

SRI T. T. DANIEL : Whereas the scales of pay of the Panchayat Executive Officers in Kanyakumari district is lower than their companions in the Madras State at present, is it not proper, just and equitable even before the extension of the Panchayat Act to that part, their scales of pay are brought to the level of the scales of pay of their comrades in this State?

THE HON. SRI C. SUBRAMANIAM : The administrative set up of Panchayat in Kanyakumari district is different from the administrative set up in the rest of the State. The matter has been taken up and an early decision will be taken up.

*Population and cultivated lands (North Arcot)*

* 743 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு ஜில்லாவில், ஒவ்வொரு தாலூகாவிலும் உள்ள சாகுபடி நிலம் எவ்வளவு? ஜனத்தொகை எவ்வளவு?

(இ) உணவு உற்பத்தி அளவு எவ்வளவு? என்ன, என்ன?

11th March 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) A paper * is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், விவசாயத்திற்கு லாயக்கான, விவசாயம் செய்யாமல் தரிசாக இருக்கக்கூடிய நிலங்கள் எவ்வளவு இருக்கிறது ? அவைகளை விவசாயம் செய்வதற்கு உடனடியாக முயற்சி செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதற்குத் தனியாக கேள்வி போட்டால் விவரங்கள் எல்லாம் சொல்ல முடியும்.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்தக் கேள்விக்கு மேஜை மேல் வைத்திருக்கக்கூடிய அறிக்கையில், "டர்ம்ஸ் ஆப் பிரைஸ்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதில் தாலுகாவாரியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அது ரூபாயா அல்லது தானியத்தை டன்னைகப் போட்டிருக்கிறார்களா, என்னவென்று எனக்குத் தெரியவில்லை. ரூபாயாக இருந்தால், 3,17,793 ரூபாய்க்கான நெல் தானியங்கள் தானா அந்த மாவட்டத்தில் இந்தப் பசலியில் விளைந்தது என்பதைக் கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்படி "டெர்ம்ஸ் ஆப் பிரைஸ்" என்று இருந்ததை நான்கூட நேற்றிரவு கவனித்தேன். அது "டெர்ம்ஸ் ஆப் பிரைஸ்" ஆக இருக்க முடியாது. "டெர்ம்ஸ் ஆப் ரைஸ்" ஆகத்தான் இருக்க வேண்டும். கனம் அங்கத்தினர் இவ்வளவுதூரம் கவனித்து வந்து, இதைக் குறிப்பிட்டதற்காக நான் அவரைப் பாராட்டுகிறேன். இது ரைஸ் தான், டன் அல்ல.

*Lower Bhavani irrigation area*

* 744 Q.—SRI K. R. NALLASIVAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கீழ் பவானி பாசனப்பகுதியில் உடனடியாக தண்ணீர் பாய்ச்ச 'டைம்ஷீட்' கொடுக்க கோரி சர்க்காருக்கு கோரிக்கைகள் வந்தனவா ?

(இ) அப்படியானல், அதன்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Yes Sir. A representation was received from the Member.

(b) The Collectors of Coimbatore has issued necessary instructions to his subordinates to regulate internal distribution of water equitably under each channel wherever necessary in consultation with the ryots.

SRI K. R. NALLASIVAM : இந்த "டைம்ஷீட்" பல வருஷங்களாக இருக்கிறதே தவிர, எல்லா கிராமங்களிலும் எல்லாப் பகுதிகளுக்கும் இந்த "டைம்ஷீட்" கொடுக்கப்படுவது கிடையாது.

---

* Printed as Appendix I on page 214-215 infra.

[11th March 1961

ஆகவே ஒட்டுமொத்தமாக எல்லா கிராமங்களுக்கும், அவர்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இந்த "டைம்ஷீட்" டைக் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI M. A. MANICKAVELU: முன்னே கிராப் கண்ட்ரோல் சிஸ்டம் இருந்தது. அப்போது இந்த முறையை ஏற்பாடு செய்திருக்கிறோம். 1369-வது பசலியில் என்டையர் லோயர் பவானி பிராஜக்டுக்கும், எக்ஸ்பரிமெண்ட் பேசிஸில் கொடுக்கப்பட்டு, அது இன்னொரு வருஷத்திற்கு நீடிக்கும். அது எப்படி வேலை செய்கிறது என்பதைப் பொறுத்து, அந்தப் பாட்டர்ன் வைத்துக் கொள்வதற்கு எல்லா இடங்களுக்கும் ஏற்பாடு செய்யப்படும்.

SRI K. R. NALLASIVAM: விவரங்கள் சம்பந்தமான கேள்வி அல்ல இது. "டைம்ஷீட்" அதாவது தண்ணீர் பாய்ச்சுவதற்கு ஒவ்வொரு விவசாயிக்கும் முறைச் சீட்டு கொடுக்க வேண்டுமென்ற கோரிக்கையைப் பற்றியது. இந்த முறைச் சீட்டை எல்லா விவசாயிகளுக்கும் கொடுப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU: The hon. Member seems to have represented that there were some difficulties in irrigation in the tail end in certain places. The Collector, Coimbatore, thereupon issued orders regarding the enforcement of the time schedule available wherever necessary with suitable modifications. The hon. Member has also requested that instructions might be issued to the concerned officers to regulate the supply of water in the Lower Bhavani Project according to the time schedule. Accordingly, the Collector of Coimbatore issued orders to the revenue officials in the district to follow and enforce the time schedule wherever necessary in consultation with the ryots and to keep the ryots informed of the fact by beat of tom tom in the villages. No serious complaints have been received and no difficulties are felt in the matter of irrigation.

*Water-supply (City)*

* 745 *Q.*—SRI N. K. PALANISAMI: } Will the
SRI K. SATTANTHA KARAYALAR: }

Hon. the Minister for Revenue be pleased to state the steps taken by the Government to prevent the deteriorating water-supply position in the City of Madras?

THE HON. SRI M. A. MANICKAVELU: Investigation is being conducted to bring the Cauvery waters to the Madras City. Utilising the waters of Pennar in Andhra Pradesh is another long term measure under consideration. Certain short term measures, namely carrying water from Poondi and Cholavaram in closed pipes and acquisition of irrigation rights under Cholvaram and Red Hills tanks are also under consideration.

11th March 1961]

SRI N. K. PALANISAMI : Even though there is heavy rain during this year restrictions in water supply have been imposed. If so, what are the measures proposed to be taken by the Government to meet the situation if there are no sufficient rains?

THE HON. SRI M. A. MANICKAVELU : I just now narrated the measures contemplated to be taken for the growing population of the City. This water is not sufficient. That is conceded. But how to find water? There is a long term measure to get water from Andhra rivers. It is a big scheme. The long term measure can be finalised after making negotiation with the other State Government. Meanwhile we are trying how far it is possible to get water from the Cauvery. That is being investigated. In the meantime we are having short terms measures. (1) that is conveying water from Poondi and Cholavaram in closed pipes to avoid wastage by percolation and evaporation and (2) the acquisition of irrigation rights under Cholavaram and Red Hills Tanks with a view to save water now used for irrigation. This is the short term measure contemplated to meet the shortage.

SRI M. KALYANASUNDARAM : அமைச்சர் அவர்கள் சொல்லியபடி உடனடியான தேவையை பூர்த்தி செய்வதற்கான நடவடிக்கைகளை எவ்வளவு அதிகமாக எடுத்துக்கொண்டாலும், வளர்ந்து வரக்கூடிய சென்னை நகரத்தின் தேவையை பூர்த்தி செய்ய முடியாது. ஆகையால் பெண்ணாறு, காவேரித் தண்ணீரை கொண்டு வருவதன் மூலம்தான் சென்னை நகரத்தின் தேவையை பூர்த்தி செய்ய முடியும். பெண்ணாற்றிலிருந்து தண்ணீர் கொண்டு வருவதுபற்றி ஆந்திரா அரசாங்கத்துடன் பேச்சு வார்த்தைகள் நடத்தப்படுகிறதா? அது எந்த நிலையில் இருக்கிறது?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, there was some preliminary talk sometime back, but it could not be pursued further until we exhausted other easier and speedier measures. I may also inform the hon. Member that now there is a possibility of converting sea water into potable water. We understand that it has been successfully worked in Israel. If that becomes economical, it would be very useful indeed.

SRI A. A. RASHEED : Is there any proposal to supply completely mechanically filtered water to the city of Madras at least during the Third Plan?

MR. SPEAKER : How does it arise out of the main question? The hon. Member may give notice of a separate question.

SRI N. K. PALANISAMI : May I know whether the Andhra Pradesh Government have agreed to supply water to the city of Madras?

THE HON. SRI M. A. MANICKAVELU : It is still a matter for negotiation.

SRI R. SRINIVASA IYER : ஒரு திட்டமானது பூர்த்தியாக்கப் பட்டிருக்கிறதே? 1953-ம் வருஷத்தில் பரிசீலிக்கப்பட்டு, முடிவடைந்திருக்கிறதே? அதாவது கிருஷ்ணா-பெண்ணாறு திட்டம்,

[11th March 1961

சென்னை அரசாங்கம் 34 கோடி ரூபாய் கொடுத்தால் 6 லட்சம் ஏக்கர் நிலங்களுக்கு செங்கல்பட்டு ஜில்லாவிலே நீர்ப்பாசனத்திற்கு உபயோகப்படுவதோடுகூட, மதருஸ் ஸிடிக்கும் தண்ணீர் சப்ளை செய்ய முடியும் என்ற திட்டம் முடிவடைந்திருக்கிறதே. அப்படியிருக்கும்பொழுது 'பிரிலிமினரி டாக்' என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்களே? பழைய திட்டம் கைவிடப்பட்டு விட்டதா? அல்லது அதைத் தீவிரமாக நடத்த முடியுமா என்று கேட்கிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : எதுவும் கைவிடப் படவில்லை. இந்த விஷயங்களெல்லாம் ஸோனல் கவுன்ஸிலில் சந்தித்து ஒரு சுமுகமான முடிவுக்கு வரவேண்டும். நாம் நமக்கு வேண்டுமென்று சொல்லுகிறோம். அங்கே ஒருவர் ஒரு சொட்டு தண்ணீர்கூட கொடுக்க முடியாது என்று தனிப்பட்ட முறையில் சொல்லுகிறார். இம்மாதிரி நிலைமை இருக்கிறது. எல்லோரும் சேர்ந்து உட்கார்ந்து ஸோனல் கவுன்சிலில் முடிவு செய்யவேண்டும். ஸோனல் கவுன்ஸிலில் முடிவு செய்து அவர்களும் ஒத்துக்கொள்ள வேண்டும், நாமும் ஒத்துக்கொள்ளவேண்டும். பண சௌகரியத்தையும் பார்க்கவேண்டியிருக்கிறது. எல்லாவற்றையும் பார்த்துத்தான் செய்யவேண்டும்.

SRI M. KALYANASUNDARAM : கடல் நீரை சுத்தம் செய்து வழங்குவதற்கு ஏற்பாடு செய்வதாக உத்தேசம் என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். அது பரிசிலனை செய்யப்பட்டதா? சாத்தியம் என்று கருதப்படுகிறதா?

THE HON. SRI M. A. MANICKAVELU : It is being experimented in other places.

SRI M. KALYANASUNDARAM : Has it been experimented in Madras?

THE HON. SRI M. A. MANICKAVELU : Not yet, sir. Why should we duplicate the experiment when other people are doing it? The question of cost alone stands in the way and if it could be made cheaper, I think we can also undertake it.

SRI T. SAMPATH : Sir, the Hon. Minister stated that there was a proposal to bring the Cauvery water to the Madras city. May I know whether that source would be perennial and whether there would be plentiful supply in the Cauvery for this purpose?

THE HON. SRI M. A. MANICKAVELU : During the investigation, all these points will be taken into account.

SRI K. VINAYAKAM : Sir, pending the proposal of augmenting our water-supply from neighbouring States, may I know whether it is not a fact that there is enough water in the Red Hills Lake to supply to the needs of the City? If so, will the Government issue instructions to the Corporation authorities to lay down water pipes to the extended areas like Kodambakkam and Saidapet where no potable water is available for drinking?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I am surprised to hear from the hon. Member who is an ex-Counciller of the Corporation, that there is plenty of water in the Red Hills and only

the laying of water pipes was an impediment that stood in the way of supplying water to the city. There is scarcity of water and that is why we are taking up other steps for augmenting the water-supply.

SRI S. RANGANATHA MUDALIAR: As a short term measure, will the Government consider the desirability of desilting the Red Hills Lake in view of its rapid silting up?

THE HON. SRI M. A. MANICKAVELU: That is a complicated question, Sir. Now, I think the best way of immediately solving this problem is to get water through the closed pipes and also acquire irrigation rights. That will give us a few million cubic feet of water more.

*Famine areas*

* 746 *Q.*—SRI N. K. PALANISAMI: Will the Hon. the Minister for Revenue be pleased to state the details of the relief measures taken by the Government in the drought affected areas of Palladam and Dharapuram in Coimbatore district?

THE HON. SRI M. A. MANICKAVELU: A total sum of rupees 3 lakhs—two lakhs for Palladam taluk and one lakh for Dharapuram taluk has been sanctioned for the execution of pond and road works. The choice of specific works is left to the Collector's discretion.

SRI N. K. PALANISAMI: Even though these areas are continuously affected by drought, may I know why the Government have not allotted considerable amounts to eradicate this kind of drought there?

THE HON. SRI M. A. MANICKAVELU: For permanently eradicating drought God must come to our rescue. But, to alleviate the distress of the people, we could allot money for taking up some works in order to give employment. As the situation warranted, certain amounts have been allotted as mentioned by me.

**SRI A. SENAPATHI GOUNDER:** தாராபுரத்திற்கு பஞ்ச நிவாரணத்திற்காக ஒரு லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருப்பதாகச் சொன்னார்கள். இது யானைப் பசிக்கு சோளப் பொரி போடுவது மாதிரி இல்லையா என்று கேட்கிறேன்.

**THE HON. SRI M. A. MANICKAVELU:** சில சமயங்களில், ஒன்றுமே இல்லாமல் இருப்பதைவிட சோளப் பொரியாவது கொடுத்து கொஞ்சம் வாய் ஆடுகிற அளவுக்கு உதவவேண்டும் என்ற அளவிலே இது உதவியாக இருக்கும்.

**SRI K. G. PALANISWAMY GOUNDER:** கலெக்டர் அவர்கள் தாராபுரம் நிவாரண வேலைக்காக 3 லட்சம் ரூபாய் கொடுப்பதற்கு சிபார்சு செய்திருந்தபோதிலும், அரசாங்கம் ஒரு லட்ச ரூபாய்தான் கொடுத்திருக்கிறார்கள். மேலும், அதிகப் படியாக கேட்ட 2 லட்ச ரூபாயையும் கொடுக்க அரசாங்கத்திற்கு உத்தேசம் உண்டா?

**THE HON. SRI M. A. MANICKAVELU:** கலெக்டர் சிபார்சு செய்தாலும் அதுபற்றி கவனிக்கப்படும்.

[11th March 1961

SRI N. K. PALANISAMI : Out of the amount allotted for Palladam taluk only 7 new wells have been dug, about 13 wells have been deepened and only 3 roads have been laid. When such is the case, may I know how the Hon. Minister expects to alleviate the distress?

THE HON. SRI M. A. MANICKAVELU : It is a matter for the local officers and also for the hon. Member to bring to my notice. If the situation warrants, we will look into the matter.

MR. SPEAKER : Hon. Members should only ask questions and not supply information to the Hon. Ministers during the question hour. In this case, the hon. Member Sri Palanisami seems to know more than the Hon. Minister as he referred to the number of wells dug, number of roads laid and so on. He could have straightway put a question to the Hon. Minister instead of giving all the information that he has given.

* 747 Q.—SRI K. R. NALLASIVAM : *கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) 1—9—1960-லிருந்து 30—9—1960-க்குள் பஞ்சநிலை பற்றிப் பரிசீலனை செய்ய கோவை கலெக்டர் எந்த தாலுக்காவில் பிரயாணம் செய்தார் ?*

*(இ) எந்த தாலுகாக்கள் பஞ்சப் பிரதேசம் என அறிவிக்கப் பட்டுள்ளன ?*

*(உ) பஞ்ச நிவாரண வேலைகள் யாது ?*

*(எ) அதற்கென ஒதுக்கப்பட்டுள்ள தொகை எவ்வளவு ?*

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) Palladam and Dharapuram taluks, Sir.

(b) None.

(c) Execution of pond works and road works has been undertaken.

(d) A sum of Rs. 2 lakhs for Palladam taluk and another one lakh for Dharapuram taluk has been sanctioned.

SRI K. R. NALLASIVAM : *பல்லடம், தாராபுரம் தாலுக்காக்களைப்போலவே ஈரோடில் சென்னிமலை, ஊத்துக்குழி பகுதிகளும் மிகவும் மோசமான பகுதிகள் அதையும்கூட பரிசீலனை செய்வதற்கு சர்க்கார் கலெக்டருக்கு யோசனை சொல்லுமா ?*

THE HON. SRI M. A. MANICKAVELU : *இதிலே சர்க்கார் கலெக்டருக்கு யோசனை சொல்லுவது என்பது அல்ல. கலெக்டர் தான் சர்க்காருக்கு யோசனை சொல்லவேண்டும். அந்தமாதிரி சூழ்நிலை அங்கு இருந்தால், கலெக்டர் எழுதுவார் ?*

SRI A. SENAPATHI GOUNDER *இந்த 'பாண்டு வொர்க்ஸ்', கிணற்று வெட்டு வேலையைத் தவிர, மண் வளப்பு பாதுகாப்பு திட்டத்தையும் பாவலாகச் செய்ய வேண்டுமென்று கேட்டிருக்*

Dr. P. S. Loganathan in his Report on the Techno-Economic Survey of the State recently published. So far as the Krishna and Godavari rivers are concerned, a large quantity of these waters according to us, are going to waste. The waters of these rivers should be brought to Madras State. A thorough study of the cost of cultivation per acre in relation to the crop pattern should be made. So far we have not been able to gather information about the cost of cultivation per acre for easy crop in every area. We have got to do it very quickly so that we can advise ryots as to what crops they should grow profitably and in what soil. There should be increased cultivation of commercial crops which will be more useful for gur industries and they will also earn foreign exchange. We are doing a great deal in that respect and something more has got to be done. A special drive to cover the East Coast belt to a depth of at least ten miles with coconut and casuarina plantations should be made. Coconuts are in great demand. We are importing Rs. 25 crores worth of coconut copra every year. We can plant teak and babul ( கருவை ) trees in our tank fore-shores. In the Zamin and Inam estates where the zamindars were having supreme control over the tanks, they had grown babul trees and now they are not in existence. So, we must re-plant babul trees which will be useful for agricultural implements.

So far as fisheries are concerned, there should be an intensive development of inland fisheries. According to statistics, in one acre of waterspread of an average depth of three feet, we can grow and get Rs. 3,000 worth of fish per year. As the majority of the people in this State are non-vegetarians, we must develop inland fisheries. Panchayats will go a great way to help us, if only fisheries in non-irrigation ponds and tanks are vested with them; it is said this matter is under consideration of Government. But orders have not so far been passed. A shark liver oil factory must be set up in Nagapattinam or at least in Tuticorin as recommended by Dr. P. S. Loganathan. Something also should be done towards increasing marketing facilities, fish-curing and preservation. In this connection, I will reiterate the request of Dr. Soundaram Ramachandran that fishermen villages must be provided with good road facilities and there should be a scheme to connect all of them with the main road. In my constituency there are about 20 fishermen villages which have no roads. They have to bring their head-loads of fish from the sea along ior two furlongs of sea sand, which is a difficult thing to do. Fishermen villages also should be provided with good water-supply and it is very important and it should be done.

So far as animal husbandry is concerned, the Government have done a great deal. Even the All-India prizes we have won; and anybody who saw the cattle show organised at the State level or the regional level would certainly certify that we have done a great deal in this respect. Something more has got to be done. We

are exporting hides and skins on a large scale to the United Kingdom. Animal carcass utilisation scheme is in operation in Baksni-ka-talab near Lucknow and such a scheme has got to be implemented in the Madras State also. I have given a scheme to the Hon. Ministers for Agriculture and Industries; it is under investigation. I request that it may be taken up at least in Madras City in the first instance. Our officers who have undergone training in this respect are wasting their knowledge in the veterinary college at present. Their services should be properly utilised.

There should be an increase in key village scheme all over the State and the whole State should be covered by 1971. Sir, in this respect, we have to increase the inspecting staff for the key village schemes. Sufficient staff has not been provided. So far as animal husbandry department is concerned, we have not spent the amount provided for in the Second Five-Year Plan. Staff must be increased and sanctioned when the Director of Animal Husbandry puts up a proposal reasonable with the work involved. Without enough supervisory staff no real useful work can be done.

The veterinary hospitals are very important. I request at least one veterinary hospital should be opened in each Revenue Division and a Veterinary Dispensary in each taluk.

So far as irrigation is concerned, the Estimates Committee has exhausted all major sources. There are only minor irrigation works to be taken up. In this respect in my area, Pattukkottai and Arantangi Taluks, there are number of jungle streams and their water run to waste. I have been representing this matter for the past four years. These are all small irrigation schemes and if they are executed they would yield quick results. Now there are 2 works under execution and they are likely to be finished. There are twenty other schemes under investigation. There are proposals for constructing anicuts across Agniyar, Ambuliyar and Pappankanni in Pattukkottai taluk and Vellar in Arantangi tank. These are schemes which would bring large tracts of waste lands under irrigation, stabilise existing irrigation and would help to step up the food production a great deal. There is inordinate delay in implementing these schemes.

So far as irrigation is concerned, the Estimates Committee has made a report last year. Some orders must be passed on the report and on the recommendations made by that Committee. These recommendations should be implemented as far as possible and as early as possible. The minor irrigation tanks and the major irrigation tanks should be handed over to the Food Production Department for renovation and maintenance. In Russia the Ministry of Agriculture is in control of irrigation as well. I therefore suggest that irrigation and agriculture should go together.

I desire to mention that there is no co-ordination between the Public Works Irrigation Department and the Food Production Department. There are about 33,953 major and minor tanks in our State. The area irrigated by them is equal to 40 per cent of the total irrigated area in the State. Underground water resources should also be tapped. At present, they have taken up the improvement work of few tanks only. They must take up the improvement work for all the tanks at the earliest possible time. At the rate at which we are now taking up the tanks it will take 50 years more to complete. I request therefore that all the minor irrigation works and the jungle stream works should be taken up on hand immediately without any loss of time.

**Sri M. A. MUTHIAH CHETTIAR** : தலைவர் அவர்களே, கால்நடை, விவசாய, மீன் இலாக்காக்களுக்காக கோரியிருக்கும் மானியத்தை ஆதரிக்கும்போது விவசாய அபிவிருத்திக்காக நமது அமைச்சர், மற்றும் அந்த அந்த இலாகா செய்துள்ள சேவைகளை செய்துவரும் சேவைகளைப் பாராட்டி ஒரே ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன்.

குன்னூரில் உள்ள பொட்டானிகல் கார்டன் இன்றைய தினம் உபயோகம் இல்லாமல் இருக்கிறது. அதை உபயோகப்படுத்தக் கூடிய திட்டத்தை வகுக்க வேண்டும். சில உயர்ந்த ரக விருட்சங்கள் எல்லாம் அங்கே இருக்கின்றன. கோயம்புத்தூர் விவசாயக் கல்லூரி மாணவர்களுக்கு சிறந்த ஆராய்ச்சி செய்வதற்கு உபயோகப்படக்கூடிய வகையில் சில லட்சம் ரூபாய் செலவானாலும் அதைப் பாராமல் உபயோகப்படத்தக்க வகையில் அதை அமைக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இன்னும் பல விவசாயக் கல்லூரிகள் நம் ராஜ்யத்தில் ஏற்படுவதற்கு முயற்சி செய்ய வேண்டும். அதேபோல் தமிழ் நாட்டில் இன்னும் இரண்டு, மூன்று வெடரினரி காலேஜ்கள் ஏற்படுத்துவதற்கு முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறேன்.

**Sri P. G. KARUTHIRUMAN** : அவைத் தலைவர் அவர்களே, இன்று விவசாய அமைச்சர் கொண்டுவந்திருக்கும்படியான மானியத்தை ஆதரித்து சில வார்த்தைகள் சொல்ல ஆசைப்படுகிறேன். நாட்டின் சுபிட்சம் எங்கு இருக்கிறதென்றால் பெரும் பட்டிணங்களில் இருக்கும்படியான அபிவிருத்தியைப் பற்றி மட்டும் அல்ல, பட்டிணங்களில் இருக்கும்படியான ரோடுகளோ, மின்சார விளக்குகளோ இவற்றைப் பற்றி மட்டும் அல்ல. வெகு தூரத்தில் இருக்கும்படியான கிராமங்கள், கிராமங்களில் இருக்கும்படியான விவசாய நிலங்கள், விவசாய நிலங்களில் இருக்கும்படியான செழிப்பான தானிய மணிகள் இவற்றைப் பொறுத்துத் தான் இருக்கிறது என்பதை அறிவுறுத்த விரும்புகிறேன். இந்த மானியக் கோரிக்கையைப் பிரேரித்திருக்கிற போது விவசாய உற்பத்தி, கழனிகளில் இருக்கும்படியான பயிரை வளர்ப்பதற்கான திட்டங்கள் இருக்கின்றனவா என்று பார்க்கவேண்டும்.

சென்னை ராஜ்யம் இவ்விஷயத்தில் தலைசிறந்து இருக்கிறது என்பதை நான் குறிப்பிட விரும்புகிறேன். அதுவும் அண்மையில் நடந்த உலக விவசாயக் கண்காட்சியில் சென்னை ராஜ்யம்தான் முதல் பரிசு பெற்றது. சென்னை ராஜ்ய விவசாயிகள்தான் தலை சிறந்த நிலையில் உற்பத்தியில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்பதை அந்நிய தேசத்தில் இருந்து வந்த நிபுணர்களே ஒப்புக்கொண்டு அத்தாட்சி கொடுத்திருக்கிறார்கள். அதுமட்டுமல்ல. நம் நாட்டின் சராசரி உற்பத்தியை அகில இந்திய உற்பத்தியோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நம் நாட்டு விவசாயிகள்தான் தலைசிறந்த உழைப்பாளி களாக இருக்கிறார்கள் என்பது தெரியவரும். அதுவும் இந்தியாவின் சராசரி ஏக்கருக்கு 1,300 பவுண்டாக இருக்கும் போது சென்னை ராஜ்யத்தின் சராசரி 2,300 பவுண்டு என்றால் உண்மையில் நாம் பெருமைப்படவேண்டும். அதைவிட்டு எதிர் கட்சிக்காரர்கள் புகார் சொல்கிறார்கள் என்றால் அவர்கள் சொல் வது என்ன? உப்பு கிடைக்கவில்லை, அமோனியம் சல்பேட் கிடைக்கவில்லை, அமைச்சர் அவர்களே கலப்படமாகச் சொல்லி விட்டார் என்று குற்றம் சாட்டினார்கள். அமோனியம் சல்பேட் இல்லாமலேயே விவசாய உற்பத்தியை மிக அதிக அளவில் பெருக்க முடியும் என்று உங்களுக்கு நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

**Sri A. GOVINDASAMI :** சர்க்கார் கட்சிக் கொரடா பேசு கின்றபோது கலப்படமாக மந்திரி பேசிவிட்டார் என்று சொன்ன தாகச் சொன்னார். நான் அப்படிச் சொல்லவில்லை. இதில் கூட கலப்படம் இருக்கிறது என்பதை மந்திரி சொல்லிவிட்டார் என்பதாகத்தான் சொன்னேன்.

**Sri P. G. KARUTHIRUMAN :** நல்லவேளையாகத் திருத்திக் கொண்டதைப்பற்றி எனக்கு சந்தோஷம். வட இந்தியாவில் 69 ஆலைகள் இருக்கின்றனவே என்று சொன்னார். சுயராஜ்யம் வந்த பிறகு ஏற்படுத்தப்பட்ட ஆலைகள் அல்ல அவை. பிரிட்டிஷ் ஆட்சி காலத்திலேயே ஏற்பட்டவை. அங்கே எத்தனை பாக்டரிகள் இருந்தாலும் இங்கே இருக்கும்படியான கரும்பு உற்பத்தி உலகி லேயே சிறந்த நிலையில் இருக்கிறது. அதுவும் கோவை விவசாய ஆராய்ச்சிப் பண்ணையில் தயாரிக்கும்படியான வித்துக்கள் மிக உயர்ந்த முறையில் அதிக உற்பத்தியைப் பெருக்குவதற்கு வகை செய்கிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். அதைத் தெரிந்துகொள்ளாது உப்பு இல்லை, அமோனியம் சல்பேட் இல்லை என்று சொல்லிக்கொண்டிருப்பதால் பயன் இல்லை. சுமார் 1940-ம் வருடத்திலே 21 ஆண்டுகளுக்கு முன்னாலே கோவை ஆராய்ச்சி நிலையத்து விதையாகிய தனி ரகம் சிறுமணியம் கோ 19 நம். விதையை உபயோகித்து பத்தொன்பதாயிரம் பவுண்டு 50 ஏக்கரிலே விளைவித்துக் காட்டியிருக்கிறேன். 1945-ல் கோ 25-நம். விதையை உபயோகித்து உப்பு, அமோனியம் எதுவும் இல்லாமல் 5 ஆயிரம் பவுண்டுக்கு மேல் நூறு ஏக்கரில் ஒவ்வொரு போகத் திலும் விளைவித்துக் காட்டியிருக்கிறேன். இதையெல்லாம்

மக்களிடத்தில் சொல்லாமல் உப்பு இல்லை, அமோனியம் இல்லை என்கிற குறைபாட்டை வலியுறுத்திச் சொல்லிக்கொண்டிருப்பது அவர்களைத் தவறான பாதையில் இழுத்துச் செல்லும் என்று சொல்ல விரும்புகிறேன். எப்படி மருத்துவ உலகத்திலே "பென்சிலின்" ஊசிகளை நம்பி இருக்கிறார்களோ, அதைப் போன்றுதான் இதையும் நம்பி இருக்கிறார்கள். இந்த அமோனியம் சல்பேட் உப்பை அதிகமாக நம்பியிருப்போமானால் இதற்காக பணமும் செலவாகும், பூசார சத்தும் குறையும். இதற்குப் பதிலாக தழை உரத்தை அதிகமாகப் பயன்படுத்தினால் நல்ல பலனைக் காணலாம். இதைப் பயன்படுத்துவதற்கு மக்களிடையே சரியான முறையிலே பிரசாரம் செய்யவேண்டும். உயிருள்ள பிராணிகளின் மலஜலம் பாதுகாக்கப்பட்டு உரமாக உபயோகப்படுத்தினால் ஐந்து மனிதனுடைய எருவுக்கு சமமாகி, 3 ஏக்கருக்கு மூன்று போகங்களாக உயர்ந்து, உற்பத்தியைப் பெருக்கிக் கொடுப்பது மட்டுமல்லாமல் பூசார சக்தியை அதிகரிப்பதற்கும் உபயோகமாக இருக்கும் என்று சொல்ல விரும்புகிறேன். மலஜல எருவை பிரயோஜனப்படுத்துவதினால் 200 ஏக்கருக்குப் போடக்கூடிய உரம் உண்டாக்கலாம். அது 100 ரூபாய் அமோனியம் சல்பேட் போடக்கூடிய மதிப்பிற்குச் சமமாகும். அந்த அளவு உரசத்து கொடுப்பதோடுமட்டுமல்லாமல் சாதாரணமாக 5, 6, வருஷங்களுக்கு பூசார சத்தும் குறையாமல் இருக்கும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். போலி உப்புக்களை நம்பிக்கொண்டு உற்பத்தியாவதுகூட உற்பத்தியாகாமல் இருப்பதைவிட சாதாரண நிலத்தில்கூட இயற்கை எரு போட்டு 5 ஆயிரம் பவுண்டு உற்பத்தியை செய்திருக்கிறோம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

11 a.m.

அடுத்தபடியாக நான் சொல்வது என்னவென்றால், சரியான விவசாயிக்கு தன்னுடைய உழைப்புத்தான் முக்கியம். அதைத் தான் அவன் முக்கியமாகப் பயன்படுத்திக்கொள்வான். உண்மையில் ஒவ்வொரு விவசாயியும் அவன் உழைப்பை அதிகமாகப் பயன்படுத்துவானானால் குறைந்தது எவ்வளவு தூரம் உற்பத்தியை பெருக்க முடியுமோ அவ்வளவு தூரம் உற்பத்தியை உயர்த்திக் கொள்வதற்கு வாய்ப்பு ஏற்படும். கம்பராமாயணத்தில் ராம ராஜ்யம் என்பதை "வையகம் முழுவதும் ஒரு வறிநன் ஓம்பும் ஓர்சேய் என காத்து இனிது அரசு செய்கிறான்" என்று குறிப்பிட்டிருக்கிறார். ஒரு ஏககருக்குக் குறைவான ஒரு சிறு மனையைக்கூட கண்ணும் கருத்துமாக பாதுகாத்து வந்தால் உற்பத்தியை மிக அதிகமாகப் பெருக்கமுடியும் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இந்த நிலையில்தான் ராமராஜ்யம் அமைக்கப்பட்டிருக்கிறது என்று சொல்கிறார். ஒவ்வொரு விவசாயியும் தன்னுடைய நிலத்தில் கண்ணும் கருத்துமாக உழைத்தால் உற்பத்தியைப் பன்மடங்கு பெருக்குவதற்கு வழி

ஏற்படும். இம்மாதிரி உழைக்கின்றவர்கள் சின்ன விவசாயிகள் தான். அவர்களுக்கு வேறு எந்தவிதமான வருமானமும் கிடையாது. அவர்கள்தான் நிறைய உற்பத்தியைப் பெருக்குகிறார்கள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் சர்க்காருக்கு யோசனை ஒன்று மாத்திரம் சொல்ல விரும்புகிறேன். உண்மையாக உற்பத்தியைப் பெருக்குவதற்கு நியாய விலையைக் கொடுக்கவேண்டும். மேலும் விவசாயிகளுக்கு உற்பத்திச் செலவு அதிகமாகிவிட்டது. ஆகவே விவசாயிகளுக்கு கட்டுப்படியாகக்கூடிய அளவிற்கு நியாய விலைக் கொடுத்து உற்சாகப்படுத்தினால் நாட்டிலே விவசாய உற்பத்தி பெருமளவிற்கு அதிகமாக்கமுடியும். இப்பொழுது 58 லட்சம் டன் உற்பத்தி செய்திருக்கிறார்கள். இன்னும் உற்சாகப்படுத்தினால் அவர்கள் உற்பத்தியைப் பன்மடங்கு அதிகமாக்கமுடியும். இப்பொழுது உற்பத்தியைப் பெருக்குவதற்கு பல காரணங்கள் இருந்தாலும், திட்டங்கள் விஸ்தரிப்பதன் மூலம் உற்பத்தியைப் பெருக்கினாலும்கூட, இவ்வளவு செலவு செய்தும் நியாயவிலை இல்லை என்றால் ஒன்றும் இயலாது என்று சொல்ல விரும்புகிறேன். யுத்த காலத்திலே விலைவாசி உயர்ந்துவிட்டது என்று சொல்லலாம். யுத்த காலத்தில் நம் மாகாணத்தில் உற்பத்தியின் புள்ளிவிவரம் என்ன? இப்பொழுது இருக்கக்கூடிய புள்ளிவிவரம் என்ன? 100 என்று வைத்துக்கொண்டால் 400 அதிகமாக ஏறிவிட்டது. ஆனால் நாட்டிலே ஏழை விவசாயிகளின் உற்பத்தியின் புள்ளி விவரத்தை எடுத்துக்கொண்டால் 100 என்பதை ஆயிரம் ஆக்கியிருக்கிறார்கள். யுத்த காலத்திற்கு முன்பு விலைவாசிகள் 10 பங்கு அதிகமாக இருந்தாலும் யாரும் நியாயமான விலை என்று நம்ப முடியாது. சர்க்கார் நியாயவிலையை ஏற்படுத்தினால்தான் உற்பத்தியைப் பெருக்க முடியும். நியாயவிலையைக் கொடுத்தால் 50 லட்சம் டன் அல்ல 100 லட்சம் டன்கூட உற்பத்தி செய்கிறோம். சர்க்கார் இதையெல்லாம் கவனித்துத்தான் நியாயவிலைக்கு அக்கரை காட்டுகிறார்கள் என்பதை நான் வரவேற்கிறேன்.

நாம் உற்பத்தியைப் பெருக்குவதற்கு நிலத்தைப் பாதுகாத்தால் மட்டும் போதாது, கால்நடைகளையும் பாதுகாக்க அதிக அக்கறைக் காட்டவேண்டும். எல்லா சத்தும் சேர்ந்தது மாட்டுப் பால் உணவு. ஆனால் நம் நாட்டில் அதிகமான பால் கிடைக்காதது வருந்தத்தக்கது. பசுவின் எண்ணிக்கை நிறையத்தான் இருக்கிறது. ஆனால் அவைகள் அதிகப் பால் கொடுப்பதில்லை. உலகத்திலேயே அதிக அளவுப் பால் கொடுக்கக்கூடிய சிந்தி பசு போன்ற இனங்கள் நம் நாட்டில் இருக்கின்றன. இவைகள் முதல்தரமான ஜாதிப் பசுக்கள். இந்தப் பால் கொடுக்கும் இனத்தின் அபிவிருத்தியில் அதிக கவனம் செலுத்தவேண்டும். இந்தக் கால் நடைகளைப் பராமரிக்க, பராமரிப்பு நிலையங்களுக்கு நிறைய மான்யம் கொடுத்தால் அவைகளை உயர்ந்த நிலைக்குக் கொண்டு வருவதற்கு ஏதுவாக இருக்கும். அதிகமாக பால் தரக்கூடிய இனங்களை வெளிநாடுகளிலிருந்து தருவித்து இங்கு விருத்தி செய்யலாம். இந்தியாவிலே வேலை செய்யக்கூடிய மாடுகள்

அதிகம். பால் கொடுக்கக்கூடிய இனம் குறைவு, இருந்தாலும் பாலே அதிகரித்து வருவாயைப் பெருக்கிக்கொள்வதற்கு கேந்திர நிலையங்களை ஏற்படுத்தி மிகச்சிறந்த முறையிலே பாதுகாத்து நம் ராஜ்யத்தை இந்தியாவிலேயே தலைசிறந்த ராஜ்யமாக செய்ய வேண்டும். பால் பெருகவும், உணவு தான்யங்கள் பெருகவும், மக்கள் சுபிட்சம் பெருகவும் உதவும். இந்த மான்யத்தை மனமார வரவேற்று முடித்துக்கொள்ளுகிறேன்.

* **Sri T. IRUSAPPAN** : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, இன்றையதினம் விவசாய காட்டிலாக்கா, மீன் இலாக்கா மீது கொடுக்கப்பட்டுள்ள வெட்டுப் பிரேரேபணையை ஆதரித்து என்னுடைய கருத்துக்களைச் சொல்ல விரும்புகிறேன். நம்முடைய சர்க்கார் இந்தக் காடுகளை பாதுகாப்பதற்காக அதிக பணம் செலவு செய்து திட்டமிட்டு வேலை செய்து வருகிறது. அப்படியிருக்கும்போது இப்பொழுது எந்த நிலைமையில் இருக்கிற தென்றால் எல்லாம் அழிந்துப்போகக்கூடிய நிலை ஏற்பட்டிருக்கிறது. இதற்கெல்லாம் முக்கிய காரணம் என்னவென்றால் அங்கு இருப்பவர்களுக்கு போதிய ஊதியம் கொடுக்கப்படுவதில்லை. இப்படி அவர்களுக்கு போதிய ஊதியம் கொடுக்காத காரணத்தினால் கையாடல் செய்து ஜீவிக்கவேண்டிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு நிறைய மரங்களைப் பார்த்தால் அடுத்த ஆண்டு காணோம். இதனால் ஒதுக்கப்படுகின்ற பணம் வீணாக விரயம் ஆகிறது. இது வீணாகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். மேலும் காடுகளில் விறகுகள் எடுப்பதற்கு கான்ட்ராக்ட் விடுகிறார்கள். சர்வே செய்வதற்காக ஆயிரம் ஏக்கர் என்று விடுகிறார்கள். இதனால் காடுகளில் உள்ள மரங்கள் நிறைய வெட்டியெடுக்கப்பட்டு அழிக்கப்படுகிறது.

ஆகவே, கான்ட்ராக்டர்களுக்கு குத்தகைக்கு விடும்போது, எவ்வளவு ஏக்கர்கள் எடுத்துச் செல்லவேண்டுமென்றதொரு நிலையிருக்கவேண்டும். பச்சைக் கட்டைகளைகூட வெட்டிச் செல்வதால் காட்டுச் செல்வம் அழிந்துவிடுகிறது. மரம், செடியில்லாதயிடங்களை, பொட்டல் இடங்களை விவசாயம் செய்வதற்கு குத்தகைக்கு விடுகிறார்கள். அதில் ஏழை மக்கள் விவசாயம் செய்து மரம் செடிகளும் நட்டு வளர்க்கிறார்கள். இந்த மக்களுக்கு சர்க்கார் உரம், விவசாயக் கருவிகள் இவைகள் வாங்குவதற்கு பணம் கொடுத்து உதவி செய்தால் காட்டு வளத்தை பெருக்குவதோடுகூட விவசாய உற்பத்தியையும் பெருக்க உதவியாகயிருக்கும். ஆகவே, அவர்கள் பண உதவி அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சேலம் மாவட்டத்தில் ஏராளமான காடுகள் இருக்கின்றன. அங்கு, அரூர் தாலுகாவில் ஆதி-திராவிட மக்கள் விவசாயம் செய்து வந்தார்கள். பின்னர்தான் அந்த காட்டை சர்வே செய்தார்கள். அதற்கு பின்னர் அதை காட்டு இலாகாவோடு சேர்ப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அதனால் விவசாய ஏழை மக்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். அது

பற்றி எவ்வளவோ விண்ணப்பித்தும் இருக்கிறார்கள். ஆகவே, அரூர் தாலுகாவில் ஏற்கெனவே தரிசு நிலங்களில் உழைத்து வந்தவர்களை பாதுகாக்க, அந்நிலங்களை பாரஸ்ட் இலாகாவோடு இணைப்பதை நீக்கி அந்த ஏழை மக்களுக்கு உதவி செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். ஜமீந்தாரி முறையை, மிட்டாதார்களை நீக்கிவிட்டோம் என்று சொல்கிறார்கள். அதே நேரத்தில் தனிப்பட்டவர்களிடம் ஏராளமாக காடுகள் இருக்கின்றன. சின்ன கல்வராயன், பெரியகல்வராயன் மலைகளிலுள்ள காடுகளில் இவர்கள் இஷ்டம்போல் வெட்டுகிறார்கள். ஆகவே, அவர்களுடையதாயிருந்தால், நஷ்டஈடு கொடுத்துவிட்டு அவைகளை சர்க்காரே எடுத்துக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். பின்னர், ஆத்தூர் காடுகளில் கிடைக்கும் சந்தனக்கட்டைகளைக் கொண்டு அங்கு ஒரு எண்ணெய் தொழிற்சாலை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். சின்னகல்வராயன், பெரியகல்வராயன் மலையில் ஒரு ரோடு போட இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 9 மைல் சர்வே செய்யப்பட்டு 3 மைலுக்கு ரோடு வேலையாகி ஆயிரக்கணக்கில் ரூபாய் செலவு செய்து இப்பொழுது அதை அப்படியே விட்டு விட்டார்கள். அதை இந்த வருடமாவது எடுத்து நடத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தும்பல், பாப்பநாய்க்கன்பட்டி இவைகளை மலையோடு இணைத்து ஒரு ரோடு போடவேண்டும். மலையில் கடுக்காய் போன்ற பொருள்களை விளைவிக்கப்படுகின்றன. அடுத்தபடியாக நான் இங்கு குறிப்பிட விரும்புவது, கடுக்காய் போன்ற பொருள்களை உற்பத்தி செய்து அவைகளுக்கு நல்ல விலை கிடைப்பதற்குரிய முறையில் மலைவாசிகளுக்கு ஒரு கூட்டுறவு சொஸைட்டி ஏற்படுத்திக் கொடுக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். மலைவாசிகளுக்கு, கடுக்காய் போன்ற பொருள்கள் உற்பத்தி செய்யப்பட்டு அவைகளுக்கு நல்ல விலை கிடைப்பதற்கு வேண்டிய வசதிகளை சர்க்கார் செய்து கொடுக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். பின், காட்டு இலாகா ரோடுகள் மிகவும் மோசமாயிருக்கிறது. விவசாயிகள், தழைகளை கொண்டுவந்து விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்கு முடியாத நிலையில் ரோடுகள் மோசமாகயிருக்கின்றன. ரோடுகளை செப்பனிடவேண்டுமென்று மாவட்டக் கமிட்டி, வட்டார வளர்ச்சி கமிட்டி இவைகளில் வற்புறுத்தியும், காட்டு இலாகாவிற்கு போதிய பணம் இல்லை. ஆகவே அவைகளை சீர்படுத்த முடியாது என்றும் சொல்கிறார்கள். ஆத்தூரில் குடமலை பச்சை மலைக்கு ரோட்டு வசதியும், ஆத்தூரிலிருந்து கல்ராயன் மலைக்கும் நல்ல ரோடுகள் போட்டுக் கொடுக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொள்கிறேன். அதோடு பாரஸ்ட் ஏரியா ரோடுகளை செப்பனிட வேண்டிய பணம் ஒதுக்கப்பட்டு அவைகள் செப்பனிடப்பட வேண்டுமென்றும் கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, மலைவாசிகளுக்கு இன்று பள்ளிக்கூடங்கள் ஏராளமாக திறந்திருக்கிறார்கள். அப்படி பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டிருந்தும் அங்கு அவர்களுக்கு படிக்க இட வசதியில்லை. மரங்களின் அடிகளில்

வைத்துத்தான் படிப்பு சொல்லிக்கொடுக்கிறார்கள். பொதுமக்கள் 50% பணம் கொடுத்தால்தான் பள்ளிக்கூடங்கள் அமைக்கப்படும் என்ற நிலை இன்றிருக்கிறது. மலைவாசிகள் மிகவும் ஏழைகள், பிற்போக்கானவர்கள். அவர்கள் இந்த பாதித் தொகையைக் கொடுத்து பள்ளிக்கூடங்கள் அமைப்பதற்குள்ள நிலையில் அவர்கள் இல்லை. ஆகவே பொதுமக்கள் இந்த பாதித் தொகை கொடுக்க வேண்டுமென்பதை நிறுத்தி விட்டு சர்க்காரே பூராத் தொகையும் போட்டு பள்ளிக்கூடங்கள் கட்டி மலைவாசிகள் கல்வி பெற வசதி செய்துகொடுத்து அவர்களும் மனிதர்களாக வாழ்வதற்கு வேண்டிய உதவிகள் செய்து கொடுக்க நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்படவேண்டும். பெரிய ஜமீன்தார்களுக்குத்தான் இன்று உற்பத்தி செய்யப்படுகிற பொருள்களுக்கு நல்ல விலை கிடைக்கிறது. ஏழை விவசாயிகளுக்கு ஊக்கம் கொடுத்தால்தான் விவசாயத்தை நன்கு பெருக்கமுடியும். ஆகவே, ஏழை விவசாயிகளுக்கு உரம் கொடுப்பது, கூட்டுறவு சொஸைட்டியில் கடன் உதவி அளிப்பது போன்ற வசதிகள் செய்து கொடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு காட்டை பாதுகாக்கக்கூடிய காவலர்களுக்கு சம்பளத்தை உயர்த்திக்கொடுக்கவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டு என் உரையை முடித்துக்கொள்கிறேன்.

* **SRI S. RAMALINGA PADAYACHI** தலைவர் அவர்களே, இந்த மான்யக் கோரிக்கையை ஆதரித்து நான் சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். நம் நாடு விவசாய பெருமக்களைகொண்ட நாடு. விவசாயம் வெற்றி பெற்றால்தான் நம் நாடும் வெற்றி பெற்றதாக கருத முடியும். எந்த ஜனநாயக நாட்டிலும், அரசாங்கமும் ஜனநாயகமும் ஒன்றோடொன்று பிணைத்து கொண்டிருக்கிறது. அதேபோல் விவசாயமும், நீர்பாசனமும் ஒன்றோடொன்று பிணைத்திருப்பதாகும். இந்த இரண்டிற்கும் சேர்ந்து ஒரே மந்திரியாகயிருந்தால் நல்லது என்று நான் கருதுகிறேன். புட் ப்ரொடக்ஷன், பி. டப்ளியூ. டி. என்று இரண்டாக பிரிக்கப்பட்டிருக்கிறது. உணவு உற்பத்தித் திட்டத்தின் கீழ் ஏதாவது செய்வதற்காக அங்கு சென்றால் அவர்கள் சொல்கிறார்கள், பி. டப்ளியூ. டி.-யை கேளுங்கள் என்று. பி. டப்ளியூ. டி.-க்கு சென்று கேட்டால் எங்களுக்கு தெரியாது, புட் ப்ரொடக்ஷன் டிப்பார்ட்மெண்டை கேளுங்கள் என்று சொல்கிறார்கள். ஆக, ஒன்றுக்கு ஒன்று முரண்பட்டிருக்கிறது. ஆகவே, இவை இரண்டும் ஒரே மந்திரியிடம் இருக்கவேண்டுமென்பது என் கருத்து. பின்னர், நீர்நிலை நன்கு இருந்தால்தான் நாடு செழிக்க முடியும். நீர் உயர்ந்தால் நெல் உயரும், நெல் உயர்ந்தால் குடி உயரும், குடி உயர்ந்தால் கோன் உயரும் என்று ஒரு பழமொழி யுண்டு. வரப்பு உயர்ந்தால் நீர் உயரும் என்பார்கள், அது எப்படி முடியும்? Capacity தான் அதிகமாக இருக்கவேண்டும். ஒரு முறை தண்ணீர் பிடித்தால் ஒரு போகம் விளையவேண்டும். ஆக, கப்பாஸிட்டி அதிகம் இருக்கவேண்டும். ஆகவே, விவசாயமும் நீர்பாசனமும் ஒன்றாக இருந்தால் நன்றாகயிருக்கும். விவசாய

மக்களுக்கு அரசாங்கம் பல வகைகளிலும் உதவி புரிந்துகொண்டு வருகிறார்கள்.

உழுவார் உலகத்தார்க் காணியஃதாற்கு
தெழுவாரை எல்லாம் பொறுத்து.

என்று வள்ளுவர் பெருமான் விவசாய பெருமக்களுக்கு எடுத்து கூறியிருக்கிறார்கள். ஆகவே, விவசாய மக்களுக்கு வேண்டிய எல்லா உதவிகளும் அளித்தால்தான் நாடு முன்னேறமுடியும். நமது அரசாங்கம் விவசாயிகளுக்கு பல்வேறு விதங்களில் உதவி செய்துகொண்டு வருகிறார்கள். பின்னர், உடையார்பாளயம் தாலுகாவில் இந்த மூன்றாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் 50 குழாய்க் கிணறுகளுக்கு அனுமதி கொடுக்கப்பட்டிருக்கிறது. குழாய்க் கிணறுகள் இறங்குவதற்கு நம்மிடம் வசதியில்லை. ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு டிரில்லிங் மெஷின்தான் இருப்பதாக கேள்விப்படுகிறேன். அதைப் பார்த்து எதையும் ஏற்படுத்திவிட முடியாது. புட் ப்ரொடக்ஷன், அஸிஸ்டன்ட் இன்சினியர் அவர்களிடத்தில் போய் கேட்டபோது, ஐம்பது கிணறுகள் ஏற்படுத்தப்போவதாக சொல்லப்பட்டிருக்கிறதே அவைகளை எப்போது செய்யப்போகிறீர்கள் என்று கேட்டதற்கு, நாங்கள் என்ன செய்வது, டிரில் இறக்குவதற்கு உங்கள் நிலம் சரியாக இல்லை, மலைப்பாங்கான இடமாக இருக்கவேண்டும். ஆகவே ரோட்டரி இன்சின் வரவேண்டும். அது இருந்தால்தான் இவைகளை போட முடியும், இந்த இன்சின் இப்போது நெய்வேலியில் இருக்கிறது. அதைக்கொண்டு வருவதற்கு விவசாய மந்திரி அவர்களிடம் சொல்லுங்கள். அதைக் கொண்டு வந்தால் இவைகளை உடனே ஏற்படுத்திவிடலாம் என்று சொன்னார்கள். ஆகவே இவைகளை ஏற்படுத்துவதற்கு அமைச்சர் அவர்கள் உடனே நடவடிக்கை எடுப்பார்கள் என்று நம்புகிறேன்.

அடுத்தபடியாக, நீர்நிலைகளை மட்டும் வைத்துக்கொண்டு விவசாயம் வளர்ந்துவிட முடியாது. நமது நாட்டில் இருக்கின்ற விவசாயத்தில் மூன்றில் ஒரு பங்குதான் நஞ்செய் நிலங்களாக இருக்கின்றன. மீதி இரண்டு பங்கு புஞ்செய் நிலங்களாகத்தான் இருக்கின்றன. இவைகளை எல்லாம் வளப்படுத்தி அதன் மூலம் உற்பத்தியை பெருக்குவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதை எப்படி பெருக்குவது என்பதைப் பார்க்கும்போது, 'அகல உழுவதை ஆழ உழு' என்ற பழமொழிக்கு இணங்க நிலத்தை ஆழமாக உழ வேண்டும். எப்படி ஆழமாக உழுவது என்பதைப் பார்க்கும்போது, டிராக்டரைக்கொண்டுதான் உழவேண்டியிருக்கிறது. இதற்கான இன்சின் கலப்பை போதிய அளவு கிடைக்கவேண்டும். சாதாரண மாட்டுக் கலப்பைக்கொண்டு உழுவதால் 3 இஞ்சு அல்லது 4 இஞ்சு ஆழத்தில்தான் உழ முடியும். இன்சின் கலப்பை வைத்து உழுதால் முக்கால் அடி அல்லது ஒரு அடி ஆழம் வரை உழ முடியும். இதன் காரணமாக நல்ல முறையில் மண் புரள ஏதுவாக இருக்கும். அதன் காரணமாக மழை குறைவாக இருந்தாலும்

பயிருக்குக் காய்ச்சல் ஏற்படாது. பயிர்களும் நன்றாக இருக்கும். விளைச்சலும் இதன் காரணமாக அதிகமாக கிடைக்கும். இதை வைத்துப் பார்க்கும்போது நம்முடைய நாட்டுக்கு புஞ்செய் தான்யங்கள் அதிகமாக தேவைப் படுகிறது. இந்த நிலையை எடுத்துப் பார்த்தால் இஞ்சின் கலப்பை நமது நாட்டுக்கு அதிகமாக தேவை என்பதும் தெரியவருகிறது. ஆனால் இப்போது நமது தேவைக்கு தகுந்தபடி இன்சின் கலப்பை கிடைப்பதில்லை. ஆகவே ஒரு தாலூகாவுக்கு ஒரு இன்சின் கலப்பையாவது இருக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டும். அப்போது தான் அதன் மூலமாக உணவு உற்பத்தியைப் பெருக்கிக் கொள்ள முடியும். இன்றைய நிலைமையில் இன்சின் கலப்பையை உபயோகிக்க வேண்டுமென்றால் ஒரு ஏக்கருக்கு 12 ரூபாய் கொடுக்க வேண்டும் என்று ரேட் இருப்பதாக தெரிகிறது. இப்படி இருந்தால் பெரும் பணக்காரர்களுக்குத்தான் இதை உபயோகித்துக் கொள்ள முடியும். பணவசதி யற்றவர்களுக்கு இதை உபயோகிக்க முடியாது. ஆகவே இதை குறைவான கட்டணத்திற்கு, அதாவது ஒரு ஏக்கருக்கு 8 ரூபாய் என்றிருந்தாலாவது போதுமானதாக இருக்கும். இதனால் சர்க்காருக்கு சிறிது நஷ்டம் ஏற்படலாம். அது அவ்வளவு முக்கியமல்ல, உற்பத்தி பெருகவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தினுடைய முக்கிய குறிக்கோள். ஆகவே சிறிய நஷ்டத்தை எதிர்பார்க்காமல், குறைவான வசதியுள்ளவர்களுக்கு இந்த இன்சின் கலப்பை உதவி கிடைக்கக்கூடிய வகையில் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். வள்ளுவர் பெருமான் கூட "தொடிப்புழுதி கஃசா உணக்கிற் பிடித்தெருவும் வேண்டாது சாலப்படும்" என்று கூறியிருக்கிறார்கள். அந்த வாக்குக்கிணங்க ஆழ உழுவதின் மூலமாக விவசாயத்தை நல்ல முறையில் செய்து கணிசமான அளவு உற்பத்தியை பெருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு இன்சின் கலப்பையை அதிகமாக தருவதற்கும் ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்தபடியாக, எங்கள் தாலூகாவிலும் கலப்படங்கள் சேர்த்து விற்பனை செய்கின்ற காரியங்கள் நடந்திருக்கிறது. அதன் பேரில் கேஸ் போடப்படுகிறது. பின்னால் கோர்டில் சிலர் விடுதலையாகி விட்டார்கள். நியாய ஸ்தலத்தில் எப்படியெல்லாமோ மாறி விடுகிறது. இதனால் என்ன ஆகிறது என்றால் சாதாரண ஏழை மக்கள் கஷ்டப்பட வேண்டியநிலை வந்துசேருகிறது. யார் செய்திருந்தாலும் கடைசியில் ஏழையின்மீது குற்றம் வந்து சேருகிறது. இதை நாம் தடுக்கவேண்டும். கோர்ட்டில் பலவிதமான சாட்சிகள் சொல்லப்படுகின்றன. அதை நம்பித்தான் கோர்ட்டில் தீர்ப்பு அளிக்கப்படுகிறது. ஆகவே அரசாங்கம் சாட்சியை மட்டும் ருசுவாக எடுக்காமல், பொதுமக்களிடத்தில் என்ன கருத்து இருக்கிறது என்பதை கருத்தில் எடுத்து, அதன்மீது நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

11th March 1961] [Sri S. Ramalinga Padayachi]

அடுத்தபடியாக, ஃபாரஸ்டைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். இப்போது இருக்கிற ஃபாரஸ்ட் நமக்கு போதவில்லை என்று இருந்தும்கூட, இருக்கிற ஃபாரஸ்ட் மிகவும் குறைந்து கொண்டே இருக்கிறது. இதற்கு காரணம் வெள்ளாடு கள்தான் என்று சொல்ல வேண்டியிருக்கிறது. இதற்காக வெள்ளாடுகள் வேண்டாம் என்றும் சொல்லுவதற்கில்லை. ஆகவே இந்தக் காடுகளை எல்லாம் நல்ல முறையில் பாதுகாக்கவேண்டும் என்றால் அங்கங்கேயுள்ள கிராம அதிகாரிகள் அல்லது பஞ்சாயத்து அதிகாரிகள் இவர்கள் முக்கிய கவனம் செலுத்திவரவேண்டும். அப்போதுதான் நல்ல முறையில் காடுகளையும் மரங்களையும் பாது காக்க முடியும் என்பதை தெரிவித்துக்கொண்டு என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* SRI V. SUBBIAH : கனம் தற்காலிக தலைவர் அவர்களே, இன்று சபை முன் வந்திருக்கும் மான்யங்கள் ஒன்றிரண்டு அல்ல, நான்கு மான்யங்கள் வந்திருக்கின்றன. கொடுக்கப்பட்டிருக்கும் இந்த நான்கு மான்யங்களையும் நான்கு மணி நேரத்தில் பேசித் தீர்க்கவேண்டும். பிஸினஸ் அட்வைஸரி கமிட்டியிலோ அல்லது சட்டமன்றத்திலோ இவ்வாறு முடிவு செய்திருந்தாலும் இந்த மான்யத்தின் பேரில், அதிலும் முக்கியமாக இருக்கின்ற விவசாயத் துறையின்மீது ஒரு நாளாவது பேசவேண்டும். அப்படி யில்லாமல் நான்கு மான்யங்களையும் நான்கு மணி நேரத்திற்குள் விவாதிக்கவேண்டும் என்று முடிவு செய்திருப்பது மிகவும் வருத்த மாய் இருக்கிறது. அதிலும் இந்த நான்கு மணி நேரத்திற்குள் விவாதிக்கவேண்டும் என்று சொல்லப்பட்டிருக்கும் இந்த நான்கு மான்யங்களின்மீது 10 நிமிடத்திற்குள் பேச வேண்டும் என்பது மிகவும் வருத்தப்படக்கூடிய நிலை என்பதை தெரிவித்துக் கொள்கிறேன். குறிப்பாக விவசாயத் துறைக்காக 4 கோடி, 35 லட்சம் ரூபாய்க்குமேல் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இதில் மதிப் பிற்குரிய நண்பர்கள் பலர் திரும்ப திரும்ப ஒரு விஷயத்தைப் பற்றி சொன்னார்கள். இன்றைக்கு ரசாயன உரம் மிகவும் பற்றாக் குறையாக இருக்கிறது என்று திரும்ப திரும்ப எல்லோரும் சொன் னார்கள். அதே சமயத்தில் விவசாயிகளுக்கு தேவைப்படுகிற விவசாயக் கருவிகளின் விலை என்ன என்பதையும் நாம் பார்க்க வேண்டும். வண்டிப் பட்டை, மண் வெட்டி, கொழு-வுக்கு வேண்டிய இரும்பு இவைகள் எல்லாம் எவ்வளவோ விலை உயர்ந்து இருக்கிறது. இதைப்பற்றி இந்த மன்றத்தில்கூட பல முறை குறிப்பிட்டிருக்கிறேன்.

(Mr. Speaker in the Chair.)

முக்கியமாக விவசாயிகளுக்கு தேவையாயிருக்கிற உரத்தை குறிப் பிட்ட காலத்திற்குள் கொடுக்கவேண்டும். அதோடு பூச்சி மருந்து களும் காலாகாலத்தில் கொடுக்கவேண்டும். விவசாயக் கருவிகள், பம்பு செட்டுக்கு வேண்டிய சாதனங்கள் இவைகள் எல்லாம்கூட கிடைப்பதற்கு கஷ்டமாயிருக்கின்றன. பம்புசெட் ஏற்படுத்து

வதை எடுத்துக்கொண்டால், அதுகூட நல்ல முறையில் செயல் படுவதாகத் தெரியவில்லை. விவசாயத்திற்கு வேண்டிய வேண்டிய இரும்பு ஒரு பக்கத்தில் கிடைக்கவில்லை என்று இருந்தபோதிலும், பம்பு செட்டுகளுக்கு வேண்டிய எலக்ட்ரிக் மோட்டார்கள், அதற்கான சாதனங்கள் இவை கள் எல்லாம் எப்படி கிடைக்கின்றன என்பதைப் பார்க்கும் போது, விவசாயத் துறையில் முன்பு 36 ரூபாய் விலையாக இருந்த உரம், இப்போது அமோனியம் சல்பேட் வாங்க வேண்டு மென்றால் 85 ரூபாய் கொடுக்கவேண்டியிருக்கிறது. எட்டு அணா கொடுத்து வாங்கின கொழு இப்போது 2-½ ரூபாய்க்கு வாங்க வேண்டியிருக்கிறது. இது இந்த நிலையில் இருந்தபோதிலும்கூட பம்பு செட்டுக்கு வேண்டிய எலக்ட்ரிக் சாமான்கள் வாங்கக்கூடிய நிலைமையைப் பார்த்தால் மிகவும் பரிதாபகரமாய் இருக்கிறது. மார்க்கட் வால்யூவை விட எத்தனையோ மடங்கு விலை கொடுத்து வாங்கக்கூடிய அளவுக்கு நிலைமை இருந்து கொண்டிருக்கிறது. இவைகளை எல்லாம் சரியான முறையில் வாங்க முடியாத நிலை ஏற்படுவதின் காரணமாக சில நேரங்களில் பயிர்கள் எல்லாம் வாடக்கூடிய நிலை ஏற்படுகின்றது. இவைகளை எல்லாம் நீக்குவ தற்காக அரசாங்கம் பல திட்டங்களை போட்டிருந்தாலும்கூட, இதற்காக எவ்வளவோ பணம் ஒதுக்கியிருந்தாலும்கூட, அந்தப் பணங்கள் எல்லாம் சரியான நேரத்தில் விவசாயிகளிடம் போய் சேருவதில்லை என்கின்ற நிலைதான் இருந்து கொண்டிருக்கிறது.

இது மாத்திரமல்லாமல் லோன்கள் கொடுக்கிறோம் பல ரூபத்திலே. விவசாய லோன் ஒரு பக்கத்தில் இருக்கிறது. ரெவின்யூ லோன் ஒரு பக்கத்தில் இருக்கிறது. அதோடு சமுதாய நலத் திட்டத்தின்கீழ் எத்தனையோ துறைகளில் கொடுக்கிறார்கள். விவசாய உற்பத்தி பெருகவேண்டுமென்று இந்த மாதிரியான லோன்கள் கொடுக்கப்படுகின்றன. என்றாலும் பல வித லோன் களைக் கொடுப்பதில் கையாளப்படுகிற முறை, வாங்குவதில் இருக்கக்கூடிய சிரமங்கள், கடைசியாக லோன் கையில் சேரக் கூடிய நிலைமை இவைகளைப்பற்றியெல்லாம் பல முறை இங்கே எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. இதெல்லாம் சுலபமாக, நேரடியான எந்தவிதக் கஷ்டமும் இல்லாமல், அரசாங்கம் ரிஸர்வ் பாங்கியிடமிருந்து என்ன வட்டிக்கு வாங்குகிறதோ அந்த வட்டி யிலேயே கொடுக்கவேண்டும். எந்தக் கடன் கொடுத்தாலும் வட்டி சதவீதம் குறைந்த பட்சம் இருக்கவேண்டும். அந்த நிலையில் இருந்தால்தான் விவசாயம் நாட்டில் முன்னேற முடியும். மதிப்புக்குரிய கட்சிக் கொறடா அவர்கள் குறிப்பிடும்போது விவ சாயப் பொருள்களின் உற்பத்திச் செலவை அரசாங்கம் நிர்ணயம் செய்ய முடியாமல் இருக்கிறது, இதனால்தான் விலையானது இப்படி போய்க்கொண்டிருக்கிறது என்கிறார்கள். உண்மை இதுதான். விவசாயிகளின் உழைப்பில் குறைவு ஒன்றும் இல்லை. அது உள்ள அளவில் இருந்துகொண்டுதான் இருக்கிறது.

எங்கள் பகுதியிலே ஒரு ரிஸர்ச் பண்ணை இருக்கிறது. இது கோயம்புத்தூருக்கு அடுத்தபடி பெரிய பண்ணையாக இருக்கிறது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஏற்பட்ட பண்ணை. அந்தப் பண்ணையில் ஆராய்ச்சி செய்து நீண்ட உயர்ந்த ரக பருத்தி கே. 6 போன்ற ரகங்கள் உற்பத்தி செய்யப்பட்டுள்ளது. அந்த ஆராய்ச்சியின் பலன் பருத்தியிலும், நெல்லிலும்தான் இருக்கிறது. நவதானியங்கள், குறிப்பாக கம்பு, ராகி, தினை போன்ற ரகங்களில் அந்த ஆராய்ச்சி பலன் அளிக்கவில்லை. தானியங்கள் விஷயத்தில் நல்ல நிபுணர் அங்கு இல்லை என்றுதான் சொல்ல வேண்டும். அதனால்தான் அந்த நவதானியங்கள் விஷயத்தில் நல்ல பலன் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. புதிய முறையில் அரசாங்கம் ஊக்கம் அளித்து நல்ல தேர்ச்சியுள்ள நிபுணர்கள் இருந்தால் நவதானியங்களிலும் நல்ல முன்னேற்றம் கண்டிருக்க முடியும். இப்போது புதிதாக மண் வள ஆராய்ச்சி செய்வதற்காக 4 லட்சம் ரூபாய் செலவழிக்கப் போவதாகவும், கடலூரிலும் கோவில்பட்டியிலும் செய்யப்போவதாகவும் குறிப்பிட்டிருக்கிறார்கள். அதை நான் பாராட்டுகிறேன். மண்வளப் பாதுகாப்பு செய்வதில் கரிசல் மண் பிரதேசத்தில் செய்வது கஷ்டமாக இருக்கலாம். அதோடு சமீபத்தில் பெய்த மழை காரணமாக மேடுகள் பள்ளமாக ஆகியும் பள்ளங்கள் மேடாக ஆகியும் இருப்பதால் அதைச் சமப்படுத்த மண்வளப் பாதுகாப்பு செயல்படவேண்டும். அதற்கு நல்ல முறையில் பணம் ஒதுக்கி செயல்படவேண்டும்.

விதைப் பண்ணைகளைப் பற்றிக் குறிப்பாகச் சொல்லவேண்டுமானால் எல்லா இடங்களிலும் பெரும்பாலும் சரியான முறையில் நடக்கவில்லை என்று தெரிகிறது. அது மட்டுமல்லாமல் கட்டுக் குத்தகை எடுக்கிறார்களே அரசாங்கம், அதைப் பற்றிக் கேள்விப்படுவது வருந்தத் தக்கதாக இருக்கிறது. ஒரு நிலத்தின் மதிப்பு 100 ரூபாயாக இருந்தால் 5 வருஷ லீஸ் 500 ரூபாயாக இருக்கிறது. இந்த மாதிரி பல இடங்களில் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். அதைவிட அரசாங்கம் அந்த நிலத்தை கிரயத்திற்கு வாங்கிக் கொள்வது மிகவும் நலமாக இருக்க முடியும். இதையெல்லாம் அமைச்சர் அவர்கள் கவனத்தில் வைத்துக்கொண்டு எதிர்காலத்தில் விதைப் பண்ணைகளை ஏற்படுத்தினால் இந்த முறையில் செயல்படவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

விவசாய என்ஜினீயரிங் முறைகள் இருக்கிறதே அதில் குறிப்பாக பி.எஸ்ஸி. டிகிரி உள்ளவர்களைத் தவிர வேறு யாரையும் அமர்த்துவது பலன் அளிப்பதாக இல்லை. பி.எஸ்ஸி. பட்டதாரிகளைத் தவிர யாருக்கும் இடம் கொடுக்கக் கூடாது.

இன்னும் விவசாயத் துறையில், எங்கள் பகுதி மிகவும் வறண்ட பிரதேசம். அதோடு கரிசல் பிரதேசமாக இருப்பதால், கோவில்பட்டி விவசாய ரிஸர்ச் பண்ணையை நல்ல முறையில் கொண்டு வருவதோடல்லாமல் விவசாய இன்ஜினீரிங் இன்ஸ்ட்டிட்யூட் போன்ற ஸ்தாபனங்களை ஏற்படுத்தவேண்டுமென்று கேட்டுக் கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

* SRI S. RAMASAMI THEVAR: சட்டமன்றத் தலைவர் அவர்களே, இந்த வெட்டுப் பிரேரணையின்மீது சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். நமது தேசத்திலே, அதிலும் நம் தமிழ் நாடு விவசாயத்திலே பெரிதும் முன்னேறி இருப்பதைப் பற்றிப் பேசப்பட்டு வருகிறது. அந்த மாதிரி முன்னேறி இருப்பதைக் குறித்து நாம் எல்லோரும் மகிழ்ச்சி அடைய வேண்டியிருக்கிறது. உண்மையிலேயே விவசாயத்திலே நம் நாடு பெரிதும் முன்னேறி உற்பத்தி பெருகியிருக்கிறது என்றால் இன்னும் நாம் விவசாயத்திற்கு அதிகத் தொகை ஒதுக்கலாம். ஏனைய மாநிலங்களைவிட நம் மாநிலம் அதிக அளவிலே உற்பத்தியைக் கண்டிருக்கிறது. அதற்கு இன்னும் நாம் அதிகம் தொகை ஒதுக்கவேண்டியிருக்கிறது. இன்னும் அதிக ஊக்கம் அளிக்க விவசாயத்திற்கென்று அதிகத் தொகையை மத்திய சர்க்காரிடமிருந்து பெறுவதிலும் கஷ்டம் இருக்காது—கேட்டு வாங்கலாம் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இப்படி இருந்தும்கூட பல குறைகள் இருக்கின்றன. அந்தக் குறைகள் எல்லாம் நீங்கினால் இன்னும் அதிக உற்பத்தியை நாம் காணலாம். இன்னும் நம் விவசாய மக்கள் நல்ல முறையில் கஷ்டமின்றி வாழ்வார்கள் என்று எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். முக்கியமாக மக்களுக்கு கடன் உதவி கொடுக்கும்போது உதவிகள் எல்லாம் காலாகாலத்தில் போய்ச் சேரவேண்டும். இப்போது அந்த முறையில் காலாகாலத்தில் போய்ச்சேருவதில்லை என்று பேசப்பட்டு வருகிறது. காலாகாலத்தில் போய்ச் சேரா விட்டால் கடன்கள் கொடுப்பதனால் பலன் இல்லை.

> " காலத்தி னாற்செய்த உதவி சிறிதெனினும்
> ஞாலத்தின் மாணப் பெரிது."

என்று வள்ளுவனார் கூறியிருக்கிறார்கள். விவசாயத்திற்காகக் கொடுக்கப்படும் கடன் விவசாய காலத்தில் கிடைக்காமல் சாகுபடி முடிந்த பிறகு கையில் கிடைத்தால், அவர்கள் அந்தப் பணத்தை விவசாயத்திற்குச் செலவழிக்க முடியாமல் வீணாகச் செலவழிக்கக் கூடிய நிலை இருக்கிறது. அதை விவசாயத்திற்குப் பயன்படுத்துவதில்லை. ரசாயன உரத்தைப் பற்றி, சிலர் ரசாயன உரம் தேவையில்லை, ரசாயன உரம் இல்லாமலேயே உற்பத்தியை அதிகரிக்கலாம் என்று சொன்னார்கள். உண்மையிலேயே மக்கள் இன்று ரசாயன உரத்தின் பயனைக் கண்டிருக்கிறார்கள். அதன் பயனைக் கண்டுதான் வேண்டும் என்று கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். ஆக, காலாகாலத்தில் இதெல்லாம் வந்து சேருவதற்கு என்னென்ன வழிகளை வகுக்கவேண்டுமோ, திட்டங்களைத் தீட்ட வேண்டுமோ, அவைகளைச் செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

இதோடுகூட, விவசாயத்திற்கு நீர்ப்பாசனம் அதிகம் தேவை. முக்கியமாக எங்கள் பகுதி பிற்பட்ட பகுதி. அரந்தாங்கி பகுதி மிகவும் வறண்ட பிரதேசம். அங்கே ஸி.எம்.பி. பாய்ச்சல்

ரொம்பக் குறைச்சல். பெரும்பாலும் வானத்தை அண்ணாந்து பார்த்துக்கொண்டிருக்கும் நிலையில் இருக்கிறோம். அந்தப் பகுதியில் பல காட்டாறுகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. மழை காலத்தில் தண்ணீரும் செல்லுகிறது. அதைத் தடுத்து அணைகளைக் கட்ட பல திட்டங்கள் திட்டப்பட்டிருக்கின்றன. அவைகளெல்லாம் தாமதமாக நடந்துகொண்டிருக்கின்றன. அவைகளில் எந்தெந்த திட்டங்களை சீக்கிரத்தில் செய்து கொடுக்க முடியுமோ அவ்வளவுக்கவ்வளவு விவசாயம் பெருகும், உற்பத்தியும் பெருகும் என்பதில் சந்தேகமில்லை. அறந்தாங்கி பகுதி மக்கள் ஒரு காலத்தில் இலங்கையை நம்பிக் கொண்டிருந்தார்கள். இலங்கைக்குச் சென்று உழைத்துக்கொண்டிருந்தார்கள். இப்போது அவர்களுக்கு நீர்ப்பாசன வசதிகளைச் செய்துகொடுத்தால் உற்பத்தியை பெருக்கி நல்வாழ்வு வாழ வசதியாக இருக்கும். மற்ற பகுதிகளை விட அறந்தாங்கி பகுதி மக்கள், நல்ல முறையில் உற்பத்தியைப் பெருக்கக்கூடிய பெரும் உழைப்பாளிகள். வசதிகளைச் செய்து கொடுத்தால் அதிக உற்பத்தியைப் பெற முடியும். உரம் கொடுப்பதிலும், அதற்காக மனுக்கள் போட்டு பல மாதங்கள் போய் பல அதிகாரிகள் முன்னிலையிலே சென்று காத்துக் கிடக்கவேண்டிய நிலை இருக்கிறது. காலாகாலத்தில் கிடைக்கத்தக்க வழியில்லை. ஒருவர் மனுச் செய்து கொடுத்தவுடனே கேட்ட அளவு தொகை கிடைக்கவேண்டும். இதில் பல தடைகள் இருப்பதால் விவசாயம் கெட்டுப்போகிறது. விவசாயத்தைச் சரிவர கவனிக்க முடியவில்லை. அந்த நிலை இல்லாமல் விவசாயி சுதந்திர புருஷனாக இருக்கவேண்டும். அவர்களுக்கு இப்படி பல அலைச்சல் இருக்கக் கூடாது; அல்லல்கள் இருக்கக்கூடாது. கடனுக்கு 100 தடவை, உரத்திற்கு 10 தடவை என்று போக வேண்டியிருக்கிறது. கிடைக்கக்கூடிய கடனை அவர்கள் செலவிலேயே மணியார்டர் கமிஷனைக் கழித்து அவர்களுக்கு அனுப்பிவிடலாம். அதேபோல் உரத்தையும் நாம் அவர்கள் செலவிலேயே கொண்டுபோய் அவர்கள் இருப்பிடத்திலேயே சேர்த்து விடலாம். அவர்கள் அடிக்கடி நேரிலே போய் வருவதால் இதைவிட செலவு அதிகமாகிறது. இன்னும் பல மோசடிகள் நடைபெறுகின்றன. இதைப்பற்றி பலதரம் இங்கு எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இதையும் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

அடுத்து காட்டு வளம். நம்முடைய நாட்டிலே காட்டு வளம் இப்போது அதிகமில்லை. அதை அதிகமாக பெருக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறது. இப்போது மரங்கள் எல்லாம் எங்கும் அழிக்கப்பட்டு வருகின்றன. முக்கியமாக ஜமீன் இனும் கிராமங்களிலே முன்பெல்லாம் நிறைய மரங்கள் இருக்கும். ஜமீன் இனும்கள் இருந்த காலத்திலே அதைச் சேர்ந்த குளக்கரைகளிலும், ஏரிக் கரைகளிலும் நிறைய மரங்கள் வளர்க்கப்பட்டன, அவைகள் பாதுகாக்கப்பட்டும் வந்தன. ஆனால் இன்று பார்த்தாலோ, குளக்கரைகளிலும், ஏரிக்கரைகளிலும் வளர்க்கப்பட்ட

மரங்கள் எல்லாம் வெட்டப்பட்டிருக்கின்றன. காடுகள் போல் காட்சியளித்த குளங்களும், ஏரிகளும் இப்போது வெறும் திறந்த வெளியாகக் காட்சியளிக்கின்றன. இதைத் தடை செய்யும்படியாக நான் பல தடவை கேட்டுக்கொண்டிருக்கிறேன். இன்னும் அதிக மரங்களை வளர்ப்பதற்காக, நாம் இன்னும் அதிக மான முயற்சிகளை எடுத்துக்கொள்ள வேண்டும். மரங்களை வளர்ப்பதற்காக அதிகமாக செலவு செய்தால் மட்டும் போதாது. அதேபோல் மரங்களை அதிகமாக நட்டுவிட்டால் மட்டும் போதாது. அவைகளை நல்ல முறையில் வளர்த்து பாதுகாப்பதில் கவனம் செலுத்தப்பட வேண்டும். அவைகளை நல்லமுறையில் பாதுகாக்க வேண்டும். அதை விட்டு, பணம் அதிகமாக செலவழிக்கப் பட்டிருக்கிறது என்று கணக்கை காட்டுவது மட்டும் போதாது என்பதைச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இன்னும், என்னுடைய தொகுதியாகிய அறந்தாங்கிப் பகுதியில் பெரும் பகுதி கடற்கரைப் பிரதேசமாக இருக்கிறது. இப் பிரதேசத்தில் நிறைய தென்னை மரங்களை வளர்க்கலாம். அதற்கு சர்க்கார் நிறைய ஊக்கம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இப்போது தென்னைக்கு நல்ல விலை கிடைக்கிறது. தவிர, அது ஏற்றுமதிப் பொருளாகவும் இருக்கிறது. ஆகவே அந்தப் பகுதிகளிலே இன்னும் அதிகமாக தென்னைகளை வளர்ப்பதற்கு சர்க்கார் மக்களுக்கு ஊக்கம் காட்ட வேண்டும்.

தவிர, அந்தப் பகுதியில் நிறைய மீன் கிடைக்கிறது. ஆனால் மீனவர்களுக்கு பல கஷ்டங்கள் இருக்கின்றன. முன்பு பல அங்கத்தினர்கள் குறிப்பிட்ட மாதிரி, இந்தப் பகுதிகளிலே போக்குவரத்து வசதி மிகவும் குறைவு. மெயின் ரோடுகளுக்கும், மீனவர்கள் தங்கக்கூடிய இடங்களுக்கும் நல்ல முறையிலே ரோடுகள் இல்லை. ஒரே மணல் பரப்பாக இருக்கிறது. அதுவும் அவர்கள் வசிக்கக்கூடிய கிராமங்களுக்கும், அந்த மெயின் ரோடுகளுக்கும் அதிக தூரம்கூட இல்லை. இரண்டு மைல், 1 மைல், ½ மைல் என்ற அளவில்தான் இருக்கிறது. அதற்கும் சர்க்கார் வசதி செய்து கொடுக்க வேண்டும். அதோடு மீன் பிடிப்புத் தொழிலுக்கு நல்ல வசதிகள் செய்து கொடுத்து, அங்கு கிடைக்கக்கூடிய மீன்களை அங்கிருந்து (உள்ளூர்) திருச்சிராப்பள்ளி, புதுக்கோட்டை போன்ற இடங்களுக்கும் கொண்டு போவதற்கு வசதி செய்து கொடுக்க வேண்டும். அப்படி வசதி செய்து கொடுத்தால், பல மீனவர்கள் இத்தொழிலில் ஈடுபட்டு, நல்ல முறையிலே வியாபாரம் செய்து, தொழிலைப் பெருக்க முடியுமென்று சொல்லிக் கொள்வதோடு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**SRI S. M. ANNAMALAI :** சட்டமன்றத் தலைவர் அவர்களே, சட்டமன்றத்தின் முன்னால் வந்திருக்கக்கூடிய வெட்டுப் பிரேரணைகளை ஆதரித்து ஒருசில வார்த்தைகள் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். முக்கியமாக, இந்த விவசாயத் துறையில் நாம் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திற்குள் எந்த

11th March 1961] [Sri S. M. Annamalai]

அளவுக்கு நாம் உணவு உற்பத்தியைப் பெருக்க வேண்டுமென்று ஆசைகொண்டோமோ, அதை அடைய முடியவில்லை. 12.79 லட்சம் டன் என்பது சர்க்காருடைய முயற்சி. ஆனால் அடையப் போகின்றது 7 அல்லது 8 லட்சம் டன்கள் தான். அதுகூட இந்த ஆண்டில் இருக்காது என்பது என்னுடைய அபிப்பிராயம். அதிகமாக மழை பெய்ததின் காரணமாக, 20, 22 நாட்களுக்கு தொடர்ந்தாற்போல் சூரியகிரணங்கள் இல்லாததின் காரணமாக பயிர்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறது. என்னுடைய சொந்த அனுபவத்திலிருந்து, எனக்கு இருக்கக்கூடிய இரண்டு ஏக்கரிலே, நான் வருஷா வருஷம் 40 மூட்டைகள் நெல் எடுப்பேன். ஆனால் இம்முறை 26 மூட்டை நெல்லும்; 10 மூட்டை பதரும் தான் கிடைத்திருக்கிறது. சூரிய கிரணம் கிடைக்காததினால்தான், அதிகமான பதர் ஏற்பட்டிருக்கிறது. இப்படி இருக்கும்போது, இந்த 7 அல்லது 8 லட்சம் டன்னாவது கிடைக்குமா என்பதுதான் எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. அதற்கு முக்கிய காரணம் இயற்கையான சூரிய கிரணங்களாக இருந்தாலும், நம்முடைய வரவு செலவுத் திட்டக் கணக்கு அறிக்கையைப் பார்க்கின்ற போது, அதற்கு முக்கிய காரணம் உரம் சரியாக கிடைக்கவில்லை என்பதாகும். இதற்கு முக்கிய காரணம் நம்முடைய மத்திய சர்க்கார். அதற்கு என்ன சொல்கிறார்கள் என்று பார்த்தால், ரசாயன உரத்தைப் பெறுவதற்கு அதிகமான அளவில் அந்நியச் செலாவணி செய்ய வேண்டியிருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

இதற்கு மற்றொரு காரணம், டிராக்டர்களும், புல்டோசர்களும் நமக்கு அதிக அளவில் கிடைக்காததாகும். அதற்காக 53-ம் வருஷத்திலே 10 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டு, டிராக்டர்களும், புல்டோசர்களும் வாங்கப்பட இருக்கிறது என்று சொல்லப்பட்டது. இப்போது 60-க்கு பிறகு 28 புல்டோசர்களே இருக்கிறது. அவைகள்கூட பழையவைகளாகத்தான் வாங்கப்பட்டது. இப்போது அவைகள் உபயோகப்படுத்தப்பட்டு, சில ரிப்பேர் செய்ய முடியாத நிலையில் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இதற்கும் முக்கியமான பொறுப்பு மத்திய சர்க்கார்தான். அவர்கள்தான் இவைகளைப் பொறுப்பேற்றுக்கொண்டு செய்யவேண்டும். எதற்கெடுத்தாலும் அந்நியச் செலாவணி என்று சொல்லப்படுகிறது.

சென்ற ஆண்டு 2.07 லட்சம் டன் ரசாயன உரம் விவசாயிகளுக்கு தரவேண்டுமென்று திட்டமிடப்பட்டது. ஆனால் விநியோகிக்கப்பட்டது 1.03 லட்சம் டன், அதற்கும் காரணம் வேறொன்றுமில்லை. மத்திய சர்க்கார் வைத்திருக்கக்கூடிய கொள்கைதான். இப்போதாவது மத்திய சர்க்கார் சமர்ப்பித்திருக்கக்கூடிய பட்ஜட்டிலே ரசாயன உரத்தை மேலும் அதிகமாக இறக்குமதி செய்வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா என்று பார்த்தேன். அதற்கெல்லாம் நம்முடைய அரசாங்கம்தான் தக்க முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டும். இந்த ஆண்டாவது எப்படியாவது ரசாயன உரத்தை அதிகமாக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அதேபோல அப்படி வரக்கூடிய ரசாயன உரத்தை நல்ல

முறையிலே விநியோகிப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். இப்போது ஒரு படி ரசாயன உரம் ஒன்றரை ரூபாய் என்று கள்ள மார்க்கட்டில் விற்கப்படுகிறது. அப்படியுள்ள நிலைமையை தடுக்க வேண்டும். என்னுடைய ஜில்லாவிலிருந்து பக்கத்து ஜில்லாவாகிய சித்தூருக்கு அடிக்கடி இந்த ரசாயன உரம் கள்ளக் கடத்தல் செய்யப்படுகின்றது. அப்படி 10 மூட்டை லாரியில் ஏற்றிக்கொண்டு போவதைக் குறித்து போலீசாரிடம் ரிப்போர்ட் செய்தாலும், அவர்களை அரஸ்ட் செய்து தக்க நடவடிக்கை எடுப்பதில்லை. அதற்குப் பதில் ஒரு வியாபாரியிடமுள்ள 10 மூட்டையைக் காண்பித்து ஏதாவது சாக்குபோக்கு சொல்லி விடுகிறார்கள். அதே போல் கன்யாகுமரியில் 4 மூட்டைகள் கொண்டு போகும்போது ஒரு விண்ணப்பத்தை அமைச்சர் அவர்களிடம் கொடுத்தேன். போலீஸ் ஸ்டேஷனில் பிடித்து வைத்தார்கள். பின்னர் ஏதோ சாக்கைக் காண்பித்து விட்டு விட்டார்கள். ஆகவே இப்போதும் கள்ள மார்க்கட் இருந்து கொண்டுதான் இருக்கிறது. அதையும் தடுக்க வேண்டும்.

அடுத்தபடி, டிராக்டர்கள் வாங்குவதற்கும், புல்டோசர்கள் வாங்குவதற்கும் 58-லே 10 லட்சம் ஒதுக்கப்பட்டதென்றும், இதை மத்திய சர்க்காரும் ஒத்துக்கொண்டதாகவும் சொல்லப்பட்டது. ஆனால் இந்த 10 லட்சத்தை நாம் செலவிடவில்லை என்று சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட காரணங்களினால்தான் நாம் உற்பத்தியை இன்னும் அதிகமாகப் பெருக்க முடியவில்லை என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். அதற்குக் காரணம் 1959-60-ல் வர்ஜின் லாண்ட் அதாவது பயிரிடப்படாத நிலங்களில் பயிரிடுவதற்காக திட்டமிட்ட நிலத்தின் பரப்பளவு 13,000 ஏக்கர். ஆனால் பயிர் செய்த நிலமோ 2,668 ஏக்கர்தான். அதைப்போலவே நாம் டார்ஜட் போட்டு பயிரிட வேண்டுமென்று நினைத்தது 19,000 ஏக்கர். ஆனால் பயிரிடப்பட்ட நிலங்களோ 4,322 ஏக்கர்கள். அதைப்போல் எந்த விஷயங்களிலும் நாம் டார்ஜட் போடக்கூடிய அளவுக்கு டார்ஜட் அசீவ்மெண்ட் அடைய முடியவில்லை.

அதைப்போலவே சாயில் கன்சர்வேஷனைப் பொறுத்தவரையில் 1959-60-ல் 31,566 ஏக்கர்கள் என்று நாம் திட்டமிட்டு இருந்தோம். ஆனால் உண்மையில் எடுத்துக்கொண்டது 12,072 ஏக்கர்களே. இதற்குக் காரணம் நமக்குத் தேவையான டிராக்டர்கள் கிடைக்காததுதான். இதற்கு முக்கியப் பொறுப்பு மத்திய சர்க்கார்தான். ஆக இப்படி எதற்கெடுத்தாலும் மத்திய சர்க்கார் குறுக்கிடும், அந்நியச் செலாவணியும் குறுக்கே வந்து நிற்கிறது. அதனால் நாம் போடுகின்ற டார்ஜட்டை நாம் அடைய முடிகிறதில்லை. இந்தக் காரணங்களினால்தான் நமக்கு இந்த அவநம்பிக்கை ஏற்படுகிறது என்று இவைகள் மூலமாக உண்மையிலேயே புலனாகிறது.

அடுத்தபடியாக 'நியூ வெல் ஸப்ஸிடி ஸ்கீம்' 'நான் பிளாக் ஏரியாவுக்கு' மட்டும் தான் இப்பொழுது கொடுக்கப்படுகிறது. பிளாக் ஏரியாவுக்கு கிடையாது. சமுதாய நல அபிவிருத்தித் திட்டத்திற்காக நாங்கள் பணம் ஒதுக்குகிறோம், அதற்கு வேறு பணம் இருக்கிறது, அதன் மூலமாக கொடுத்துவிடலாம் என்று

சர்க்கார் அடிக்கடி சொல்லிக்கொண்டு வருகிறார்கள். இரண்டாவது ஸ்டேஜில் இருக்கும் பிளாக்குகளுக்கு சமுதாய நல அபிவிருத்தித் திட்டத்தின் கீழ் ஒரு லட்ச ரூபாய் ஆண்டு ஒன்றுக்கு ஒதுக்கு கிறோம். ரூ. 60,000 அட்மினிஸ்டிரேஷனுக்குப் போகிறது. மீதி இருக்கக்கூடிய ரூ. 40 ஆயிரத்தில் சமுதாய நலத் திட்டப் பகுதி களில் இப்படிப்பட்ட ஸ்கீமுக்கு வேண்டிய பணத்தை கொடுக்க முடியுமா என்றால், முடியாது. இரண்டாவது ஸ்டேஜில் இருக்கக் கூடிய பிளாக்குகளுக்கும் இப்படிப்பட்ட திட்டங்களை புகுத்த வேண்டும்.

'ரிவர் பம்பிங் ஸ்கீமுக்கு' மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டிருக்கக்கூடிய பணம் போதாது. மூன்றாவது திட்டத் தில் ரூ. 5 லட்சம் ஒதுக்கியிருக்கிறோம். இந்த ஆண்டு செலவழிக் கப்போவது ரூ. 14,000. இது போதாது. மிகமிகக் குறைவு. ரூ. 5 லட்சம் என்பதை மேலும் ரூ. 10 லட்சம் என்றாவது உயர்த்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

விவசாயிகள் கடன் பட்டிருப்பதைப் பற்றி சர்வே செய்யப்பட வேண்டும். 1951-ம் ஆண்டில் சர்வே செய்தோம். ஒரு குடும்பம் ரூ. 745 கடன் பட்டிருப்பதாக அப்பொழுது தெரியவந்தது. 4, 5 முறை சர்வே செய்யப்பட்டிருக்கிறது. முதலில் 1898-ல் சர்வே செய்யப்பட்டது என்று நினைக்கிறேன். அப்பொழுது ரூ. 45 கோடி விவசாயிகள் கடன் பட்டிருந்தார்கள் என்று சொல்லப்படுகிறது. 1930-ம் ஆண்டில் சர்வே செய்யப்பட்டதில், அது ஏறத்தாழ 150 கோடி ரூபாய் என்றும், 1935-ல் ரூ. 200 கோடி என்றும், 1945-ல் என்று நினைக்கிறேன் ரூ. 250 கோடி என்றும் சொல்லப்படுகிறது. 1951-ல் ஒவ்வொரு விவசாயக் குடும்பத்திற்கும் ஏறத்தாழ ரூ. 745 கடன் இருந்தது என்று அப்பொழுது சர்வே செய்யப்பட்டதில் தெரியவந்திருக்கிறது. அப்படிப் பார்க்கிறபொழுது விவசாயி களுடைய கடன் மேலும் மேலும் அதிகரித்துக் கொண்டிருக் கிறதா என்று கேள்வி கேட்டால், கைத்தொழில் அமைச்சர் அவர் கள் சொல்லுகிறார்கள், கூட்டுறவு சங்கங்களின் மூலம் இவ்வளவு கடன் கொடுத்திருக்கிறோம், அவ்வளவு கடன் கொடுத்திருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். கடன் பட்டிருப்பது பற்றி சர்வே செய்ய வேண்டுமென்று சொன்னால், கடன் அளிப்பது பற்றி பதில் சொல்லு கிறார்கள். நான் சொல்லுவது சர்வே செய்யவேண்டுமென்பது. ஐந்து ஆண்டுகளுக்கு முன்னால் அவர்களுக்கு இருந்த கடன் எவ்வளவு, இப்பொழுது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் மூலமாக அவர்கள் பெற்ற பலனினால் கடன் குறைந்து வருகிறதா, அல்லது மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டு வருகிறதா என் பதைப் பார்ப்பதற்குத்தான் நான் சர்வே செய்யவேண்டுமென்று வற்புறுத்துகிறேன். அப்படி சர்வே செய்தால்தான் விவசாயிகளின் நிலைமை என்ன என்பது தெரியவரும். விவசாயிகள் முன்பு இருந்த நிலைமையிலேதான் இருக்கிறார்களா, அல்லது சற்று முற்போக்குக்கு வந்திருக்கிறார்களா அல்லது பிற்போக்கில் இருக்கிறார்களா என்பதை நாம் அறிந்துகொள்ளவேண்டும்.

விலைவாசியைப் பற்றி 'பிரைஸ் பாலிஸி கமிட்டி' சொல்லியிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்திற்குள்ளாக எல்லா 'ரிசோர்ஸஸ்' களையும் 'மொபிலைஸ்' செய்வதற்கு வேண்டிய முயற்சியை தொடங்கவேண்டும் என்று கூறியிருக்கிறது.

'It was agreed that all measures necessary for keeping the price situation under control should be taken and the effort to mobilise resources should be started with the commencement of the Third Plan.'

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் இப்பொழுது ஆரம்பிக்கப் பட்டிருக்கிறது. சர்க்கார் இதுவரையில் என்ன செய்திருக்கிறார்கள், என்ன செய்துகொண்டிருக்கிறார்கள், என்ன செய்ய இருக்கிறார்கள்? விலைவாசி இப்படியே மேலும் மேலும் உயர்ந்து கொண்டே போவதற்கு விட்டுவிடலாம் என்று சர்க்கார் நினைத்துக் கொண்டிருக்கிறார்களா என்பது விளங்கவேண்டும். நியாய விலைக் கடைகளை அதிகமாக ஆக்கவேண்டும். நியாய விலைக் கடைகள் இருந்தால்தான் விலைவாசி அதிகமாகிக் கொண்டு போவதை ஓரளவுக்கு கட்டுப்படுத்த முடியும். சட்டமன்றத்தில் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், மார்ச்சு மாதம் முடியும் வரையில்தான் நியாய விலைக் கடைகள் இருக்கும் என்று. அதுவரைக்கும்தான் காலத்தை நீடித்திருப்பதாகச் சொன்னார்கள். அது போதாது. இப்பொழுது இருக்கக்கூடிய விலைவாசிகள் ஏறுகிற பயத்தைப் பார்க்கிறபொழுது மக்களிடத்திலே மேலும் மேலும் பயம் உண்டாகியிருக்கிறது. ஆகையால் நியாய விலைக் கடைகளை மேலும் அதிகரிக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, காட்டு இலாகாவைப் பொறுத்தவரையிலே ஒரு சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். எனக்கு சட்ட மன்றத்தில்கூட 'ஜவ்வாது மலை' என்ற ஒரு பெயர் உண்டு. ஜவ்வாது மலையைப்பற்றி அடிக்கடி இந்த மன்றத்தில் எடுத்துச் சொல்லியிருக்கிறேன். ஜவ்வாது மலையில் உள்ள உத்தியோகஸ்தர்களுக்கு முன்பு ஒரு அலவன்ஸ் கொடுக்கப்பட்டு வந்தது. இப்பொழுது அதை நிறுத்திவிட்டார்கள். அமைச்சர் அவர்களும் ஜவ்வாது மலைக்கு வந்திருக்கிறார்கள். அமைச்சர் அவர்கள் அங்கு வந்திருந்தபொழுது, எப்பொழுதோ ஒரு தடவை அமைச்சர் அவர்கள் வருகிறார்களே என்று நினைத்து, அங்குள்ளவர்கள் அமைச்சர் அவர்களுக்கு வேஷம் போட்டு ஆடிக் காண்பித்தார்கள். அதைப் பார்த்துவிட்டோ என்னவோ 'ஏது, இவர்கள் இவ்வளவு முற்போக்கு அடைந்துவிட்டார்களா என்று நினைத்து, அப்படியானால் அவர்களுக்கு அலவன்ஸ் கூடாது' என்று கருதி மலையை விட்டு கீழே வந்தவுடனேயே அலவன்ஸ் கிடையாது என்ற உத்தரவு மேலே சென்றுவிட்டது. அங்குள்ள காட்டு இலாகா அதிகாரிகளுக்கு ஹில் அலவன்ஸ் கிடையாது என்று சர்க்கார் உத்தரவு போட்டிருக்கிறார்கள் . . .

**The Hon. Sri M. BHAKTAVATSALAM :** நான் அங்கே போய் பார்த்ததற்கும், இந்த உத்தரவு போடப்பட்டதற்கும் ஒன்றும் சம்பந்தம் கிடையாது.

11th March 1961]

SRI S. M. ANNAMALAI : அமைச்சர் அவர்கள் ஜவ்வாது மலைக்கு சென்று வந்த பிறகுதான் இந்த உத்தரவு அங்கே போயிருக்கிறது. அதற்கு முன்னால் அந்த உத்தியோகஸ்தர்கள் இந்த அலவன்ஸ் பெற்றுக்கொண்டிருந்தார்கள். காட்டு இலாகா உத்தியோகஸ்தர்களும் பயந்து வேலை செய்கிறார்கள். அவர்களுக்கு இந்த அலவன்ஸ் தரப்படவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

ஜவ்வாது மலையில் சந்தனக்கட்டை மூலமும், மூங்கில் ஏலம் விடுவதன் மூலமும் சர்க்காருக்கு ரூ. 28,000 வருமானம் வருகிறது. அப்படி வரும்பொழுது அங்கு ஏன் ஒரு ஆயில் பாக்டரி ஏற்படுத்தக்கூடாது? மைசூர் சர்க்கார் இம்மாதிரி ஒரு ஆயில் பாக்டரி ஏற்படுத்தியிருக்கிறார்கள், அவர்களுக்கு நல்ல லாபம் இருக்கிறது. மைசூர் சர்க்கார் செய்திருக்கிறபொழுது, ஏன் நம் சர்க்கார் செய்யக்கூடாது? அமைச்சர் அவர்கள் சந்தனக் கட்டையாக விற்றால் அதிக லாபம் வருகிறது என்று சொல்லலாம். அதிக லாபம் வருவது ஒரு புறம் இருக்கட்டும். ஒரு ஆயில் பாக்டரி ஆரம்பித்தால் ஜவ்வாது மலையில் உள்ள மக்கள் அத்தனை பேர்களுக்கும் பலவித நன்மை ஏற்படும் அதனால். ஆகவே, அந்த இடத்தில் ஒரு ஆயில் பாக்டரி ஆரம்பிக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, மூங்கில் ஏலம் விடுவது பற்றி . . .

(மணி அடிக்கப்பட்டது)

* SRI N. S. RAMALINGAM : கனம் சபாநாயகர் அவர்களே, சட்டமன்றத்தின் முன் வைக்கப்பட்டிருக்கும் மான்யக் கோரிக்கைகளை ஆதரித்து சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். விவசாயத் துறையிலே நமது மாநிலம் மற்ற மாநிலங்களை விட முன்னணியில் இருப்பதைப்பற்றி எனக்கு முன்பு பேசிய பல அங்கத்தினர்கள் கூறினார்கள். முதல் ஐந்தாண்டுத் திட்டம் ஆரம்பிப்பதற்கு முன்பு இருந்ததைவிட இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் எப்படி நாம் 70 சதவிகிதம் விவசாய உற்பத்தியை அதிகரித்திருக்கிறோம் என்பதையும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் 15½ லட்சம் டன் அதிகமாக உற்பத்தி செய்ய திட்டம் போட்டிருக்கிறோம் என்பதையும் எடுத்துக் கூறியது பற்றி பல அங்கத்தினர்கள் அமைச்சர் அவர்களை பாராட்டினார்கள். நானும் அதற்காக அவரைப் பாராட்டுகிறேன். சென்ற வருஷம் டெல்லியில் நடந்த கண்காட்சியில் எல்லோரும் வந்து பார்த்து நம்மைப் பாராட்டினார்கள். சென்ற வருஷம் டில்லியில் நடந்தது மட்டுமல்ல, இந்த வருஷம் கல்கத்தாவில் ஒரு கண்காட்சி நடந்தது. அப்பொழுதும்கூட எல்லோரும் நம்மை பாராட்டினார்கள். அதுபோல அடுத்த வருஷம் சென்னையிலே இந்தக் கண்காட்சி நடக்கப் போகிறது. நான் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்ளுகிறேன், மைசூரில் இருப்பதுபோல சென்னையி லும் ஒரு சாசுவதமான 'எக்ஸிபிஷன் கிரவுண்டு' இருக்க

வேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அப்பொழுதுதான் நம்முடைய மாநிலத்திற்கு வெளி நாடுகளிலிருந்தும், வெளி மாநிலங்களிலிருந்தும் வருபவர்களும், நம் ராஜ்யத்தில் உள்ளவர்களும் நம்முடைய மாநிலத்தில் என்னென்ன முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்பதைத் தெரிந்துகொள்ளுவதற்கு சௌகரியம் அதிகமாக இருக்கும். அதற்காக சென்னையிலே ஒரு 'பர்மெனன்ட் எக்ஸிபிஷன் கிரவுண்டு' வைப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக, விவசாய இலாகாவில் பல விளம்பரங்கள் செய்கிறார்கள், அநேக விழாக்கள் கொண்டாடுகிறார்கள். பசுந்தாள் விழா, கம்போஸ்டு விழா, பொறுக்கு விதை விழா, இப்படி பல விழாக்கள் கொண்டாடுகிறார்கள். பல விளம்பரங்களும் காட்டப்படுகின்றன. இன்னும் பல எக்ஸிபிஷன்ஸ் இவைகளெல்லாம் நடத்தவேண்டும். இப்பொழுது நாம் பஞ்சாயத்து சட்டத்தை நிறைவேற்றிய பிறகு, பஞ்சாயத்துக்களும் இம்மாதிரி விழாக்கள் கொண்டாட வேண்டும். கண்காட்சிகள் நடத்த வேண்டும். எல்லாம் ஒருங்கே இணைந்ததாக நடத்தினால்தான் நன்றாக இருக்கும். அதற்கு ஒரு தனி ஆபீசர் இருக்க வேண்டும். இப்பொழுது 'அக்ரிகல்சரல் இன்பர்மேஷன் ஆபீசர்' இருக்கிறார். அவரை 'டெப்யூடி டைரக்டர் கிரேடுக்கு' உயர்த்தி, அவருக்குக் கீழே ஒரு 'காம்பைன் ஆபீசர்', ஒரு 'பப்ளிகேஷன் ஆபீசர்', ஒரு 'எக்ஸிபிஷன் ஆபீசர்' ஆகிய 3 ஆபீசர்களைப் போட்டு பஞ்சாயத்துக்களுக்கும், மற்ற உத்தியோகஸ்தர்களுக்கும் வழிகாட்டியாக இருக்கும்படிச் செய்யவேண்டும். இந்த முறையில் செய்து கொடுப்பதற்கு அரசாங்கம் முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

சமீபத்தில் உத்திர பிரதேசத்தில் கிராம பல்கலைக் கழகம் நடத்தப்பட்டு வருவதாக நேற்றுகூட சட்டமன்றத்தில் கேள்வி நேரத்தில் சொல்லப்பட்டது. அம்மாதிரி ஒரு கிராம பல்கலைக் கழகத்தை இங்கும் ஏற்படுத்தப் போவதாக நமது மந்திரி அவர்கள் அறிவித்தார்கள். அம்மாதிரி ஒரு கிராம பல்கலைக்கழகத்தை தஞ்சை ஜில்லாவிலே ஏற்படுத்த வேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். தஞ்சை ஜில்லாவில் கபிஸ்தலத்தில் உள்ள ஒரு பிரமுகர் 1,000 ஏகர் நிலம் அதற்காக வழங்குவதற்கு முன்வந்திருக்கிறார். அரசாங்கம் அதை பயன்படுத்திக்கொண்டு ஒரு கிராம பல்கலைக் கழகத்தை தஞ்சை ஜில்லாவிலே ஏற்படுத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கவேண்டும். அது வருவதற்கு கொஞ்சம் காலதாமதம் ஆனாலும்கூட, தஞ்சை ஜில்லாவில் ஆடுதுறை போன்ற இடத்தில் ஒரு விவசாயக் கல்லூரி வைப்பதற்கு அதிகக் கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

12-0 noon

1956-ம் வருஷம் இராஜ்யப் பிரிவினைக்கு பிறகு முந்திரிச் செடிகளிலிருந்து கிடைக்கக்கூடிய வருமானம் மிகவும் குறைச்சலாக

11th March 1961] [Sri N. S. Ramalingam]

இருக்கிறது. முந்திரிச் செடிகள் வல்லம், நாகை கடலோரப் பகுதிகளிலும் அதிகம் விஸ்தரிக்க வேண்டும். முந்திரி எண்ணெய் எடுக்கும் ஒரு தொழிற்சாலையை இங்கே ஏற்படுத்தினால் அன்னிய நாட்டுச் செலாவணி பெறுவதற்கு உதவியாக இருக்கும். இந்தத் துறையில் கவனம் செலுத்த வேண்டுமென்று அமைச்சர் அவர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

விவசாயிகள் எல்லோரும் பூச்சி மருந்துகளை அடிப்பதிலே கவனம் செலுத்தி வருகிறார்கள். பூச்சி மருந்துகள் அடிக்கும் ஸ்பிரேயர் கிடைப்பது கஷ்டமாக இருக்கிறது. திருவாரூரிலே ஒரு தொழிற்சாலை வைத்திருக்கிறார்கள். அங்கே நிபுணர்களைக் கொண்டு நல்ல ஸ்பிரேயர்கள் செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். உணவு விவசாய சங்கத்தினர் இந்திய சர்க்கார் மூலமாக அணுகினால் நல்ல நிபுணரை அனுப்புவதற்கு தயாராயிருப்பார்கள் என்று தெரிய வருகிறது. ஆகவே இந்திய சர்க்கார் மூலமாக அணுகி, நல்ல நிபுணர்களைக் கொண்டு ஸ்பிரேயர்கள் செய்வதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இப்பொழுது சூப்பர்பாஸ்பேட் குறைச்சலாகக் கிடைக்கிறது. இன்னும் பல தொழிற்சாலைகளுக்கு திட்டமிட்டிருப்பதாக நமது நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். தஞ்சை ஜில்லாவிலே 60,000 டன் உற்பத்தி செய்யக்கூடிய ஒரு தொழிற்சாலையை ஏற்படுத்த உத்தேசித்திருப்பதாகச் சொன்னார்கள். இந்தத் தொழிற்சாலையை நாகப்பட்டினத்தில் வைப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

தேவையான ரசாயன உரங்கள் தேவையான காலத்தில் தேவையான அளவுக்கு தேவையான இடத்தில் விவசாயிகளுக்குக் கிடைக்க வேண்டும். இப்பொழுது புள்ளி விவரங்களைச் சேகரித்து, கிராமவாரியாக எவ்வளவு ஏக்கர் இருக்கிறது என்று கணக்கிட்டு உரங்கள் ஒதுக்கிறார்கள். நல்ல பிரசாரம் இல்லாத காரணத்தினால் சிலாக உரங்களை விவசாயிகள் வாங்குவதற்கு விரும்பவில்லை. உதாரணமாக தஞ்சை ஜில்லாவிலே 10 லட்சம் ரூபாய் பெருமானமுள்ள மானோபாஸ்பேட் உரம் மொத்த வியாபாரிகளிடம் இருக்கிறது. அந்த உரத்தை வேறு ஜில்லாவுக்கு மாற்றவேண்டுமென்று அங்கேயுள்ள வியாபாரிகள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். மக்களுக்குத் தேவையான அமோனியம் சல்பேட், யூரியா, சூப்பர் பாஸ்பேட் போன்ற உரங்கள் தேவையான காலங்களில் கிடைக்கச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இப்பொழுது இருக்கிற நிலையிலே இந்த உரங்களை வைப்பதற்கு கிடங்குகளோ அல்லது வேறு வசதியோ இல்லாததினால், இந்த உரங்களை தாலுகாவாரியாக ஒதுக்கி மொத்த வியாபாரிகள் மூலமாக, கலெக்டர் அனுமதியின் பேரில், எங்கெங்கே தேவையாக இருக்கிறதோ அங்கெல்லாம் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்யவேண்டும். ஒரு கிராமத்திற்கு இவ்வளவு என்று மொத்தமாகக் கணக்கிட்டு ஒதுக்குவது சரியான

முறை அல்ல. சென்ற வருஷம் தஞ்சை ஜில்லாவிலே ஏற்பட்ட அனுபவத்திலிருந்து இதை நான் சொல்லுகிறேன். ஆகவே தாலூகாவாரியாக, கலெக்டர் அனுமதியின் பேரில், மொத்த வியாபாரிகள் மூலமாக இந்த உரங்கள் கிடைப்பதற்கு வழி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

ரசாயன உரங்களைக் கொண்டுவந்து இப்பொழுது சென்னை துறைமுகத்திலும், கடலூர் துறைமுகத்திலும் இறக்குகிறார்கள். தஞ்சை ஜில்லாவிலுள்ள துறைமுகத்தில் இறக்கிக் கொண்டு போவதற்கு வழி செய்யவேண்டும். நாகப்பட்டிணம் துறைமுகத்தை அபிவிருத்தி செய்து, அதன் மூலமாக இறங்குவதற்கு ஏற்பாடு செய்யலாம். கோடிக்கரை துறைமுகத்தையும் அபிவிருத்தி செய்ய வேண்டும். சென்ற வாரம் இந்தச் சபையிலே மராமத்து இலாகா அமைச்சர் பதில் சொல்லும்பொழுது, கோடிக்கரைத் துறை முகத்தை அபிவிருத்தி செய்வதற்குப் போதிய காரணங்கள் இல்லை என்று கூறினார்கள். சென்ற வாரத்திலே ஒரு செய்தியைப் பார்த்தோம். மண் அரிப்பின் காரணமாக தனுஷ்கோடி துறைமுகத்தை மூடவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிடுமோவென்ற அச்சம் இருக்கிறது. இந்தக் காரணத்தினாலே கோடிக்கரைத் துறைமுகத்தை அபிவிருத்தி செய்வதால் போக்குவரத்திற்கு சௌகரியமாக இருக்கும். ரசாயன உரங்களைக் கொண்டுவந்து இறக்குவதற்கும் உபயோகப்படும். துரதிருஷ்டவசமாக சென்னை ராஜ்யத்திற்கும் வெளி நாடுகளுக்கும் உள்ள தொடர்பு குறைந்து கொண்டே வருகிறது. இதற்குமுன் சென்னையிலிருந்து பர்மாவுக்கு கப்பல்கள் போய்க் கொண்டிருந்தன. இப்பொழுது நிறுத்தப்பட்டிருக்கிறது. வர்த்தகத் துறையிலே சென்னை ராஜ்யம் பின்தங்கிப் போய்க் கொண்டிருக்கிறது. ஆகவே கோடிக்கரை துறைமுகத்தை அபி விருத்தி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

காட்டு இலாகாவைப் பொறுத்தவரையில் நமக்குள்ள விஸ்தீரணத்தில் 33 சதவிகிதம் காடுகள் இருக்கவேண்டுமென்று திட்டமிடப்பட்டிருக்கிறது. இப்பொழுது 17 சதவிகிதம்தான் இருப்பதாகக் கேள்விப்படுகிறேன். கோடிக்காடு போன்ற இடங்களில் காட்டு வளத்தை அபிவிருத்தி செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டு என்னுடைய பேச்சை முடித்துக் கொள்கிறேன்.

**MR. SPEAKER :** எதிர்க்கட்சித் தலைவர்கள் சார்பாக கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் பேசப் போகிறார். அவருக்கு 15 நிமிஷங்களை ஒதுக்கி வைத்திருக்கிறேன். பாக்கியுள்ள 10 நிமிஷத்தில் இன்னும் இரண்டு அங்கத்தினர்கள் பேசலாம். கனம் அங்கத்தினர் ஸ்ரீ மருதாசலம் 5 நிமிஷங்களுக்கும், ஸ்ரீ கே. ஆர். நல்லசிவம் ஐந்து நிமிஷங்களுக்கும் பேசலாம்.

**SRI N. MARUDACHALAM :** சட்ட மன்றத் தலைவர் அவர்களே, காட்டு இலாகா வெட்டுப் பிரேரணையின் பேரில் என்னுடைய கருத்தைத் தெரிவித்துக் கொள்ள விரும்பு

கிறேன். என்னுடைய பகுதியிலே உள்ள விவரங்களை எடுத்துக்கூற விரும்புகிறேன். அங்கே கோவை விவசாயப் பண்ணை ஒன்று இருக்கிறது. 4, 5 வருஷங்களுக்கு முன்னர் இந்த விவசாயப் பண்ணை ஒரே இலாகாவில் இருந்தது. அப்படியிருந்தபொழுது அங்கே அதிகப்படியான உற்பத்தி ஏற்பட்டது, வேலைகளும் துரிதமாக நடந்து வந்தன. இப்பொழுது அந்த விவசாயப் பண்ணையை இரண்டு பாரம்களாகப் பிரித்திருக்கிறார்கள். இப்படிச் செய்ததிலே ஆட்கள்தான் அதிகமாக இருக்கிறார்களே ஒழிய, உற்பத்தி குறைந்துவிட்டது. வேலையும் சரிவர நடைபெறுவதில்லை. இதனால் விவசாயிகளுக்கு விதைகள் குறைவாகக் கிடைக்கிறது. இந்த இரண்டு பாரம்களையும், முன்போல, ஒன்றாக இணைத்து வேலை செய்தால், துரிதமாக வேலை நடக்கும், உற்பத்தியும் அதிகமாகும், சர்க்காருக்கும் லாபம் உண்டு.

அந்த விவசாயப் பண்ணையிலே இன்றைக்கு அநேகம் பேர் சாதாரண கூலி வேலை செய்கிறார்கள். சென்ற 4, 5 வருஷங்களாக தினசரிக் கூலிகளாகவே வேலை செய்து வருகிறார்கள். சர்க்கார் என்ன கூலி நிர்ணயம் செய்திருக்கிறார்களோ அந்தக் கூலி அவர்களுக்குக் கொடுக்கப்படுவதில்லை. சர்க்கார் நிர்ணயித்த கூலியைக் கொடுக்கவேண்டுமென்று கலெக்டர் மூலமாகவும், தூதுகோஷ்டிகள் மூலமாகவும் போய்க் கேட்டும் கொடுக்காமல், இப்பொழுது மேலும் கேட்டுக்கொண்டு வருகிறார்கள். சர்க்கார் செய்த கூலி நிர்ணயப்படி அந்த விவசாயப் பண்ணையில் வேலை செய்யக்கூடிய பெண்களுக்கு கூலி கொடுக்க வேண்டும். அவர்களுக்கு எந்த விதமான சலுகையும் இல்லை. சம்பளச் சலுகையோ, காஷுவல் லீவ் வசதியோ, ஸிக் லீவ் வசதியோ, அவர்களுக்கு கிடையாது. அவர்களை பெர்மனென்ட் ஆக்கி, சர்க்கார் நிர்ணயித்த சம்பளப்படி அவர்களுக்கு கொடுத்து, அவர்களுக்கு டைம் கார்டும் கொடுக்க வேண்டும். அப்படிக் கொடுத்தால் அவர்கள் நல்ல முறையில் வேலை செய்வார்கள். ஆகவே உடனடியாக அவர்களுக்கு சர்க்கார் நிர்ணயம் செய்த கூலியைக் கொடுக்க உத்தரவிடவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

காட்டு இலாகாவைப் பற்றி ஒருசில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். என்னுடைய பகுதியிலே சிறுவாணியிலிருந்து வெள்ளங்கிரி மலை அடிவாரம் வரையில் காடுகள் இருக்கின்றன. வாச்சர்கள், கார்டனர்கள் 24 பேர்கள் இருக்கிறார்கள். ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலங்களைப் பாதுகாக்க வேண்டியிருக்கிறது. அப்படிப் பாதுகாக்க வேண்டிய வாச்சர்களும், கார்டனர்களும் திரும்பி வருவதே அபாயகரமான நிலையிலிருக்கிறது. அவர்களுக்கு எந்தவிதமான பாதுகாப்பும் கிடையாது. அவர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதோடு அல்லாமல் வீட்டு வசதியும் அளிக்க வேண்டும்.

(மணி அடிக்கப்பட்டது.)

இந்த வெள்ளையங்கிரி மலையில் அவர்கள் ஆபத்தான காட்டில் வாசம் செய்கிறார்கள். அங்குள்ள ரேஞ்சர் ஆபீசுக்கு விளக்கே கிடையாது; மின்சார விளக்கு கிடையாது, பெட்ரோமாக்ஸ் விளக்கில் தான் வேலை செய்கிறார்கள். அதற்கும் வேண்டிய உதவிகள் செய்ய

வேண்டும். இந்த வாச்சர், கார்ட் முதலியவர்களுக்கும் வேண்டிய உதவிகள் செய்ய சர்க்கார் முன்வரவேண்டும் என்று கேட்டுக் கொண்டு என் உரையை முடிக்கிறேன்.

**SRI K. R. NALLASIVAM :** மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இன்றைக்கு இங்கே பேசிய அங்கத்தினர்கள் சல்பேட் ஆப் அம்மோனியா பற்றிக் குறிப்பிட்டார்கள், அதிலுள்ள பற்றுக்குறைபற்றி சர்க்காரே ஒத்துக் கொள்ளுகிறது, தேவை அதிகமாக இருக்கிறது என்று. மூன்றாவது திட்ட காலத்திலாவது அம்மோனியம் தேவையை பூர்த்தி செய்யப்படாதென தெரிகிறது. இதில், சர்க்கார் விளம்பரம் அதிகமாக இருப்பதே, அந்த உரத்தின் மூலம் எல்லாம் சாதித்து விடலாம் என்று பிரசாரம் செய்வதன் மூலமாகத்தான். மக்கள் ஏகப்பட்ட அளவில் சல்பேட் வேண்டும் என்று சொல்லுகிறார்கள்; அவர்களிடையே அந்த எண்ணம் வந்துவிட்டது. ஆகவே, எந்த அளவுக்கு வேண்டுமோ அந்த அளவோடு நிறுத்தி அம்மோனிய உரத்தை உபயோகிப்பதை குறைக்க பிரசாரம் வேண்டும். இரண்டாவதாக, நிலத்திற்குத் தண்ணீர் விடுவது பற்றியது. சர்க்கார் தெளிவான முடிவுக்கு வரவேண்டும். சோதனைகள் செய்ய வேண்டும். ஒவ்வொரு ஜில்லாவிலும் பாசனச் சோதனை வேண்டும், எவ்வளவு தண்ணீர் நெற்பயிருக்கு வேண்டும் என்று ஆராய்ந்தறிய வேண்டும். அப்படிச் செய்து தண்ணீரைக் குறைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். நல்ல முறையிலே சோதனைகள் செய்து நெல்லை எப்படி அதிகமாக, குறைந்த தண்ணீரை வைத்துக் கொண்டு விளைவிக்க முடியும் என்று தீர்மானிக்க வேண்டும். இரண்டாவதாக சர்வே செய்ய வேண்டும். இன்றைக்கு மதகுகளை குறைத்து விடக்கூடிய நிலைமை ஏற்படும். இப்பொழுது விவசாயிகள் தண்ணீர் ஏராளமாக வேண்டும் என்று நினைக்கிறார்கள். ஆகவே, சோதனைகள் செய்தி, சர்க்கார் துணிந்து நடவடிக்கை எடுக்க முற்பட்டால் மதகுகளைக் குறைக்க எந்த விவசாயியும் எதிர்ப்புக் கூறமாட்டார்கள். எங்கள் தாலுக்காவைப் பொறுத்தவரை, எல்லா ஜில்லாக்களிலும் கரும்பு ஆலைகள் ஏற்பட்டிருக்கின்றன. கோயம்புத்தூரில்கூட அமராவதி கரும்பு ஆலை இருக்கிறது. கீழ் பவானி எங்கள் தாலுக்காவில் சுமார் ஒரு லட்சத்து 30 ஆயிரம் ஏக்கருக்குப் பாய்கிறது. மற்ற ஜில்லாக்களில், இன்றைக்குக் கரும்பு சாகுபடிக்கு நெல் சாகுபடியாகும் நிலங்களைத் திருப்பியிருக்கிறார்கள். எங்கள் தாலுக்காவில் ஒரு விசேஷ நிலை இருக்கிறது. லோயர் பவானிக்குப் பிறகு சுமார் 10 ஆயிரம் ஏக்கர் களர் நிலங்களாக மாறிவிட்டது. அதில் கரும்பு சாகுபடி செய்தால், நல்ல வெள்ளாமையும் வரும், களரும் திருந்தும். ஆகவே எங்கள் ஈரோடு தாலுக்காவில் அப்படிக் கரும்புச் சாகுபடி செய்ய வேண்டிய உதவிகளை செய்யவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். சர்க்கார் கோரும் 25 லட்ச ரூபாய் கொடுத்து கூட்டுறவு சர்க்கரை ஆலை நிறுவத்தயாராக இருக்கிறோம். அதற்கு வேண்டிய விண்ணப்பங்கள் கொடுக்கவும் தயாராக இருக்கிறோம்.

அடுத்தபடியாக சர்க்கார் இன்றைக்கு கால்நடை, கோழிப் பண்ணைகள் வைத்து வளர்க்க முன் வருகிறார்கள். ஆனால் கால் நடை வளர்ப்பு மட்டும் போதாது. அதோடு கோழி வளர்ப்பையும் சேர்த்தால் நல்ல லாபம் இருக்கிறது என்பது கண்டறிந்த உண்மை. அது மாத்திரமல்ல. அதே போல பன்றி வளர்ப்பையும் செய்தால் நம் நாட்டிலே நிச்சயமாக நல்ல லாபமாக இருக்கும். நம் நாடு உஷ்ணமான பிரதேசம். இங்கே ஆடு, கோழி இவைகளின் மாமிசங்களைவிட பன்றி மாமிசம் ஜனங்களுக்கு மிக்க நலமாக இருக்கும். இதை ஜனங்களிடையே பிரசாரம் செய்தால், உஷ்ணப் பிரதேசமான நம் நாட்டுக்கு அது மிக்க நன்மை பயக்கும். அதோடுகூட உரத்திற்காக நாம் இப்படி திண்டாடித் தெருவில் நிற்கவேண்டாம். பன்றி உரம் மிக்க பயனுள்ளது என்பது எல்லோரும் அறிந்தது, நம் விவசாயிகள் அறிந்தது. ஆகவே, பன்றி வளர்ப்புக்கும் ஏற்றவகையில் திட்டங்கள் போட்டுச் செயலாற்ற வேண்டும்.

கடைசியாக ஒரு வார்த்தை. பொது வாய்க்கால் கரைகளில் தேக்கு, தென்னை மரங்களை வைத்து வளர்க்க ஏற்பாடு செய்ய வேண்டும். எங்கள் பகுதியில் கீழ் பவானி வாய்க்கால் கிட்டத்தட்ட 124 மைல் நீளம் ஓடுகிறது, வருஷத்தில் 7 மாதங்கள் தண்ணீர் இருக்கிறது. அதன் கரைகளில் 30 ஆயிரம் மரங்கள் வைக்கலாம். மரம் ஒன்றுக்கு ஐந்து ரூபாய் வருமானம் வரும். ஆக 15 லட்ச ரூபாய் வருஷம் ஒன்றுக்குக் கிடைக்கும். ஆகவே அதற்கான நடவடிக்கைகளை சர்க்கார் எடுக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டு, வெட்டுப் பிரேரணையை ஆதரித்து என் உரையை முடிக் கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : On a point of order, Sir.

Fisheries and Agriculture are two separate demands in the Budget. I do not know why they should be clubbed together and discussed. Time should be allotted for discussion for each demand separately. Fish is as important as other food. We would like to have a thorough discussion over it. The time at our disposal is very short.

MR. SPEAKER : The Business Advisory Committee grouped these together. They selected fisheries for discussion. The Hon. the Leader of the House put it to the vote of the House. The House has agreed. How can I change the order now ? Many hon. Members who are taking part in the discussion talk on agriculture and fisheries. The hon. Member, Srimathi T. N. Anandanayaki may also refer to fisheries in her discussion. I think it is perfectly in order.

SRI K. ANBAZHAGAN : சட்டமன்றத் தலைவர் அவர்களே, இன்று கொண்டு வரப்பட்டிருக்கிற மானியங்கள் மீது, பல் வேறு வெட்டுத் தீர்மானங்கள் தரப்பட்டுள்ளன; இந்தத் துறை களில் செலுத்தப்படுகிற கவனம் இப்பொழுது செலுத்தப்படுவதை

விட மிகுதியாக செலுத்தப்பட வேண்டும் என்ற நோக்கத்தோடு, வெட்டுத் தீர்மானங்கள் தரப்பட்டுள்ளன. உண்மையாகவே அந்தத் துறைகளில் ஈடுபட்டிருக்கிற நம் அமைச்சர்கள் அதிக ஆர்வத் தோடுதான் ஈடுபடுகிறோம் என்று சொன்னாலும், அவர்கள் சக்தி யையும் மீறி, திறமையையும் கடந்து பல நேரத்தில், சிலபல தவறுகள் அந்தத் துறைகளில் நடைபெறுவதையும், அப்படி நடை பெறுகிற தவறுகளைத் திருத்தும் முயற்சிகளில் அவர்கள் ஈடுபடுகிற போது பல வகைகளில் தாமதம் ஏற்படுவதையும் அவர்கள் நன்கு அறிவார்கள். உண்மையாகவே, இன்றையதினம், உணவு உற் பத்தியைப் பெருக்கவேண்டுவது மிகவும் அவசியம் என்பதை உணவு அமைச்சர் திரும்பத் திரும்ப எடுத்துச் சொல்கிறார்கள். இரண்டாவது திட்ட இறுதியில் ஏறத்தாழ 12 லட்சம் டன் அளவுக்கு அதிக உணவு உற்பத்தி செய்வோம் என்று தெரிவித் தார்கள். ஆனால் அந்த இலக்கை அவர்களால் எட்ட முடியவில்லை என்பதை இப்போது தெரிவிப்பதுடன் அந்த இலக்கை அடைய முடியாததற்குக் காரணம் போதுமான அளவுக்கு மக்கள் விரும்பிய உரத்தை அவர்களுக்குத் தரமுடியவில்லை. 'ரசாயன உரம் கிடைக்க வில்லை. எனவேதான் பின்தங்கி விட்டது' என்று இங்கேயே அமைச் சர் அவர்கள் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் காங்கிரஸ் கட்சிக் கொரடா—நண்பர் திரு. கருத்திருமன் அவர்கள் கட்சியின் சார்பில் பேசினார்கள் என்று நான் கருதுகிறேன்—'உர வினி யோகம் செய்யப்படாமலும் கூட சில பகுதிகளில் நல்ல விளைச்சலை உண்டாக்க முடிந்திருக்கிறது. எனவே உரம் கிடைக்காததைப் பெரிதாகக் கூறுதீர்கள். அதைக் காரணமாகக் காட்டாதீர்கள்' என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். கனம் அமைச்சரவர்களை இப் பொழுது நான் கேட்டுக் கொள்ளுவேன், நண்பர் திரு. கருத்திரு மன் தேர்ந்தெடுக்கப்பட்ட கோவை மாவட்டத்தில் பல இடங் களில் புதிய நிலம் மிகுதியாக விளைச்சலுக்கு வந்த காரணத்தால் அவை சத்துள்ளதாக இருக்குமாதலின் கோவைக்கு வேண்டு மானல் உர வினியோகத்தை நிறுத்தி, அந்த உரத்தை பல காலமாக விளைச்சலுக்கு வந்துள்ள செங்கல்பட்டு மாவட்டம், தஞ்சை மாவட்டம், தென்னார்காடு மாவட்டம் போன்ற பகுதிகளுக்கு, திரு. கருத்திருமன் சம்மதத்தைப் பெற்று, அளித்தால் நல்லது என்று கருதுகிறேன்.

அதைவிட முக்கியமாக, விரைவில் உர உற்பத்தியைப் பெருக்கிக் காட்டுவோம், இதனால் விளைச்சல் அதிகமாக ஏற்படும் என்ற நம்பிக்கையைப் பலர் தெரிவித்தார்கள்; நெய்வேலியில் ஏற்பட விருக்கிற உர உற்பத்தி அடுத்த ஆண்டில் துவங்கும் என்று தெரிவிக்கிறார்கள். அடுத்த ஆண்டு என்பது "நாளைக்கு" என்ற பொருளில் இன்று பிச்சை கேட்பவர்கட்கு போடுகிறவர்கள் "நாளைக்கு வா" என்று என்றைக்குமே அதைத் தவறாமல் சொல்லு கிறார்களே, அதுபோல் ஆகிவிடக்கூடாது. மாறாக, 62 மார்ச்சில், 62 ஏப்ரலில் விளைச்சலுக்குத் தேவையான நேரத்தில் உரம்

11th March 1961] [Sri K. Anbazhagan]

கிடைக்கும் என்பதற்கு வழிவகை செய்ய வேண்டும். உரத்தைப் பொறுத்தவரை இந்திய அரசாங்கம் மேற்கொண்டிருக்கிற கொள்கை, அதாவது வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்வது அவ்வளவு நல்லதல்ல ; அது நாட்டின் அன்னியச் செலாவணிக்கு ஏற்றதல்ல என்பதான கொள்கை மத்திய அரசாங்கத்தின் உணவு அமைச்சரால் கண்டிக்கப்பட்டிருக்கிறது என்று நான் கேள்விப் படுகிறேன். உணவு உற்பத்தியைப் பெருக்கும் பொறுப்பில் உள்ள அமைச்சர்கள், வெளிநாட்டிலிருந்து ரசாயன உரத்தைப் போது மான அளவு வரவழைத்தால், இந்தியாவிற்கு இறக்குமதியாகும் அளவுக்கு உணவு தானியங்களின் தேவையை நிறைவேற்றவும், உணவுப் பொருள் வரவழைப்பதைக் கட்டுப்படுத்தவும் துணை செய்யும் என்று தெரிவித்துக்கொள்கிறேன். அந்த அளவுக்கு வெளிநாட்டு உரம் தேவை என்பதை மத்திய சர்க்கார் அமைச்சர் ஒப்புக்கொண்டிருக்கும் நேரத்தில், நம் மாநில அமைச்சர்கள் வெளிநாட்டு உரத்தை வரவழைக்கச் செய்து, உடனடியாக இங்கே யுள்ள தேவையை நிறைவேற்ற வேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன். மற்றொன்றையும் நான் குறிப்பிட விரும்புகிறேன். உரத்தை விநியோகிக்கும் முறையை கனம் அமைச்சர் அவர்கள் அறிவார், அதனால் ஏற்பட்டுவரும் பலன்கள் என்ன என்பதையும் அவர் அறிவார். உரம் வினியோகம் முறையாகவும் சரியாகவும் இருந்தால்தான் அதனால் உற்பத்தி பெருகுவதற்கு ஏதுவாகும். அதனால் தமிழ் நாட்டு மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயருவதற் கும் வழி ஏற்படும். ஆனால் அப்படி வினியோகம் செய்வதில் எவ் வளவோ குறைகள் ஏற்படுகின்றன, அதனால் மக்களுக்குத் துன்ப மும் உற்பத்திக் குறைவும் அடைகிறது. அப்படிப்பட்ட ஒரு வருந் தத்தக்க நிலை இப்பொழுது தமிழ் நாட்டில் ஏற்பட்டிருக்கிறது. பல பகுதிகளில் கொள்ளை லாபம் அடிக்கக்கூடியவர்கள் இதில் தலை யிட்டுள்ளதால் சரியான வகையில் உரத்தை வினியோகிப்பதாகத் தெரியவில்லை. இது குறித்து சமீபத்தில் அரியலூர் பகுதியில் ஒரு வழக்கு தொடரப்பட்டது. அங்கு ரசாயன உரத்துடன் உணவு உப்பைக் கலந்து விற்றதாகப் புகார் வந்தது. அதைப்பற்றி எந்த விதமான நடவடிக்கையும் உடனடியாக எடுத்துக் கொள்ளப்பட வில்லை. ஆனால் பொதுமக்கள் சார்பில் அரசியல் கட்சிகள் திரும் பத் திரும்ப அந்த ஊழலைப்பற்றி விண்ணப்பங்கள் அனுப்பிய பிறகு, பொதுக் கூட்டங்களில் பல தடவைகள் கண்டித்துப் பேசிய பிறகுதான் நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டது. உரத்தை விற்பனை செய்கிற போது அத்துடன் சோத்து உப்பை பெரும் அளவில் கலந்து விற்பனை செய்கிறார் கள். சோத்து உப்பை விற்பனை செய்தால் அதைச் சாப்பாட்டிற்கு உபயோகித்துக் கொள்ளலாமே என்று கூடச் சொல்லலாம். அப்படி சொல்வது வேடிக்கையாக இருக்கலாம். ஆனால் அது உணவு உற்பத்தியையே பாழ் செய்து விடுவதால் எனக்கு வேதனையைத் தருகிறது. எனவே இப்படிப்பட்ட முறை களை கையாண்டு ஏமாற்றுதலை செய்யாமல் தடுக்க வேண்டும்

(Deputy Speaker in the Chair.)

என்பதற்குத்தான் கனம் அமைச்சர் அவர்களுக்குச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஆகவே இனிமேலாவது இப்படிப்பட்ட தவறுகள் நடவாமல், நடக்கமுடியாமல் பார்த்துக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக உரத்தை கூட்டுறவு பண்டகசாலைகள் மூலமாக விநியோகம் செய்ய வேண்டும் என்று அமைத்திருக்கிறார்கள். அப்படி விநியோகம் செய்தாலும் சில சங்கடங்கள் ஏற்படுகின்றன. சலுகை பெற்றவர்கள்தான் அவைகளைப் பெற்றுக் கொள்ளுகிறார்கள். அப்படிப்பட்ட சலுகைமுறை விநியோகத்தில் இருக்கக் கூடாது. உணவு உற்பத்திக்கு என்று மண்டலக் குழுக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மண்டலக் குழுக்கள் சார்பாக எந்தெந்த கிராமங்களுக்கு எந்த அளவு உரம் தேவைப்படுகிறது என்பதைத் தீர்மானித்து அந்த வகையில் அந்த கூட்டுறவு பண்டக சாலைகள் மூலமாக உரம் விநியோகம் செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். மற்றும் உரம் மூட்டை ஒன்றுக்கு 47 ரூபாய் என்று விற்பதற்குப் பதிலாக 66-67 ரூபாய்க்கு விற்று வருகிறார்கள். இப்படிப்பட்ட விற்பனை பல இடங்களில் நடைபெற்று வருகின்றன. இதை எந்த விதத்திலும் அனுமதிக்கக் கூடாது. இதைப்பற்றி போலீசாரிடம் தெரிவிக்கப்பட்டாலும் அவர்களும் சில இடங்களில் எந்த விதமான நடவடிக்கையும் எடுப்பதாக இல்லை. இப்படித் திருச்சியில் சென்ற ஆண்டில் ஒரு புகார் வந்தது. ஆகவே போலீசார் இதில் அதிக கவனம் செலுத்துவதற்கு வேண்டிய வழிவகை செய்ய வேண்டும் என்று விரும்புகிறேன். இந்த கொள்ளை நடவாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியமாக இருக்கிறது.

உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்று சொல்லுகிறபோது அதற்கு உதவியாக தேவையான இரும்பு உழவுக் கருவிகளைக் கிடைக்கச் செய்ய வேண்டியது அவசியமாக இருக்கிறது. அவைகள் எல்லாம் காலாகாலத்தில் விவசாயிகளுக்குக் கிடைப்பதாக இல்லை. இந்தக் கருவிகளை வழங்குவதற்கு அந்த இலாகா ஒரு முறையைக் கடைப்பிடித்து வந்தாலும் பாமர மக்களுக்கு அவைகள் எந்தக் காலத்தில் எப்பொழுது எங்கு கிடைக்கும் என்பது தெரியாததால் துன்பப்படுகிறார்கள். அவர்கள் படிக்காதவர்களாக இருப்பதால் அவர்களால் காலாகாலத்தில் விண்ணப்பித்துக் கொள்ள முடியவில்லை. பாமர மக்களுக்கு வேண்டிய கருவிகள் தேவையான காலத்தில் கிடைப்பதாக இல்லை. இதைப் பற்றி கனம் பெரியவாலகுருவா ரெட்டியார் அவர்களும் குறிப்பிட்டதை நினைவூட்டுகிறேன். அவர் சொன்னபோது மதுரை பகுதியில் தேவையாக இருக்கிறது என்று சொன்னால் கோயம்புத்தூரில் அதற்காக இரும்பு அனுமதி கொடுப்பதாகத் தெரிய வருகிறது. அதனால் மக்கள் நெடுந் தொலைவு சென்று வாங்கிக்கொள்ள முடியவில்லை. ஆகவே இப்படிப்பட்ட தொல்லை ஏற்படாமல் உழவுக்குத் தேவையான கருவிகளை அவர்கள் கேட்கும்போது

கிடைக்கக்கூடிய அளவில் விநியோகம் செய்ய நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

டிராக்டர்களைப் பொறுத்த வரைக்கும், 1958-ம் ஆண்டு டிராக்டர்கள் வேண்டுமென்று விண்ணப்பித்தவர்களுக்கு இன்னும் கொடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. ஏதோ சிலருக்குக் கொடுக்கப்பட்டிருந்தாலும் பலருக்கு இன்னும் கொடுக்கப்படவில்லை. விவசாயிகள் தவணைக் கடன் முறையில் கேட்டும் கிடைக்கவில்லை. இதற்காக 1958-ம் ஆண்டில் விண்ணப்பித்தும் இன்னும் ட்ராக்டர்கள் வழங்கப்படவில்லை. அரசாங்கம் இதில் கவனம் செலுத்த வேண்டும். அதற்குக் காரணம், அரசாங்கம் ஒரு குறிப்பிட்ட கம்பெனியின் மூலம், அதாவது மார்ஷெல் கம்பெனி என்று நினைக்கிறேன், ட்ராக்டர்களை வாங்குகிறார்கள். அந்தக் கம்பெனி ஒன்றிரண்டு வகையான ட்ராக்டர்களைத்தான் விற்பதாகத் தெரிய வருகிறது. அவர்களால் அந்த வகை ட்ராக்டர்களைத்தான் உற்பத்தி செய்ய முடிகிறது என்றும் தெரிகிறது. வேறு வகையான ட்ராக்டர்கள் வேண்டும் என்று கருதினால் அவர்களிடம் கிடைப்பதில்லை. வேறு நிறுவனங்களிலிருந்து வாங்காததால் தாமதமாகிறது என்றும் தெரிய வருகிறது. ஆகவே அரசாங்கம் உடனடியாக தேவையான ட்ராக்டர்களை சப்ளை செய்வதற்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன். மேலும் அந்தக் கம்பெனியிலிருந்து மட்டும் வாங்குவதற்கும் காரணம் இருப்பதாகத் தெரிய வருகிறது. மற்ற கம்பெனிகளில் வாங்குவதாக இருந்தால் உடனடியாக அந்தத் தொகையை அரசினர் கட்ட வேண்டியதாக இருக்கிறது. அதனால் மற்ற கம்பெனிகளை அரசாங்கம் கடன் தவணை கேட்டால் அவர்கள் கொடுக்கத்தயாராக இல்லை என்றும் தெரியவருகிறது. இப்படி நான் சொல்லும்போது இது தவறு என்று கனம் அமைச்சர் கருதலாம். ஏனென்றால் நான் எந்தக் குறையைச் சொன்னாலும் அது தவறு என்று சொல்ல அவர் தயங்குவதில்லை. எது தவறாக இருந்தாலும் இனி பல நிறுவனங்கள் மூலமும் ட்ராக்டர்கள் சப்ளை செய்வதற்கு வழிகண்டு தாமதத்திற்கு இடம் கொடுக்காமல் இருக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளுகிறேன். 1961-ம் ஆண்டிலாவது 1960-ம் ஆண்டு வரை விண்ணப்பித்தவர்களுக்கு வேண்டிய ட்ராக்டர்களை தவணை முறையில் வழங்குவதற்கு வழிவகை செய்ய வேண்டும். அதற்கு வேண்டிய வழிவகை செய்தால் நிச்சயமாக உணவு உற்பத்தி பெருகுவதற்கு இடம் இருக்கிறது.

இன்னொரு வகையிலும் உற்பத்திப் பெருக்கத்திற்கு இடையூறு ஏற்படுகிறது. இதனால் உற்பத்தி மிகவும் பாதிக்கப்படுகிறது. பயிர்களை பூச்சிகள் அரிப்பதால் உற்பத்தி பெரிய அளவில் கெடுகிறது. இப்படிப் பூச்சிகள் பயிர்களில் விழுகிறது என்று அடிக்கடி புகார்கள் வந்து கொண்டிருக்கின்றன. பயிர்கள் பாழாவதற்கு எவ்வளவோ வழிகள் இருக்கின்றன. அதிகப்படியான தண்ணீர் தேங்கி இருந்தாலும் தண்ணீரே இல்லாமல் போனாலும் பயிர் பாழாகிறது. இதன் மூலம் பாழாவதோடு பூச்சிகளால் பயனற்றுப் பாழாகின்றன. இதைத் தடுக்க ஆராய்ச்சிகள் நடத்தப்பட வேண்டியதாக இருக்கிறது. அதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும்

பணம் குறைவாகத்தான் இருக்கிறது. இன்னும் அதிகப்படியான தொகை ஒதுக்க வேண்டியது அவசியம். குறைவாக இருக்கிறது என்பதை புள்ளிவிவரத்தில் இருந்து குறித்திருக்கிறேன். முக்கியமாக இப்படிப் பூச்சி விழுவதால் வெற்றிலை பயிர்கள் வேரோடு பாதிக்கப்படுகிறது. வெற்றிலைப் பயிர்த் தொழிலினால் எவ்வளவோ மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். அவற்றில் அதிகப்படியான பூச்சி விழுவதால் அந்தத் தொழில் பெருக முடியாமல் அழிகிறது. அதைத் தடுக்க வழிவகை செய்ய வேண்டியது அவசியமாக இருக்கிறது. இது சம்பந்தமாக ஒரு ஆராய்ச்சி நிலையத்தை சேலம் மாவட்டம் பொத்தனூர் (பாண்டமங்கலம்) என்ற இடத்தில் அமைத்திருக்கிறார்கள். அங்கு இதைப் பற்றிய ஆராய்ச்சியை நல்ல முறையில் செய்து அந்த வெற்றிலைப் பயிரை பூச்சிகளில் இருந்து பாதுகாப்பதற்கு வழிவகை காணவேண்டும். அதற்கு வேண்டிய நிபுணர்கள் இங்கு இல்லாவிட்டாலும் திறமைவாய்ந்தவர்களை வெளிநாட்டிலிருந்தேனும் இங்கு வரவழைத்து அவர்கள் மூலம் இந்த ஆராய்ச்சியை நடத்துவதற்கு முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும். அந்த முறையில் நடவடிக்கை எடுத்தேனும் ஏழை வெற்றிலை விவசாய மக்களை வாழவைக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

பயிர்களில் பூச்சி விழுந்தால் அவற்றிற்கு மருந்து தெளிக்க அரசாங்கத்தினிடம் வேண்டிய ஸ்ப்ரேயர்கள் இல்லை என்று தெரிய வருகிறது. விவசாய இலாகாவில் போதுமான அளவில் ஸ்ப்ரேயர்கள், மருந்து தெளி கருவி இல்லாத காரணத்தால் தேவைப்படும் காலத்தில் அதை வழங்க முடியவில்லை. சாதாரணமாக தெளிமருந்து பாதி விலைக்குக் கொடுக்கப்படுவதற்கு அனுமதி பெறுவதில் தாமதமேற்படுவதால், காலத்தில் கொடுக்க முடியவில்லை. அதனால் பூச்சி விழக்கூடிய காலத்தில் உடனடியாக மருந்து சப்ளை செய்ய முடியவில்லை. ஆகவே உடனடியாக வேண்டிய ஸ்ப்ரேயர்களையும் பூச்சி மருந்துகளையும் வழங்குவதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அந்த இலாகாவைக் கவனிக்கும் கனம் போலீசு அமைச்சர் அவர்கள் வயதானவராக இருந்தாலும் போலீஸ்காரர்களைப்போல் மிகவும் முடுக்காக இருப்பதால் இந்தத் துறையிலும் கவனம் செலுத்தி உற்பத்தி பெருகுவதற்கு வழிவகை காண வேண்டும் என்று விரும்புகிறேன்.

அடுத்தபடியாக கால்நடை இலாகாவைப் பற்றிச் சில கூற வேண்டி இருக்கிறது. இந்த இலாகா சம்பந்தமான கால்நடை மருத்துவக் கல்லூரி ஒன்றுமட்டும் இருப்பது போதாது. இப்பொழுது இருக்கக்கூடிய கல்லூரியில் சிறந்த முறையில் பணியாற்றி வருகின்ற பேராசிரியர்கள் பலர் இருந்தும் அந்தக் கல்லூரிக்கு வெளியிலிருந்து ஒரு பேராசிரியரைக் கொண்டுவந்து நியமித்திருப்பதாகத் தெரியவருகிறது. தமிழ் நாட்டில் அதற்குத் தகுதியுள்ளவர்கள் கிடையாதா? அந்தக் கல்லூரியிலேயே எல்

வளவோ தகுதி வாய்ந்தவர்கள் இருக்கிறார்கள். அந்த நிலைமையில் வெளியிலிருந்து ஒருவர் வரவேண்டிய காரணம் என்னவென்பது தெரியவில்லை. அப்படி வந்திருக்கக்கூடியவரும் முழுத் தகுதி வாய்ந்தவராக இருப்பதாகத் தெரியவில்லை. அப்படி தகுதிக் குறைவாக இருப்பவரைக் கொண்டு வருவது முறையல்ல. அப்படி நான் சொல்வது தவறாக இருக்கிறது என்று நிரூபித்தால் அதைக் கேட்டு நான் மகிழ்ச்சி அடைவேன். நான் சொல்வது சரியாக இருந்தால் கனம் அமைச்சர் அவர்கள் வருத்தப்பட வேண்டும். அப்படிப்பட்ட முறை இருக்கக் கூடாது. அந்தக் கல்லூரியில் இருப்பவர்களுக்கு தகுதி இருக்குமானால் அவர்கட்கே மேல் பதவி கிடைப்பதற்கு வழிவகை செய்யவேண்டும். மேலும் இந்தக் கால் நடை மருத்துவ இலாக்காவுக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை பத்து லட்சம் ரூபாய் என்று கருதுகிறேன். கால்நடை காப்புக்கு அது குறைவு என்று தெரிவித்துக் கொள்ளுகிறேன். இன்றைய தினம் நம் நாட்டில் உள்ள கால்நடை எண்ணிக்கைக்கு ஏற்ற அளவிலும் அதிகரித்துக் கொண்டு வருவதற்கு ஏற்பவும் அவைகளை நோயிலிருந்து காப்பதற்குத் தேவையான அளவு தொகை ஒதுக்கி வழிவகை செய்யவேண்டும்.

இதற்கு அடுத்தபடியாக மீன் இலாகாவைப்பற்றி சில கூற விரும்புகிறேன். சென்ற ஆண்டு பல குற்றச் சாட்டுகளை எடுத்துச் சொன்னேன். அதற்கு எந்த விதமான தக்க பதிலும் கனம் அமைச்சர் சொல்லவில்லை. நான் சொல்லிய குற்றச்சாட்டுகளுக்குச் சற்று அதிகமாகவே அங்கு தவறுகள் நடைபெற்றிருக்கிறது என்று நாளடைவில் தெரியவருகிறது. அதன் உண்மையை ஆராய்ந்து பார்த்து வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். இதுவரையிலும் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டிருக் கிறது என்று தெரியவில்லை. வேறு இடத்தில் பேசும்போது நாலைந்து நாட்களுக்கு முன்பு, சுமார் 35 ஆயிரம் சங்குகள் காணாமல் போய்விட்டதாகத் தெரியவருகிறது, அதைப்பற்றி விசாரணை நடந்து வருகிறது என்று அத்துறை அமைச்சர் சொல்லி இருக்கிறார். அதையே நான் இந்த மன்றத்தில் கூறி ஒரு ஆண்டு ஆகிறது. அந்தச் சங்குகள் போன இடம் தெரியவில்லை என்று அமைச்சர் சொல்லி இருக்கிறார். கனம் அமைச்சருக்குத் தெரியாமல் இருக்கலாம். ஆனால் அங்கிருந்த அதிகாரிகளுக்கு அது தெரியாமல் இருக்காது, தெரிந்திருக்க வேண்டும். பல விவரங்களை சென்ற ஆண்டு இங்கு தெரிவித்தேன். அப்பொழுது அவைபற்றி தெரியாமல் இருந்திருக்கலாம். ஆனால் இந்த ஆண்டி லாவது அவைகளுக்குப் பதில் சொல்லவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

DEPUTY SPEAKER : Hon. Member's time is up.

SRI K. ANBAZHAGAN : இன்னும் இரண்டு நிமிடங்களில் முடித்து விடுகிறேன். மீன் இலாகாவிற்கு 1960-61-க்கு செலவு செய்ய திட்டமிட்டிருந்தது 34.12 லட்சம் ரூபாய், அதன் திருத்த மதிப்பீடு 36.98 லட்சம் ரூபாய். ஆக மூன்று லட்சம் ரூபாய் அதிக

மாகச் செலவாகி இருக்கிறது. இந்த இலாகா வருமானத்தைத் தொகுத்துப் பார்த்தால் சென்ற ஆண்டு திட்டமிடப்பட்ட மதிப்பீட்டின்படி 29.6 லட்சம். ஆனல் திருத்தப்பட்ட மதிப்பீட்டின்படி வருமானம் 25.96 லட்சம். வருமானத்தால் 5 லட்சம் குறைகிறது. இதற்கு தக்க சமாதானம் நிதி நிலை அறிக்கையில் கொடுக்கப்பட வில்லை. சென்ற ஆண்டில் செலவு மூன்று லட்சம் அதிகமாகி வரவு நான்கு லட்சம் குறைந்ததற்கு என்ன காரணம் என்பதை கனம் அமைச்சர் அவர்கள் கூறவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

12-30 p.m.

நாட்டில் மீன் வளம் பெருகியிருக்கிறது, பெருகியிருக்கிறது என்று சொல்லப்படுகிறதே தவிர கிடைக்க வேண்டிய வருமானம் குறைந்து போகிறது. இதைப்பற்றி அந்த இலாகா அமைச்சர் அவர்கள் தக்க விளக்கம் தரவேண்டும்.

கடைசியாக நான் சொல்லி முடிக்க விரும்புவது கால்நடை பராமரிப்புக்காக 1960-61-ல் திருத்தப்பட்ட மதிப்பீட்டின்படி 81 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டில் அது 58 லட்சமாகக் குறைக்கப்பட்டிருக்கிறது. அந்த அளவு கால்நடை பராமரிப்புக்காக ஒதுக்கப்பட்ட தொகை குறையக் கூடாது, தேயக்கூடாது. உண்மையில் பயிர் வளர, காடு வளர, மாடு வளர, மீன் வளர வழிகண்டால்தான் மனிதர்கள் வளர, வாழ முடியும். இல்லாவிட்டால் மனிதர்கள் கூடத் தேய்ந்து விடுவார்கள் என்று தெரிவித்துக் கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

SRI P. G. KARUTHIRUMAN : Sir, on a point of personal explanation.

உரமே சாகுபடிக்குத் தேவையில்லை என்று நான் சொன்னது போல திரு. அன்பழகன் சொன்னர். நான் அப்படிச் சொல்லவில்லை. உரம் அவசியம். ஆனல் செயற்கை உரம்தான் அவசியம் என்றல்ல, இயற்கை உரத்தையும் பெருக்கி, விவசாய உற்பத்தியை அதிகப் படுத்தலாம் என்றுதான் சொன்னேன். உரம் இல்லாமல் உற்பத்தியைப் பெருக்க முடியும் என்பதாக திராவிடக் கட்சி நிபுணர்கள் வேண்டுமானல் நினைக்கலாம் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : கனம் சபாநாயகர் அவர்களே, உணவு உற்பத்திப் பெருக்குக்கு மீன் வளத்தை அதிகப்படுத்துவது மிகவும் முக்கியமான திட்டம். இதற்காகத்தான் தக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகிறது. முக்கியமாக விசைப் படகுகள் கட்டி வருகிருர்கள். அறுபத்தைந்து படகுகள் கட்டியிருக்கிருர்கள். இன்னும் 67 படகுகளை உற்பத்தி செய்து கொண்டிருக்கிருர்கள். மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கூட 400 படகுகள் கட்ட வேண்டும் என்று முயற்சிகள் நடைபெறுகின்றன.

ஆனல் அதேசமயத்தில் இந்தப் படகுகளைப் பற்றி ஒரு தப்பான அபிப்பிராயம் மீனவர்களிடத்திலே பரப்பப்படுகிறது. கட்டுமரங்கள் மீன் பிடிக்கிற இடங்களிலே இவைகள் போனல்

கட்டுமரங்களுக்கு மீன் கிடைப்பது கிடையாது. இந்த விசைப் படகுகளின் சத்தத்தினுல் அவை ஓடிவிடுகின்றன என்ற தப்பான பிரசாரத்தை மீனவர்களிடையே சிலர் செய்து வருகிருர்கள். ஆனுல் உண்மையில் இது சரியல்ல. விசைப் படகுகள் சத்தம் போடுகின்றன என்ருல்—விசைப் படகுகளுக்கும் மீன் கிடைக்கக் கூடாது. ஆனுல் விசைப் படகுகளுக்கு நிறைய மீன் கிடைக் கின்றன. இதிலிருந்து விசைப் படகுகளின் சத்தத்திற்கும், மீன் கிடைப்பதற்கும் சம்பந்தம் இல்லே என்று கூறவேண்டியிருக்கிறது. இருந்தாலும் மீனவர்களுக்கு உதவி செய்கிருேம் என்று சொல்லிக்கொண்டு இப்படி நைலான் வலே உபயோகிக்கக் கூடாது, விசைப் படகினுல் கட்டுமரங்களுக்கு மீன் கிடைப்பது இல்லே என்பதாக எல்லாம் ஒரு சிலர் தவருகப் பிரசாரம் செய்வதை நிறுத்திவிட வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். ஆரம்பத்தில் மீனவர்கள் இந்தப் பேச்சைக் கேட்டு ஏமாற்றம் அடைந்தாலும் கூட, இப்போது அவற்றின் பலன்களே உணர்ந்து, அவற்றினுல் உள்ள வருமானத்தை உணர்ந்து, லாபத்தை உணர்ந்து எல்லோரும் உபயோகிக்க முன் வருகிருர்கள். அதற்கு வேண்டிய முயற்சிகளே எடுத்துக்கொள்கிருர்கள்.

SRI A. GOVINDASAMI : தலேவர் அவர்களே, பாப்லோ போட் ஆழ்கடலில் மீன் பிடிப்பதற்கு உபயோகப்பட வேண்டியவை. கட்டுமரம் கடல் ஓரத்தில் மீன் பிடிக்க உபயோகப்படும். கட்டு மரங்கள் மீன் பிடிக்கக்கூடிய இடங்களிலேயே இந்த பாப்லோ போட்டைக் கொண்டுபோய் மீன் பிடிப்பதனுல் கட்டுமரங்களுக்கு மீன் கிடைக்கவில்லே என்பதாக மீனவர்களே புகார் செய்வது அரசாங்கத்திற்குத் தெரியுமா? அதை உணராமல் யாரோ ஒரு சிலர் தப்பாகப் பிரசாரம் செய்வதாகக் கூறும்படியான குற்றச் சாட்டு தவறுனது.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : ஆழ்கடலில் மீன் பிடிப்பது அல்ல இந்த விசைப்படகுகள். கட்டுமரங் களிலும் இந்த விசைக் கருவிகளே உபயோகிக்கலாம். கட்டு மரங்கள் போகக்கூடிய தூரத்திற்குள்ளேயேதான் இந்த பாப்லோ போட்டு உபயோகப்படுத்தப்பட வேண்டியவை. ஆனுல் கட்டு மரங்களுக்கு எவ்வளவுக்கு எவ்வளவு இடம் கொடுக்க வேண்டுமோ அவ்வளவுக்குக் கொடுக்கப்படுகிறது.

திரு. பழனிசாமி அவர்கள் பேசும்போது இந்தப் படகுகளே அதிகமாக்க வேண்டும் என்று கேட்டுக்கொண்டார். இப்போதே அதிகமாக்கப்பட்டு வருகிறது என்று சொன்னேன். அதோடு இந்த விசைப் படகுகள் வந்து தங்குவதற்கு துறைமுக வசதி செய்துதரவேண்டும் என்பதற்காகத்தான் முதற்படியாக 3 துறை முகம் அமைக்க நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. கடலூரில் வசதி செய்யப்பட்டு வருகிறது. இன்னும் ராயபுரம், நாகப் பட்டிணம் இங்கெல்லாம் அமைக்கப்படும்.

[Srimathi Lourdhammal Simon] [11th March 1961

மீன் எண்ணெயும் மிக முக்கியமானது. ஷார்க் லிவர் ஆயில் உற்பத்தி பண்ணுகிற தொழிற்சாலை கோழிகோட்டில் இருந்தது. நம் ராஜ்யத்தில் இருந்து அது பிரிந்த பிற்பாடு இப்போது கிடையாது. இப்போது 35 ஆயிரம் ராத்தல் எண்ணெ கிடைக்கிறது. இன்னும் அதிகம் கிடைக்க ஒரு தொழிற்சாலை அவசியம். அதற்கான ஏற்பாடுகள் நடக்கின்றன. சிபார்சும் செய்திருக்கிறோம். ஆனால் பாரின் எக்ஸ்சேன்ஜ் காரணமாக உடனடியாக அந்த வேலை துவக்கப்படாமல் இருக்கின்றன.

கடற்கரையில் மணல் சேரிகள் ஏற்பட்டு அநேக வீடுகள் சேதம் அடைந்துவிட்டன என்பது உண்மை. குறிப்பாக கன்னியாகுமரி மாவட்டத்தில் இப்படி ஏற்பட்டதன் காரணமாக டிராக்டர்களைக் கொண்டு மண்ணை அகற்றி சேதமான வீடுகளைக் காப்பாற்றியதோடு கூட, பல வீடுகள் சேதம் அடையாமலும் காப்பாற்றப்பட்டிருக்கின்றன.

ஏரி, குளம், குட்டைகளில் மீன் வளர்ப்பது பற்றியும் குறிப்பிட்டார்கள். மீன் குஞ்சுகள் தயாரிப்பதில், இன்னும் ஆரம்ப நடவடிக்கைகள் எடுப்பதில் செலவு இவ்வாண்டு அதிகம். ஆனால் இனி இதுபோல் செலவாகாது. வருமானம் அதிகம் இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறேன். ஒரு ஏக்கர் தண்ணீரில் சரியான முறையில் மீன் குஞ்சுகளை வளர்த்தால் ஆயிரம் ராத்தல் மீன் கிடைக்கும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. திரு. அன்பழகன் குறிப்பிட்டதுபோல அமராவதி, பரம்பிக்குளம், ஆளியார், மேட்டூர் போன்ற இடங்களில் ஆராய்ச்சி, பரிசிலனை, மீன் குஞ்சு சேகரித்தல் முதலியவற்றால்தான் செலவு அதிகம் இவ்வாண்டு ஏற்பட்டிருக்கிறது. இனிமேல் இப்படிச் செலவாகாது என்று அவருக்குச் சொல்ல விரும்புகிறேன்.

முத்துக்குளிப்பது, சங்கு எடுப்பது இவைகள் நம் நாட்டின் முக்கிய தொழில்கள். நமக்கு இப்பொழுது தூத்துக்குடியில் மட்டும்தான் முத்து கிடைக்கிறது. ஆறு வருடங்களாக முத்துக் குளிப்பு தொடர்ந்து நடைபெற்று வருகிறது. 28 ஆண்டுகள் அது நடக்காமல் இருந்து இப்பொழுது ஆறு வருடங்களாக தொடர்ந்து நடைபெற்று வருகிறது. அதோடு இதைப்பற்றி நன்கு பரிசீலனை செய்து, சால்வடார் எப். ஏ. ஓ.-யிலிருந்து வந்து பரிசிலனை செய்து வேறுயிடங்களிலும் முத்து கிடைக்கக்கூடிய நிலையிருக்கிறதென்று ஆராய்ந்து அதுபற்றி குறிப்பும் தந்து போயிருக்கிறார்கள். அதைக் கவனித்து கூடுதல் முத்து எடுத்து நாம் நல்ல லாபம் அடைய வழியிருக்கிறது. பின்னர், 35,000 சங்குகள் காணமல் போய் விட்டதென்று சொன்னார்கள். அதன் பேரில் தக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு, அவை வைக்கப்பட்டிருந்தயிடத்தின், அதில் இரண்டு பூட்டுகள் போடப்பட்டிருந்தது ; அதன் சாவி ஒரு இன்ஸ்பெக்டரிடமும், அவரது அஸிஸ்ட்டென்ட்டிடமும் இருந்தது, அவர்கள் உடனடியாக ஸஸ்பென்ஷனில் வைக்கப் பட்டிருக்கிறார்கள். அதற்கு மேலும் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன. அதுபற்றிய முடிவு ஏற்பட்டதும் அதுபற்றி சபைக்கு அறிவிக்கப்படும். பின்னர், "பிஷ் மார்க்கட்டிங்"-க்கு அதிக வசதி

கள் செய்து கொடுப்பதோடுகூட வேண்டிய உப்பு கொடுப்பது, அதைப் பாதுகாப்பாக வைக்கும் முறை, உலர்த்தக்கூடிய முறை இவைகளைக் கண்டறிய வேறுயிடங்களுக்குப் போய் பார்த்து அவைகளை, ஒவ்வொன்றையும் எப்படி எப்படிச் செய்யவேண்டும் என்பதைப்பற்றியும், விற்பனை செய்யும் முறைபற்றியும் நல்ல விளக்கங்கள் மீனவர்களுக்கு கொடுக்கப்படுகிறது. 1958-59-ல 3 கோடியும், 59-60-ல் 2½ கோடி அளவிற்கு வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. மீன்களை தக்க முறையில் உலர்த்த வசதியில்லாததால் அதற்குள்ள கிராக்கிகூட குறைகிறது. ஆகவே, மீன்களை நன்கு உலர்த்துவதற்கு, நவீன முறையில் உலர்த்துவதற்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்கப்படுகிறது. திரு. பழனி சுவாமி அவர்கள் அடையாறுபற்றி சொன்னார்கள். அடையாரில் ஒரு பிஷிங் ஹார்பர் ஏற்படுமா என்று. அடையாரில் ஒன்று ஏற்படுத்துவது உடனடியாக சாத்தியமாகயிருக்காது என்று நினைக்கிறேன். பரிசீலனை செய்து அடையாறைவிட ராயபுரம் சிறந்தது என்று கருதி அந்த இடத்தில் ஆரம்பிக்கும் தருணத்தில் இருக்கிறது. மீனவர்களின் நிலையை உயர்த்த பல வசதிகள் செய்து கொடுக்க வேண்டியிருக்கிறது. அவர்கள் வசிக்கும் இடங்களுக்கு "அப்ரோச் ரோடஸ்" போட வேண்டுமென்று ஸ்ரீமதி சௌந்தரம் ராமச்சந்திரன் அவர்கள், திரு ஸ்ரீனிவாசன் அவர்கள், திரு ராமஸ்வாமிதேவர் அவர்கள் எல்லோரும் கூறினார்கள். அங்குள்ளவர்களுக்கு வசதியாகயிருக்கும்படி, ரோடுகள் அமைக்கவும், குடி தண்ணீர் வசதி செய்து கொடுக்க வேண்டுமென்றும் கூறினார்கள். இதற்காக அதிகப்படி நிதி ஒதுக்க வேண்டுமென்றும் கூறினார்கள், அதற்காக நான் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். கடற்கரையோர கிராமங்களில், மீனவர்கள் வசிக்கும் இடங்களில் நல்ல ரோடுகள் இல்லை, அப்படி கடற்கரையோர யிடங்களில் ரோடுகள் அமைக்கத் திட்டம் போட்டும், நிதி ஒதுக்கியும்கூட வேலைகள் நடக்க பல தடங்கல்கள் ஏற்படுகின்றன. இப்பொழுது வேலைகள் ஜரூராக நடக்கிறது. தென் ஆற்காடு, தஞ்சாவூர், திருநெல்வேலி மாவட்டங்களில் 4,71,500 ரூபாய் ரோடுகள் அமைக்க ஒதுக்கப்பட்டிருக்கிறது. குளச்சலிலிருந்து நீரோடி, கோவளத்திலிருந்து மணக்குடி ரோடு அமைக்க திட்டம் ஏற்படுத்தப்பட்டு நிறைவேற்றப்பட்டு வருகிறது. மீனவர்களின் வாழ்க்கையில் பலவிதத் துன்பங்கள் ஏற்படுகின்றன. அவர்களது தொழில், ஆபத்துக்கள் நிறைந்ததாகவும், சில சமயங்களில் உயிரைக்கூட இழக்கும் நிலை ஏற்படுகிறது. ஆகவே அவர்களது பாதுகாப்பிற்காக பல வசதிகள் செய்து தரப்படுகிறது. எந்த எந்தயிடங்களில் எப்பொழுது, எப்பொழுது புயல் ஏற்படும் என்று தெரிகிறதோ அப்பொழுது அங்கெல்லாம் அதுபற்றிய அறிவிப்புகள் கொடுக்கப்படுகின்றன. காணமல் போன படகுகளையோ அல்லது ஆள்களையோ கண்டு பிடித்துக் கொண்டுவர விசைப் படகுகள், விமானக் கப்பல் வழி சர்ச் பார்ட்டி சர்ச்சஸ் நடத்துவது போன்றவைகள் செய்யப்படுகின்றன. அடுத்தபடி

யாக, மீனவர்கள் வீடுகள் பற்றி பல குறைகள் சொல்லப்பட்டன. கடலை நம்பி வாழும் அவர்களுக்கு கடற்கரையோரத்தைத் தவிர வேறுயிடங்களில் அவர்கள் வாழும் நிலைமையில்லை. ஆனால் கடலரிப்பு, அல்லது அந்தயிடங்களை வேறு காரியங்களுக்காக அக்வயர் செய்தாலோ அப்படிப்பட்ட நிலை ஏற்பட்டால் அவர்களுக்கு வேறு எங்கெங்கு வீடுகள் கட்டிக் கொடுக்க முடியுமோ அவ்வாறு செய்யப்பட்டு வருகிறது. வீடுகள் கட்டுவதில், அதிக வருமானம் இல்லாததால் அதில் அதிகமான வெற்றி காண முடியாமல் இருக்கிறது. மீனவர்களின் வாழ்க்கை நிலை உயரவேண்டும், அவர்களுக்கு வேண்டிய வசதிகள் செய்து கொடுக்க வேண்டுமென்று சொல்லும்போது, அந்த வேலை செய்யும் உரிமையை இந்த ஏழை மக்களிடமிருந்து அப்புறப்படுத்தப் பார்ப்பது என்றால் எப்படி அதை ஏற்றுக் கொள்ள முடியும்? கனம் அங்கத்தினர்கள் சொன்ன யோசனைகளை மனதில் கொண்டு ஆவன செய்யப்படும். மீன் இலாகா வழி வருமானம், நிர்வாகச் செலவு, அபிவிருத்திக்காகும் செலவு இவைகளில் 2/3 பாகத்திற்குப் போதுமானதாகயிருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். இன்னும் மேன்மேலும் இந்தத் துறை அபிவிருத்தியடைந்து, மீனவர்களுக்கும், அதை உண்பவர்களுக்கும், அரசாங்கத்திற்கும் லாபம் கிடைக்கும் என்ற என் நம்பிக்கையைத் தெரிவித்துக் கொண்டு இந்த மான்யத்தை ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

* SRI K. ANBAZHAGAN : கனம் மீன்வளத்துறை அமைச்சர் அவர்கள் இப்பொழுது நாம் அதிகம் செலவு செய்வதால் வருகிற ஆண்டில் அதிக வருமானம் வரும் என்று தெரிவித்தார்கள். 1961-62-ம் ஆண்டு வருமானம் 28-½ லட்சம் என்று தரப்பட்டிருக்கிறது. அதைவிட அதிகம் வருமானம் உயரும் என்று கருதுகிறார்களா? அதோடு, விவசாய இலாகாவோடு இது சேர்த்துத் தரப்படுகிறது. ஆகவே இந்தத் துறை வருமானத்தை இனி தனியாகப் பிரித்துத் தரப்படுமா என்று அறிய விரும்புகிறேன். மேலும் 35,000 சங்குகள் காணாமல் போனதுபற்றி விசாரித்திருப்பதாகத் தெரிவித்தார்கள். சென்ற ஆண்டு கூறப்பட்ட மற்ற குற்றச் சாட்டுகள் பற்றியும் விசாரித்தார்களா? அல்லது இனிதான் விசாரிக்கப் போகிறார்களா என்றும் தெரிவிக்க வேண்டுகிறேன்.

* THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : அதிகமான வருமானம் வரும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இந்த ஆண்டு ஆக்க வேலையில் ஈடுபடுவதால் புதிதாகக் குளம், குட்டைகள் இவைகளின் அதிகரிப்பினால் அதிகச் செலவினம் ஏற்படுவதால் மீன் குஞ்சுகள் வளரும், இந்த ஆண்டு அவற்றைக் கொண்டு வியாபாரம் செய்ய உதவ முடியவில்லை என்றால் அடுத்த ஆண்டு இதன் வருமானம் பெருகும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. கழிந்த ஆண்டு வேறு குற்றச்சாட்டுகள் கூறினார்கள் என்றால் அவை

பரிசீலனையில் இருக்கின்றன, அதற்கு வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, மீன் இலாகா கோரிக்கை உள்பட ஆறு கோரிக்கைகள் பற்றிய விவாதத்தில் 16, 17 அங்கத்தினர்கள் கலந்து கொண்டார்கள். அவர்கள் அதில் மிகுந்த அக்கறை செலுத்தி பல அரிய யோசனைகளையும் தெரிவித்தார்கள், குறைபாடு களையும் தெரிவித்திருக்கிறார்கள். குறைகள் இருந்தால் அவைகள் எல்லாம் அகற்றப்படுவதற்கு நடவடிக்கை எடுக்கப்படும். அதற் காகக் கவனம் செலுத்தப்படும் என்று தெரிவித்துக் கொள் கிறேன். இங்கு பல யோசனைகள் தெரிவிக்கப்பட்டன. அவைகளை எல்லாம் எந்த அளவுக்கு நிறைவேற்ற முடியுமோ அந்த அளவுக்கு நிறைவேற்ற அரசாங்கம் கவனம் செலுத்தும் என்பதை முதன்முதலாகத் தெரிவித்துக் கொள்கிறேன். சற்று முன்பு கனம் அங்கத்தினர் திரு நல்லசிவம் அவர்கள் பன்றி வளர்ப்பது மிகவும் அவசியம், அதன் மாமிசம் மிகவும் நல்லது என்ற அரிய கருத்து ஒன்றை தெரிவித்தார்கள். கனம் அங்கத்தினர் ஸ்ரீமதி அனந்தநாயகி அவர்கள் மீன் வளர்ப்பது நல்லது, மீன் முக்கியமான உணவாகும் என்று தெரிவித்தார்கள். கனம் நல்லசிவம் அவர்கள் தெரிவித்த கருத்துக்கு நான் சொல்லிக்கொள்வது என்னவென்றால், இப் போதே கால்நடை இலாகாவின்கீழ் பன்றி வளர்ப்பதற்கு ஏற் பாடு செய்யப்பட்டு, இந்த விஷயத்தில் அரசாங்கம் வேண்டிய அக்கறை எடுத்து கால்நடை இலாகாவின்கீழ் சேவை செய்து வருகிறது. கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன், ஹோசூர் பண்ணையில் பன்றி வளர்க்கப்பட்டு வருகிறது. சமீபத்தில் இங்கு நடந்த கால்நடைக் கண்காட்சி யைப் பார்த்திருப்பார்களானால் அங்கு நல்ல கொழுத்த பன்றிக் குட்டிகள் கொண்டு வந்திருந்ததைப் பார்த்திருக்கலாம். அது வேக மாக வளருகிறது, பெருகுகின்றது, பல பேர்கள் இதை உணவுக் காகவே பெருமளவு வைத்துக் கொள்ளலாம் என்றுகூடக் கூறி யிருக்கிறார்கள். அதற்காக அரசாங்கத்தினுடைய உதவி கிடைப்ப தற்கும் வழி செய்யப்பட்டிருக்கிறது. மேலும் கனம் நல்லசிவம் அவர்கள் சொன்னார்கள், நீர்ப்பாசன விஷயத்தில் மிகவும் சிக்கனம் தேவை என்று. எனக்கு இந்த யோசனை நீண்ட கால மாகவே இருந்து வருகிறது. அதிலும் அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது. இதை உடனடியாகவே செய்துவிட முடி யாது. நல்ல முறையில் ஆராய்ச்சி செய்து பார்த்து அதன்மீது தான் நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கிறது. அதிலும் அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது. அகில இந்திய ரீதியில் ஆராய்ச்சி செய்யப்பட்டு வருகிறது. பொதுவாக விவசாய இலாகா, சீரிய முறையில் தொண்டாற்றி வருகிறது என்பதை கனம் அங்கத்தினர்கள் ஒப்புக் கொள்வார்கள். அதற்காக நான் அவர்களைப் புகழ வேண்டியதில்லை. ஆனால் பொதுவாக மக்க ளுடைய ஆதரவை பெற்று முன்னேற்றத்துடன் வேலை செய்து

வருகிறது என்று அங்கத்தினர்கள் உணர்வார்கள். நாம் பல திட்டங்களைப் போடுகிறோம். அதிலிருக்கின்ற லட்சியத்தை அடைவதற்காகத் திட்டங்களை நிறைவேற்றுகிறோம். சில சமயம் லட்சியம் ஈடேறுவதில்லை. எந்த வகையில் லட்சியத்தை அடையத் தவறி விட்டோம் என்பதை நாம் ஆராய வேண்டியிருக்கிறது. அந்த முறையில் நாம் பல புள்ளி விவரங்களைக் கொடுக்க வேண்டியிருக்கிறது. உணவு உற்பத்தி விஷயத்தில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட முடிவில் 53 லட்சம் டன் உற்பத்தியாகும் என்று சொல்லி யிருக்கிறோம். இதில் இப்போது 44 லட்சம் டன் தானே உற்பத்தி யாகி இருக்கிறது, எப்படி பாக்கி எட்டு அல்லது ஒன்பது லட்சம் டன்னையும் உற்பத்தி செய்ய முடியும் என்று கனம் அங்கத்தினர் ஒருவர் கேட்டார். கனம் அண்மையில் அவர்கள் தனது சொந்த அனுபவத்தை வைத்துக்கொண்டு மழை பெய்யவில்லை, அதன் காரணமாக உற்பத்தி பெருகாது என்று குறிப்பிட்டார்கள். அவர்களுக்கு நஷ்டம் ஏற்பட்டது உண்மைதான். இருந்தாலும்கூட பொதுவாகச் சேர்த்துப் பார்க்கும்போது நிச்சயமாக இன்னும் உற்பத்தி பெருகும். (குறுக்கீடு) பட்ஜெட் உரைக்குப் பின்னுல் தான் நான் சொல்லுகிறேன். ஒன்பது லட்சம் டன் நிச்சயமாக உற்பத்தியாகும். கையில் இருக்கும் புள்ளிவிவரத்தை வைத்துக் கொண்டுதான் சொல்லுகிறேன். எப்படியும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட கால முடிவில் 53 லட்சம் டன் உற்பத்தியாகும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இப்போதுள்ள நிலைமையை எடுத்துக் கொண்டாலும் இரண்டு மூன்று லட்சம் டன் கேரளாவுக்குப் போனாலும்கூட, நம்மிடத்தில் போதிய அளவுக்கு உணவு தானியம் இருந்து கொண்டிருக்கிறது. விலை அதிகமாயிருக்கிறதே தவிர பற்றுக்குறை இல்லை. ரசாயன உரத்தைப் பொறுத்த அளவில் கனம் நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டார்கள். மைனர் இரிக்கேஷனுக்கு இவ்வளவு, மேஜர் இரிக்கேஷனுக்கு இவ்வளவு, ரசாயன உரத்திற்கு இவ்வளவு என்ற வகையில்தான் நாம் செலவு செய்யக் கூடியதை மதிப்பிடுகிறோம். ஒரு இனத்திற்கு என்று தனியாக ஒதுக்குவதில்லை. மண் அரிப்புத் திட்ட உத்தேசம்கூட குறைந்து போய்விட்டது என்று சொன்னார்கள். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நம்முடைய லட்சியம் என்னவென்றால் இதில் 1 லட்சத்தி 900 எக்கர் என்று டார்ஜெட் போட்டிருக்கிறோம். இதற்காகச் செலவுக்கு மதிப்பிட்ட ரூபாய் ஒரு கோடி 20 ஆயிரம். ஆனால் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் 1960 செப்டம்பர் 30-ம் தேதி வரை நாம் எவ்வளவு சாதித்திருக்கிறோம் என்று பார்த்தால் 1 லட்சத்தி 6,838 ஏக்கர் என்று சாதித்திருக்கிறோம். ஏறக்குறைய 6,000 ஏக்கர் அதிக அளவாகவே இருக்கிறது. இதற்கான செலவு 74 லட்சத்து 16 ஆயிரம் ரூபாய்தான். செலவு குறைந்து சாதனை பெருகியிருக்கிறது என்றால் அதை மன்றத்திலுள்ள அங்கத்தினர்கள் வரவேற்பார்கள் அதே போன்று ரசாயன உரத்திற்கு நமக்கு அதிகமாக அந்நிய நாட்டு

11th March 1961] [Sri M. Bhakthavatsalam]

செலாவணித் தேவையிருக்கிறது. இதை அதிகப்படுத்த வேண்டும் என்பதை மத்திய அரசாங்கத்தின் உணவு-விவசாய இலாகா ஒப்புக் கொண்டிருக்கிறது. இந்த வகையில் உணவுப் பொருள்களை நாம் எந்த அளவுக்கு வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்கிறோமோ அந்த அளவுக்கு ரசாயன உரத்திற்காக அந்நிய நாட்டுச் செலாவணி ஒதுக்கப்படும் என்று கூறியிருக்கிறார்கள். நாம் சர்க்கரை உற்பத்தியை மேலும் மேலும் பெருக்கிக் கொண்டிருக்கிறோம். இது இப்படியே போய்க் கொண்டிருந்தால் நாம் எதிர்பார்ப்பது நிறைவேறுமா என்று கனம் அன்பழகன் அவர்கள் கேட்டார்கள். ரசாயன உரத்தை அதிகப்படுத்துவதற்காக நாம் வேண்டிய முயற்சிகள் எடுத்திருக்கிறோம். இப்போது இரண்டு ரசாயன உற்பத்தி லைசன்ஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஒன்று தூத்துக்குடியிலும், மற்றொன்று எண்ணூரிலும் அமைக்கப்படும். அந்நிய நாட்டிலிருந்து 'செங்கற்பட்டு பக்கத்தில் ஒரு தொழிற்சாலையை அமைப்பதற்கு அனுமதி தாருங்கள், உங்கள் நிபந்தனைப்படியே ஒரு நைட்ரஜன் பெர்டிலைஸர் ஏற்படுத்துகின்றோம்' என்று கேட்கிறார்கள். இது மத்திய அரசாங்கமும் இந்த அரசாங்கமும் கலந்து ஆலோசித்து முடிவு செய்ய வேண்டிய விஷயம். அதோடு சூப்பர் பாஸ்பேட் தொழிற்சாலை அமைப்பதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த முறையில் ரசாயன உரம் முன்பு இருந்ததைவிட ஓரளவுக்கு அதிகமாகக் கிடைக்கும். அதோடு இப்போது உரங்கள் சரியான முறையில் விநியோகம் செய்யப்படுவதில்லை என்று திரு. அன்பழகன் அவர்கள் சொன்னார்கள். எங்கு தவறுதல் நடக்கிறதோ, அதைப் பற்றி அரசாங்கத்திற்குத் தெரியும்போது, அதன்மீது தக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு கவனிக்கப்பட்டு வருகிறது. அதோடு பாண்டிச்சேரி, சித்தூர் முதலிய இடங்களுக்குக் கொண்டு போகப்படுகிறது என்றும் சொன்னார்கள். இதைத் தடுக்கவேண்டும் என்று மத்திய அரசாங்கத்தினிடம் சொன்னோம். அவர்களும் ஏற்றுக் கொண்டார்கள். இதற்குக் காரணம் பற்றாக்குறை இருப்பதுதான். அதற்காக கலப்படம் இருக்கட்டும் என்றோ அல்லது பற்றாக்குறை இருந்து கொண்டு இருக்கட்டும் என்றோ சொல்லவில்லை. இப்போது நான் என்னிடமுள்ள தகவல்களின்படி, கலப்படம் செய்தவர்களின் பேரில் ஆறு, ஏழு கேஸ்கள் போடப்பட்டிருக்கின்றன. இவர்கள் ஃபெர்டிலைஸர் கண்ட்ரோல் ஆர்டர்ஸை மீறி குற்றம் செய்தவர்கள். புகார்கள் விசாரிக்கப்படுகின்றன. கேஸும் போடுகிறோம். அது கோர்ட்டிற்குப் போய் கோர்ட்டார் விசாரித்து முடிவு செய்ய வேண்டும்.

ஹையர் பர்சேஸ் ஸ்கீமிலே டிராக்டர்கள் கிடைக்கவில்லை என்று குறிப்பிடப்பட்டது. இப்போது ஒரு உத்திரவு போடப்பட்டிருக்கிறது. விவசாயிகள் எந்த டிராக்டரை வேண்டுமானாலும் வாங்கிக் கொள்ளலாம். இந்த நாட்டிலேயே இப்போது டிராக்டர்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. மேலும் உற்பத்தி செய்ய இன்னும் தொழிற்சாலைகள் ஏற்படப் போகின்றன. விவசா

[Sri M. Bhakthavatsalam] [11th March 1961

யிகள் என்ன டிராக்டர் வேண்டுமானாலும் இந்த நாட்டில் கிடைக்கிற டிராக்டரை வாங்கிக் கொள்ளலாம். முன்பு இருந்த குறைபாடு இப்போது இல்லை. விவசாயி பார்த்து ஹையர் பர்சேஸ் ஸ்கீம் படி இந்த டிராக்டர் வாங்கிக் கொடுங்கள் என்று கேட்டால் அவ்வாறு செய்யலாம் என்ற முறை இப்போது கையாளப் படுகிறது.

இவ்வாறு எத்தனையோ சங்கடங்கள் இருக்கின்றன. இருந்தாலும் விவசாயத்தை அபிவிருத்தி செய்து கொண்டுதான் இருக்கிறோம். சங்கடங்களைக் கூடிய வரையில் சமாளித்து அபிவிருத்தி அடைந்து கொண்டிருக்கிறோம். இப்போது மற்ற நாடுகளில்கூட பார்க்கிறோம். தொழில் வளர்ச்சியில் முன்னணியில் நிற்கும் நாடுகளிலும்கூட விவசாயத்தில் கவனம் செலுத்த வேண்டுமென்று உணர்ந்து கவனம் செலுத்தி வருகிறார்கள்.

இன்றைக்கு அமெரிக்காவை எடுத்துக் கொண்டால் 100-க்கு 12 பேர்கள்தான் விவசாயத்தை நம்பி வாழ்கின்றார்கள். பன்னிரண்டு பேர்கள்தான் ஈடுபட்டிருந்தாலும் தங்கள் நாட்டுத் தேவையைப் போல் இரட்டிப்பு மடங்கு அவர்கள் உற்பத்தி செய்கிறார்கள். அப்படிச் செய்தாலும் மேலும் மேலும் ஆராய்ச்சி செய்கிறார்கள்—கவனம் செலுத்தி வருகிறார்கள். உற்பத்தி அதிகமாக இருக்கிறதே என்ன செய்வது என்றுகூடச் சிலசமயம் கவலைப்படுகிறார்கள். இப்போது ரஷ்யாவில்—நான் கூடப் பார்த்தேன்—சிறந்த ஆராய்ச்சி செய்கிறார்கள். பிரசித்தி பெற்ற விஞ்ஞானிகள் இருக்கிறார்கள், பல கல்லூரிகள் இருக்கின்றன, நல்ல முயற்சி செய்கிறார்கள். இருந்தாலும் அவர்களில் 100-க்கு 45 பேர்கள் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களுக்கு நிலம் ஏராளமாக இருக்கிறது—தலைக்கு 12 ஏக்கர் வரை நிலம் இருக்கும். அதோடு ராட்சஸ யந்திரங்களும் இருக்கின்றன. நிலங்களை நல்ல முறையில் திருத்திக் கொண்டு வரவேண்டுமென்று பெருமுயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். 100-க்கு 45 பேர்கள் ஈடுபட்டிருந்தும் தங்கள் நாட்டுக்குத் தேவையானதற்கு மேல் உற்பத்தி செய்து வெளியே ஏற்றுமதி செய்கிறார்களா என்று தெரியவில்லை. அவர்கள் சாதனைகள் இன்னும் திருப்தியளிக்கவில்லை. அதிகமான நிலத்தைத் திருத்தி விவசாய உற்பத்தியைப் போதிய அளவு பெருக்கவில்லை என்று ஸ்ரீ குருஷேவ் அவர்களுக்கே அதிருப்தி ஏற்பட்டு, அதன் காரணமாக சில மந்திரிகளையேகூட மாற்றினார்கள் என்ற செய்தியை நாம் எல்லோரும் பார்த்தோம்.

சீனாவை எடுத்துக்கொண்டால் 1 ஏக்கருக்கு 360 டன் விளைவிக்கிறார்கள் என்று முதலில் சொன்னார்கள். அதைப் போய்ப் பார்த்து வருவதற்கு நம் நாட்டிலிருந்து ஒரு தூதுகோஷ்டியும் சென்றது. இன்றைக்கு நாம் பார்க்கிறோம், அங்கே உணவுப் பஞ்சம்! இன்றைக்கு ரஷ்யா தொழில் வளர்ச்சியில் முன்னணியில் இருக்கிறது. நமக்குக்கூட பல உதவிகளைச் செய்கிறது. நமக்குப் பல தொழில்களை அமைத்துக் கொடுக்கிறது. அப்படி இருந்தாலும் விவசாயத்தில் திருப்தியான அளவில் சாதிக்க முடியவில்லை. விவசாய முன்னேற்றம் சுலபமானதல்ல. இதையெல்லாம்

பார்த்த பிறகு கனம் அங்கத்தினர்களே உணர்வார்கள். 10—12 ஆண்டுகளில் இரு ஐந்தாண்டுத் திட்டங்களினால் நாம் அடைந்திருக்கின்ற சாதனையைக் குறித்து நாம் பெருமைப் படலாம் வருங்காலத்தில் மகத்தான அளவுக்கு நம்முடைய தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளலாம் என்று நம்பிக்கை அளிக்கும் அளவில் சிறந்த முறையில் மக்கள் ஈடுபட்டு விவசாய இலாகாவும், மற்ற இலாகாக்களும் எல்லோரும் உற்சாகமாக உழைத்து சாதனைகளைச் சாதித்திருக்கிறோம் என்றுதான் சொல்ல வேண்டும்.

கனம் அங்கத்தினர் சீனிவாச அய்யர் அவர்கள் குறிப்பிட்டது பற்றி, நாம் எவ்வளவு சாதித்திருக்கிறோம் என்று காட்டக் கூடிய முறையில் சில புள்ளிவிவரங்களைச் சொல்லுகிறேன். முதலில் சென்னையில் ஒரு ஏக்கர் நிலத்திலிருந்து உற்பத்தியாகக் கூடிய பொருள்களின் சராசரியையும், அதற்கான அகில இந்திய சராசரியையும் குறிப்பிட விரும்புகிறேன்.

அரிசியை எடுத்துக் கொண்டால் சென்னையில் சராசரி ஏக்கர் ஒன்றுக்கு 1,332 ராத்தல்—ஆனால் அகில இந்திய சராசரி 808 ராத்தல்தான். அதேமாதிரி பருத்தியை எடுத்துக் கொண்டால் நமமுடைய மாநிலத்தின் சராசரி 139 விண்ட்ஸ்—ஆனால் அகில இந்திய சராசரி 78 விண்ட்ஸ் தான். நிலக்கடலை உற்பத்தியில் நம் ராஜ்ய சராசரி ஏக்கர் ஒன்றுக்கு 1,081 ராத்தல். அகில இந்திய சராசரியோ 643 ராத்தல்தான். அடுத்தாற்போல் சோளத்தை எடுத்துக் கொண்டு பார்த்தால் தமிழ்நாட்டின் சராசரி ஏக்கர் ஒன்றுக்கு 687 ராத்தல், ஆனால் அகில இந்திய சராசரி 424 ராத்தல் தான். கம்பும் அப்படியே—நம் சராசரி 550 ராத்தல்—அகில இந்திய சராசரி 292 ராத்தல். கேழ்வரகு, நம் சராசரி 865 ராத்தல், அகில இந்திய சராசரியோ 671 ராத்தல் மட்டும்தான்.

ஆக இப்போது மொத்தத்தில் உற்பத்தி ஏக்கர் ஒன்றுக்குக் கணக்குப் போட்டுப் பார்த்தாலும், தமிழ்நாடு ராஜ்யத்தில் மதிப்பு 183 ரூபாய் ஆகிறது. கனம் அங்கத்தினர் திரு பழனிசாமி அவர்களுக்கு இதெல்லாம் தெரியாததல்ல. அவர்களுக்கு எவ்வளவோ புள்ளி விவரங்களெல்லாம் தெரியும். இருந்தாலும் இதையும் கொஞ்சம் கவனிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்—நம் மாநிலத்தில் உற்பத்தி ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 183. ஆனால் அகில இந்தியாவின் பரொடக்ட்டிவிட்டி ரூ. 152 தான். கரும்பு சாகுபடியைப் பற்றியும் குறிப்பிடலாம். அரிசி குறைகிறதே கரும்பு வருவதினால் என்று யாரும் கவலைப்பட வேண்டாம். அரிசி விளைச்சல் அதிகமாகவே இருக்கிறது—இன்னமும் அதிகப்படுத்துகிறோம். விவசாயிக்குக் கட்டுப்படியாக வேண்டுமென்றால் அவன் பல பயிர்களை இட வேண்டும்—அவனுக்கு அதற்கான வசதிகளை நாம் அளிப்போம். விலை மதிப்புள்ள பயிர்களுள்ள நில விஸ்தீரணம், 1955-56-ல் சென்னையில் கரும்புப் பயிர் 100-க்கு 7 பங்கு—இது 1955-56-ல்; இப்போது கரும்பு சாகுபடி இன்னும் அதிகமாக இருக்கிறது—அப்படி 7% இருக்கும்போது அகில இந்தியாவை எடுத்துக் கொண்டு

பார்த்தால் 1.2% தான். அரிசியை எடுத்துக் கொண்டால் இங்கே 31%—அகில இந்தியாவில் 22% தான். நிலக்கடலை சம்பந்தப் பட்ட மட்டில் நம் நாட்டில் 11%—அகில இந்தியாவில் 3.5% தான். பருத்தி—எல்லோருக்கும் அத்தியாவசியமானது—அதை எடுத்துக் கொண்டாலும் நம் சராசரியும் அகில இந்திய சராசரியும் ஒரே மாதிரி இருக்கிறது. விவசாயத்திற்குத் தேவையான நீர்ப்பாசனத்தை எடுத்துக் கொண்டால் சென்னையில் 38%—36% என்று சில பேர்கள் சொல்லுகிறார்கள், தஞ்சையை எடுத்துக் கொண்டால் 50%-ஆக இருக்கிறது—ஆனால் அகில இந்திய சராசரி 17.6% தான். நாம் நீர்ப்பாசன வசதிகளை நல்ல முறையில் பயன்படுத்திக் கொண்டு வருகிறோம். இதுபற்றி கணக்குச் சொல்லுகிறார்கள். நம் மாநிலத்தில் 33,953 கண்மாய்கள் இருக்கின்றன. அதில் 10 ஏக்கருக்கு உட்பட்டதே 3,332. 10-லிருந்து 200 ஏக்கர் வரையில் உள்ளது 22,924. ஜமீன் பிரதேசத்தில் வந்தது 7,707 மொத்த இர்ரிகேஷனிலே அதாவது 22 லட்சம் ஏக்கரிலே, கெனல் இர்ரிகேஷன் 20 லட்சம் ஏக்கராகும். அம் மாதிரி இல்லாமல் கிணறு மூலமாக நீர்ப்பாசனம் செய்வது—மொத்தம் 8 லட்சம் கிணறுகள் இருக்கின்றது. 10-12 ஆண்டுகளில் எத்தனையோ கிணறுகள் தோண்டப்பட்டுள்ளன. அவைகளின் மூலமாக இர்ரிகேட் செய்யப்படுவது—14 லட்சம் ஏக்கர்.

இதேமாதிரி இன்னொரு அனுகூலமும் இருக்கிறது. விவசாயத்தில் ஈடுபட்டுள்ளவர்களைப் பொறுத்த வரையில் கணக்குப் போட்டுப் பார்த்தால் நம் நாட்டில் ஈடுபட்டுள்ளவர்கள் 63%—ஆனால் இந்தியாவின் சராசரியோ 70% ஆகும். இத்தனை சாதனைகள் இருக்கின்றன.

* SRI K. ANBAZHAGAN : அமைச்சர் அவர்கள் அகில இந்திய சராசரி விவசாயப் புள்ளிவிவரத்தைத் தமிழ்நாட்டு புள்ளிவிவரத்தோடு ஒப்பிட்டுச் சொல்லுகிறார்கள். அதே நேரத்தில் அகில இந்தியாவில் 1 சதுர மைலுக்கு எத்தனை மக்கள் இருக்கிறார்கள், நம மாநிலத்தில் மக்கள் எண்ணிக்கை எவ்வளவு என்ற . . . . .

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : நான் இனி குறிப்பிடப் போவதை எதிர்பார்த்து விவரம் கேட்டார். இப்போது நாம் எதை எதை எப்படிச் சாதித்திருக்கிறோம் என்று சொன்னேன். ஆனால் இதிலே நம் மாகாணத்தைப் பொருத்த வரையில் சில சங்கடங்களும், கஷ்டங்களும், இடையூறுகளும் இருக்கின்றன என்றும் நான் சொன்னேன். இதில் முக்கியமாகச் சில கஷ்டங்கள் உள்ளதென்றும் நான் சொன்னேன். இப்போது சொன்னது பூராவும் தமிழ் நாட்டு மக்கள் எவ்வளவு தூரம் சாதித்திருக்கிறார்கள் என்பது. நம்முடைய இடையூறுக்கு முக்கியமான அடிப்படை ஜனத்தொகை. 1951-வது வருஷ ஜன சங்கியைப்படி ஒரு சதுரமைலுக்கு 597 பேர் நம் நாட்டிலே இருக்கிறார்கள். ஆனால் அகில இந்திய ரீதியிலே பார்த்தால், இதில் பாதிதான் இருக்கிறது. நமக்கு ஜன நெருக்கடி அதிகமாக இருக்கிறது.

இதோடு நாம் சாதித்துள்ளதை ஒப்பிட்டுப் பார்க்கும்போது, இதுவரை நாம் சாதித்தது போதவே போதாது. குறைவு தான். காரணம் ஜனத் தொகை பெரிய அளவில் பெருகியிருக்கிறது. அதற்குத் தான் இப்போது குடும்பக் கட்டுப்பாடு வற்புறுத்தப் பட்டு வருகிறது. அதுவும் செய்ய வேண்டியதுதான். அதல்லா மல் நாம் எவ்வளவு தான் விவசாயத்திலே கவனம் செலுத்தி ளுலும் போதிய பலன் ஏற்படாது. ஜனத்தொகைப் பெருக்குத் தான் நமக்குப் பெரிய இடையூருக இருந்து வருகிறது. இதனுல்தான் நம் வாழ்க்கைத் தரம் குறைகிறது. நம் ராஜ்யத்தில் 63 சதவிகிதம் தான் விவசாயத்தை நாடியவர்கள். ஆனுல் இந்தியாவில் 70 சதவிகிதம். அதேபோல் தமிழ்நாட்டில் விவசாயம் செய்யக்கூடிய நிலம் பர் காபிடா—ஆள் ஒன்றுக்கு—71 செண்ட். அகில இந்திய ரீதியிலே பார்த்தால் 1.18 ஏக்கர் அதாவது 118 செண்ட். நமக்கோ 71 செண்ட் மட்டும் தான். அதேமாதிரி விவசாயப் பெருங்குடி மக்கள் என்று சொல்கிருேமே, அவ்வாறு சம்பாதிக்கிறவர்களுடைய கணக்கைப் பார்த்தால் 30% தான். ஆனுல் அகில இந்திய ரீதியிலே சராசரி 44%. அங்கே ஜனத்தொகை குறைவாக இருக்கிறது. ஆனுல் இதிலே பர் காபிடா வருவாயை எடுத்துக் கொண்டாலும், வடக்கு வாழ்கிறது என்று சொல்வதற்கில்லே. நாம் வளருவதாலேதான், இந்த ஜனத்தொகை பெருகு வதாலேதான் இந்தக் கஷ்டமான நிலே ஏற்படுகிறது. நம்முடைய தமிழ் நாட்டிலே பர் காபிடா வருமானம் 94 ரூபாய். அகில இந்தியாவில் 113 ரூபாய். நாம்தான் வளர்ந்து கொண்டு வருகிருேம். எனவே, நாம் விவசாயத்தை எப்படி மேலும் அபி விருத்தி செய்வதென்று கவனிக்க வேண்டும். இதுவரை சாதித் துள்ளதைப் பற்றி நாம் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். எனினும், ஜனத்தொகை அடிப்படையில் பார்க்கும்போது நாம் இதுவரை சாதித்துள்ளது போதவே போதாதுதான். தவிர, பொருளாதார நிலே நம் நாட்டிலே உயரவேண்டுமானுல், அமெரிக் காவைப் பார்த்து நாம் கற்றுக்கொள்ள வேண்டும். அவர்கள் தங்கள் தேவைக்கு மேல் அதிகமாக உற்பத்திச் செய்கிருர்கள். அப்படிச் செய்து அவைகளே எப்படி ஏற்றுமதிச் செய்வது என்ப திலேகூட சில சமயங்களில் அவர்கள் கஷ்டப்படுவதாகத் தெரி கிறது. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலே நாம் 16 லட்சம் அளவுக்கு உற்பத்தி செய்ய இருக்கிருேம். ஜனத்தொகை அளவிலே இதைப் பார்க்கின்றபோது இது குறைவுதான். இதை எப்படிச் செய்வது என்பதிலேதான் மிகவும் கவனம் செலுத்த வேண்டும்.

வேருெரு கூட்டத்திலே இந்த நில உச்ச வரம்பைப் பற்றிச் சொன்னேன். அதையேதான் கனம் சர்க்கார் கொரடா அவர்களும் கம்பரை மேற்கோளாகக் காட்டிப் பேசினர்கள். நிலம் குறைவாக வைத்துக் கொண்டிருப்பவர்கள்தான் அதிலே அதிகமான கவனத் தைச் செலுத்தி, விளேச்சலேப் பெருக்க முடியும். ஆனுல்

கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர் ஒருவர் இதெல்லாம் எங்கே வரப் போகிறது என்னும் பொருள்பட சொன்னார்கள். இதைச் சட்ட மாகவே ஆக்கப் போவதில்லை என்றும் சொன்னார். ஆனால் நான் அவர்களுக்குச் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஏப்ரல் மாத இறுதியில் முடிவெடுப்பதற்காகக் கூட்டுக் கமிட்டி கூடும். அப்படி எடுக்கக் கூடிய முடிவு ஜூலை அல்லது ஆகஸ்ட் மாதத்திலே சட்ட மாக்கப்படலாம் என்றுதான் நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டி ருக்கிறோம்.

இப்படியெல்லாம் நல்ல முறையிலே விவசாயத்தை அபிவிருத்தி செய்வதற்கு முயற்சிகள் எடுக்கப்பட்டும், இன்னும் போதுமான கவனம் செலுத்தப்படவில்லை என்று குறை கூறப்படுகிறது. இப்போது ரூரல் யூனிவர்சிடி ஏற்படுத்துவதற்கான முயற்சிகள் செய்யப்பட்டு வருகிறது. இதற்கு அமெரிக்க நிபுணர்களைக் கலந்தாலோசித்ததில், அதைக் கோயம்முத்தூரிலே ஏற்படுத்தலாம் என்றும், அங்குதான் இதற்கான பாரம்பரியமான வாய்ப்பு இருக்கிறது என்றும் கருத்துத் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் உத்தியோகத்திற்கு என்று ஒரு சர்வகலாசாலை நடத்தினால் அது போதாது. அசல், உண்மையான விவசாயியின் அறிவு வளர்ச்சிக்கு ஏற்பாடு செய்ய வேண்டும். கனம் நிதி அமைச்சர் அவர்கள் இங்கிலாந்து முதலிய நாடுகளுக்குச் சென்றபோது பல விவசாயப் பள்ளிக்கூடங்களைப் பார்த்துவிட்டு வந்தார். அந்தப் பள்ளிக்கூடங்களிலே அதிகம் படித்தவர்களுக்கு அங்கு பயிற்சி கொடுப்பதில்லை. உண்மையி லேயே விவசாயியாக இருந்து, பயிற்சிக்குப் பின் பண்ணைக்குச் சென்று வேலை செய்யக்கூடியவர்களுக்குப் பயிற்சி அளிக்கிறார்கள். இதுபோன்ற கருத்தைத்தான் நானும் ரொம்ப நாட்களாக சிந்தித்துக் கொண்டு வந்திருக்கிறேன். இந்த ஆண்டிலே இப்படிப் பட்டவர்களுக்குப் பயிற்சி கொடுப்பதற்காகக் குறைந்தபட்சம் 4, 5 பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்த யோசனை செய்யப்பட்டு வருகிறது. இந்தப் பயிற்சிப் பள்ளிகளிலே உத்தியோகத்திற்காகவோ அல்லது அதிகம் படித்தவர்களுக்கோ பயிற்சி அளிக்கப் போவதில்லை. உண்மையிலே கிராமத்திற்குச் சென்று வேலை செய்யக்கூடியவர் களுக்கு, அவர்கள் ஓரளவு படித்திருந்தாலும் அவர்களுக்குப் பயிற்சி அளிப்பதற்குத் திட்டமிட்டு வருகிறோம். இம் மாதிரியான விவசாயப் பள்ளிகள் ஒவ்வொரு ஜில்லாவிற்கும் வேண்டி யிருக்கும். ஆனால் உடனடியாக 4 பள்ளிகளை ஏற்படுத்தலாம் என்று திட்டமிட்டு வருகிறோம். முடிந்தால் 6 பள்ளிகள் வருகிற ஆண்டில் ஏற்படுத்தலாம். ஆகவே இந்தப் பயிற்சிப் பள்ளிகளிலே உண்மையிலேயே கிராமத்திற்குச் சென்று விவசாயத்தில் ஈடுபடக் கூடிய விவசாயிக்கு மட்டும் பயிற்சி அளிக்கப்படும்.

அதோடு விவசாயத்திற்குரிய ஒரு உபதொழிலையும் வளர்க்க வேண்டும். அந்தக் கைத்தொழிலுக்குத்தான் அக்ரோ இண் டஸ்ட்ரீஸ் என்று பெயர். இம்மாதிரியான உபதொழில் அமைப்பது மிகவும் முக்கியமானது. விவசாயத்திற்கு உப

தொழிலாகச் சர்க்கரை ஆலை அமைக்கப்படுகிறது. அப்படி அமைப்பதின் மூலம் ஓரளவு விவசாயத் தொழிலிலேயே ஈடுபட்டிருப்பவர்களுக்கு அது உதவியாக இருக்கும். விவசாயத்திலே வருமானம் போதாது என்று கூறுபவர்களுக்கு, அதிகப்படியான வருமானம் கிடைப்பதற்காகவே இதில் இப்போது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இதிலே மேலும் நன்மைகள் ஏற்படுவதற்கு நாம் எல்லோரும் சேர்ந்து கவனம் செலுத்தக்கூடியவர்களாக இருக்கிறோம்.

விவசாயத்திலே வேலை செய்யக் கூடியவர்களுக்கு ஊதியம் கொடுப்பதைப் பற்றி ஒரு அங்கத்தினர் எப்போதோ வெளியிட்ட புள்ளி விவரங்களை வைத்துக் கொண்டு பேசினர். அதன்பேரில் 51-லே எவ்வளவு ஊதியம், அதற்குப் பிறகு எவ்வளவு ஆள் குறைந்திருக்கிறது என்பதையெல்லாம் பரிசீலனை செய்து பார்த்தேன். 51-லே அதிகமாக இருந்தது, 56-57-லே குறைந்திருக்கிறது. ஆனால் இந்தக் குறைவு நம் ராஜ்யத்திலே மட்டும் ஏற்படவில்லை. மற்ற ராஜ்யங்களிலும் இதே நிலைமை ஏற்பட்டிருக்கிறது. காரணம் என்னவென்று பரிசீலனை செய்து பார்த்ததில், எங்களுக்குத் தெரிந்தது. அப்போது பற்றுக்குறை அதிகமாக இருந்திருக்கிறது. பங்கீடு முறை கையாளப்பட்ட சமயம். கள்ள மார்க்கட்டில் அரிசியை விற்றுக் கொண்டிருந்த காலம். அப்படி விற்றுக் கொண்டிருந்ததினாலே அப்போது இந்த விலையேற்றம் ஏறியிருக்கிறது. இது நம்முடைய ராஜ்யத்திலேயும், மற்றெல்லா ராஜ்யங்களிலேயும் ஒரே மாதிரியாக இருந்திருக்கிறது. இந்நிலை 56-57-லே மட்டும்தான் இருந்திருக்கிறது. ஆனால் 60-ல் பார்த்தால் 51-ல் இருந்த நிலைக்கே போய் இருக்கிறது. 60-ல் ஆண்களுக்கு ஊதியத்தைப் பார்த்தால் கூடிப் போய் இருக்கிறது. பெண்களைப் பொருத்தவரையில், ஆண்களைவிடக் கொஞ்சம் அதிகமாகவே போய் இருக்கிறது.

கரும்பைப் பற்றிச் சொன்னேன். சிலர் கரும்பாலையைக் கூட்டுறவு முறையில் ஏற்படுத்தலாம் என்று கூறுகிறார்கள். சிலர் தனிப்பட்ட முறையில் ஏற்படுத்தலாம் என்று கூறுகிறார்கள். இரண்டும் அவசியம் தான். மொத்தத்தில் கரும்பு உற்பத்தி செய்கிறவர்கள் பயனடைய வேண்டுமென்றால், கரும்பாலை இருக்க வேண்டியது அவசியம். வெல்லத்திற்கு இப்போது கிராக்கி யில்லை. திடீரென்று அதன் ஏற்றுமதியும் குறைந்து விடுகிறது. மக்களும் தங்களுக்கு வெள்ளைச் சர்க்கரை தான் வேண்டுமென்று கேட்கிறார்கள். கிராமத்திலேகூட இன்று வெள்ளைச் சர்க்கரைதான் தேவைப்படுகிறது. அப்படி யென்றால் இந்தச் சர்க்கரையின் உற்பத்தியை நாம் பெருக்க வேண்டியிருக்கிறது. ஆனால் இப்போது சர்க்கரைக்குப் பற்றுக்குறைகூட இல்லை. சர்க்கரையை அதிகமாக உற்பத்தி செய்து நாம் ஏற்றுமதியும் செய்ய வேண்டும். அப்படி ஏற்றுமதி செய்தால் நாட்டினுடைய வளமும் பெருகும். பொருளாதாரமும் வளரும். அதோடு அந்நிய நாட்டுச் செலவாணியும்

நமக்கு அதிகமாகக் கிடைக்கும். இப்போதுள்ள அளவில் 5 லட்சம் டன் சர்க்கரை ஏற்றுமதி செய்ய வேண்டும் என்று விரும்பப் படுகிறது. மத்திய அரசாங்கமும் அப்படி ஏற்றுமதி செய்து அதிலிருந்து வரக்கூடிய அந்நிய செலவாணியின் அளவுக்கு நாம் உரத்தை இறக்குமதி செய்து, விவசாயத்தைப் பெருக்கிக் கொள்ளலாம் என்றும் சொல்கிறார்கள். ஆனால் அப்படி ஏற்றுமதி செய்வதிலே நமக்குச் சில கஷ்டங்கள் இருக்கிறது. வெளி நாடுகளில் விற்கக்கூடிய சர்க்கரை நம் நாட்டுச் சர்க்கரையை விட விலை குறைவாக இருக்கிறது. நாம் சர்க்கரை விலையைக் குறைத்து விற்றால், அமெரிக்காகூட க்யூபா சர்க்கரையைக் குறைத்துக் கொண்டு நம்முடைய சர்க்கரையை வாங்கக் கூடும். ஆனால் இதற்கு நாம் எல்லோரும் சேர்ந்து கொண்டு பரிசிலனை செய்து ஒரு முடிவு செய்ய வேண்டும். ஆனால் விலையைக் குறைப்பது எப்படி? கரும்பு விலையும் அதிகமாக இருக்கிறது. உற்பத்திச் செலவும் அதிகமாகிறது என்று சொல்லப்படுகிறது. அதோடு பாக்டரி உற்பத்திச் செலவும் அதிகமாகிறது என்று அவர்களால் கூறப்படுகிறது. அதே சமயத்தில் பாக்டரிகளுக்கு அதிக லாபம் கிடைக்கிறது என்றும் சொல்லலாம் அல்லது கரும்பு விலையும் அதிகமாக இருக்கிறது என்றும் சொல்லலாம். ஆனால் இதை மட்டும் சொல்லிக் கொண்டிருப்பதில் பயனில்லை. நீண்டகாலமாக யோசித்துக் கொண்டிருப்பதிலும் பயனில்லை. இன்று வெளிநாட்டிலே பற்றுக்குறை அதிகமாக இருப்பதால், விலையைக் குறைத்து உற்பத்தியை நாம் அதிகரிக்க வேண்டும். அப்படி உற்பத்தியைப் பெருக்கி ஏற்றுமதி செய்வதின் மூலமாக நமக்கு அந்நியச் செலவாணியும் கிடைக்கும். பொருளாதார வளர்ச்சியும் நாட்டிலே ஏற்படும். அப்படியே விலையைக் குறைப்பதற்காக சப்சிடி கொடுப்பதாக இருந்தாலும், எவ்வளவு காலத்திற்கு இந்த சப்சிடி கொடுப்பது? தற்காலிகமாக வேண்டுமானால், ஏற்றுமதியைப் பொருத்த அளவில் சப்சிடி கொடுக்கலாம். இதைப்பற்றி இங்கிருக்கக்கூடிய எல்லோரும் சிந்தித்துப் பார்க்க வேண்டும். விலையைக் குறைப்பது கஷ்டம் என்று சொல்லிக் கொண்டிருப்பதில் பிரயோஜனமில்லை. ஆனால் விவசாயிகளுக்கும் கட்டுப்படியாக வேண்டும். ஆகவே அவரவர்கள் கொஞ்சம் லாபத்திலே குறைத்துக் கொள்ள வேண்டும். உற்பத்தியை அதே சமயத்தில் பெருக்க வேண்டும். அப்போது தான் ஏற்றுமதியைப் பெருக்க முடியும். ஆகவே இந்தப் பிரச்னைகளையெல்லாம் நாம் நன்கு ஆராய்ந்து, எப்படி ஒரு முடிவுக்கு வருவது என்பதைப் பற்றி நாம் யோசிக்க வேண்டியது அவசியம்.

விவசாயக் கருவிகளைப் பற்றிச் சொன்னார்கள். நவீன விவசாயக் கருவிகளை உபயோகப்படுத்துவது பற்றி நமது பிரதம மந்திரி அவர்கள் கூட அடிக்கடி வற்புறுத்தி வருகிறார்கள். கோவையில் நவீனக் கருவிகள் இருக்கின்றன. ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒரு முக்கியமான இடத்திலே இந்த நவீன விவசாயக் கருவிகளை வைத்து ஒரு நிரந்தரமான பொருட்காட்சி வைக்க வேண்டும். அம்மாதிரி செய்து விவசாயக் கருவிகளை எல்லோரும் வாங்கச்

செய்யவேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் உத்தேசம். சென்ற ஆண்டில் டெல்லியில் உலகப் பொருட்காட்சி ஒன்று நடந்தது. அதே மாதிரி ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொரு ராஜ்யத்தில் ஒரு விவசாயப் பொருட்காட்சி நடத்துவது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இந்த ஆண்டு கல்கத்தாவில் இம் மாதிரி எக்ஸிபிஷன் நடந்தது. இன்னும் 2, 3 நாட்களில் முடியப் போகிறது. மிகச் சிறந்த வகையிலே அது நடந்தது. நம்முடைய ராஜ்யமும் அதில் பங்கு எடுத்துக் கொண்டது . நம்முடைய ராஜ்யத்தினுடைய ஸ்டாலைப் பார்த்தவர்கள் எல்லோரும் அதைப் பாராட்டி புகழ்ந்திருக்கிறார்கள் என்று எனக்குச் செய்தி வந்திருக் கிறது. அடுத்த ஆண்டில் சென்னையில் வைப்பதாக உத்தேசம். சென்னையிலோ அல்லது சென்னைக்குப் பக்கத்திலே ஒரு சௌகரிய மான இடத்தில் அதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும். முக்கியமாக விவசாயத்தில் கவனம் செலுத்தி சிறந்த முன்னேற்றம் அடைந்த அன்னிய நாடுகள் கூட, அதில் கலந்து கொள்ளத் தயாராக இருக் கின்றன. கல்கத்தா எக்ஸிபிஷினிலும் சில அன்னிய நாடுகள் கலந்து கொண்டன. சென்னையிலோ, அதற்குப் பக்கத்திலோ ஒரு சிறந்த இடத்தில் அம்மாதிரி ஒரு பொருள்காட்சி அமைப்பதற்குக் கவனம் செலுத்தி வருகிறோம்.

அன்று விடை அளிக்கும்பொழுது கேள்வி நேரத்தில் சில ஜப்பான் நிபுணர்களின் உதவியைக் கொண்டு ஒரு 'பைலட் ப்ரா ஜக்ட்' ஏற்படுத்தப் போவதாகச் சொன்னேன். ஜப்பானில் சிறந்த முறையில் அவர்கள் சாகுபடி செய்கிறார்கள். நல்ல சாதனை சாதிக் கிறார்கள். ஜப்பான் முறையில் புதிய கருவிகளை உபயோகப் படுத்தி ஒரு இடத்தில் 25 ஏக்கர் நிலத்தை எடுத்து, அங்கே சாகுபடி செய்து இந்தத் திட்டத்தை நிறைவேற்றி, அதை எல்லோரும் பின்பற்றச் செய்ய வேண்டும். ஐந்தாறு நிபுணர்கள் இங்கு வந்திருக்கிறார்கள். அவர்களிடம் நேற்று முன்தினம் நான் பேசிக் கொண்டிருந்தேன். சீக்கிரம் அந்த 'ப்ராஜக்ட்' எடுத்துக் கொள்ளப்படும். தஞ்சாவூர் ஜில்லாவில் ஏற்படுத்துவதாக உத்தேசம். தஞ்சாவூர் ஜில்லா என்றால் அதிலே பாரபட்சம் ஒன்றுமில்லை. நீர்ப்பாசன வசதி இந்த பரீட்சார்த்த திட்டத்திற்கு வேண்டியிருக்கிறது. அதனால்தான் அங்கே முதலில் ஒரு 'பைலட் பிராஜக்ட்' ஏற்படுத்தலாம் என்று உத்தேசம். நிபுணர்கள் தங்க நாம் வசதி தேடிக் கொடுக்கவேண்டும். மற்ற செலவுகளை யெல்லாம் அவர்களே செய்து கொள்ளுகிறார்கள். சீக்கிரம் 2, 3 மாதங்களுக் குள் இந்த 'ப்ராஜக்ட்' ஏற்படுத்தப்படும்.

கனம் அங்கத்தினர் திரு. முத்தையா செட்டியார் அவர்கள் பேசும்பொழுது கூனூர் பொடானிகல் கார்டன்ஸ்ஸைப் பற்றிச் சொன்னார்கள். அதைக் கவனிக்கவேண்டியதுதான். அங்கே ஒரு 'போமலாஜிகல் கார்டன்' இருக்கிறது. அதாவது பழத் தோட்டம். அதையும் கவனிக்க வேண்டும். கொடைக்கானலில் ஆப்பில் ஆராய்ச்சி நிலையம் ஒன்று ஏற்படுத்தியிருக்கிறோம். பெரிய

குளத்தில் 'ரீஜினல் புரூட் ரிஸர்ச்' ஸ்டேஷன் ஒன்று வைத்திருக்கிறோம். பழப் பயிர்களினால் நல்ல வருமானம் வரும். நான் முன்பே சொல்லியிருக்கிறேன். கொடி திராட்சை போட்டால் ஒரு ஏக்கருக்கு ரூ. 3,000, 4,000 வருமானம் வரும். ஒருவருக்கு 10 ஏக்கர் நிலம் இருந்தால், அதில் ஒரு ஏக்கர் 2 ஏக்கர் நல்ல பழத் தோட்டங்கள் ஏற்படுத்துவதற்குப் பயன்படுத்தினால் ஏராளமான வருமானம் வரும். எல்லோரும் சேர்ந்து பழங்களைச் சாகுபடி செய்வதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதுதான் என்னுடைய அவா.

காடுகளைப் பற்றிச் சொன்னார்கள். சந்தன மரங்கள் இயற்கையாகவே உண்டானவை. அதற்கு நல்ல விலை கிடைக்கிறது. 'சாண்டல் ஆயில்' தொழிற்சாலை ஏற்படுத்த வேண்டுமென்று சிலர் யோசனை சொன்னார்கள். இப்பொழுது சந்தன மரத்தை விற்றாலும், ஒரு ஆயில் தொழிற்சாலை இருக்கிறது. அதை ஒருவர் நடத்துகிறார். நமக்கு நல்ல விலையும் வருகிறது. மைசூர் சர்க்கார் அவர்களுக்கே சொந்தமாக ஆயில் தொழிற்சாலை வைத்திருக்கிறார்கள். அதிலே அவர்கள் லாப நஷ்டம் பார்ப்பது இல்லை. நமக்கு இப்பொழுது லாபமும் வருகிறது. மைசூர் அரசாங்கத்தின் அனுபவத்தைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, இது விஷயமாக அவர்களுடன் கலந்து பேசி இதைப் பற்றி வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம் என்று இருக்கிறோம்.

சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களைப் பற்றி, ஏதோ இந்த இலாகாவா, அந்த இலாகாவா என்று தெரியவில்லை என்று சில அங்கத்தினர்கள் சொன்னார்கள். மத்திய அரசாங்க அமைச்சர் அவர்களிடத்திலேயே சொல்லியிருக்கிறேன். இந்த ராஜ்யத்தைப் பொறுத்தமட்டில் அம்மாதிரித் தகராறு ஒன்றும் இல்லை என்று. பல பிரிவுகளில் பரிசீலனை செய்யப்பட்டு திட்டங்கள் நடத்தப்படுவதால் தான் வேலை துரிதமாக நடந்து வருகிறது. அதிலும் சிறிய நீர்ப்பாசனத் திட்டத்தில், உணவு உற்பத்தி இலாகா திட்டத்தில் நாம் திட்டமிட்டிருந்த லட்சியத்திற்கு மேலே கூட செலவு செய்யப்பட்டிருக்கிறது. நம்முடைய ராஜ்யத்திலே உடையார்பாளையம் போன்ற இடத்தில் 'ஆர்டிஷியன் ஸ்பிரிங்ஸ்', அதாவது குழாய்க் கிணறுகள் தோண்டுவதற்கு வேண்டிய இயந்திரங்களைப் பெற்று வேலை நடந்து வருகிறது. உடையார்பாளையம் தாலுகா, சிதம்பரம் தாலுகா, இப்படி மற்ற தாலுக்காக்களிலும் குழாய்க் கிணறுத் திட்டங்கள் வைத்திருக்கிறோம். இதையெல்லாம் நாம் செய்து கொண்டு வருகிறோம்.

இதோடு விதைப் பண்ணைகளைப் பற்றிச் சொன்னார்கள். ஓரளவு நிலங்களை இதற்காக ஆர்ஜிதம் செய்கிறோம். ஓரளவு சர்க்கார் நிலத்திலே ஏற்படுத்தப்படுகிறது. இதற்கு நல்ல நிலம் வேண்டும், அரசாங்கத்தின் கையில் நிலம் இருந்தால் பரவாயில்லை. வேறு தனி நபர்களிடத்திலே இருக்கிறது என்றால் அதற்கு விலை பேச வேண்டியிருக்கிறது. விலை அதிகமாக இருக்கிறது. 'அக்வயர்'

செய்ய நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கிறது. 'ஆர்பிட்ரேஷன்' அல்லது கோர்ட்டுக்குப் போனால் நாம் என்ன விலை கொடுக்கலாம் என்று நினைத்தோமோ அதைவிட அதிக விலை கொடுக்க வேண்டி இருக்கிறது. சில சமயங்களில் அவர்கள் கேட்பதற்கு மேலே கூட விலை கொடுக்கவேண்டி ஏற்படுகிறது. கோர்ட்டார் அதுதான் நியாயம் என்று சொல்லுகிறார்கள். அதற்கு மேலே வேறு பேச்சே கிடையாது. இம்மாதிரி சிக்கல் எல்லாம் இதில் இருக்கிறது. ஆகவே, விதைப் பண்ணைகளுக்காக இப்பொழுது நிலம் வாங்குவதை நிறுத்திக் குத்தகை கொடுக்கிறோம். 'ரெண்டு' கொடுப்பது என்றால் கொஞ்சம் நஷ்டம் தான் ஏற்படும். லாப நஷ்டத்தைப் பற்றிப் பேச்சு இல்லை. முக்கியமானது என்னவென்றால் நல்ல விதைகளைக் கொடுக்கிறோம். அப்படி நல்ல விதைகளைக் கொடுக்க வேண்டுமென்று சொல்லும்பொழுது லாபத்தையே பார்க்க முடியாது. ஓரளவுக்குப் பார்க்கலாம். அதனால் அதிக நஷ்டமும் வரக் கூடாது. இவை எல்லாவற்றையும் பார்த்துத்தான் செய்கிறோம். முதலில் 360 பண்ணைகள் ஏற்படுத்த வேண்டும் என்று எண்ணியிருந்தோம். இப்பொழுது 210 பண்ணைகள் போதும் என்று முடிவெடுக்கிறோம். எல்லாவற்றையும் பரிசீலனை செய்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் இன்னும் சர்க்கார் நிலம் எங்கிருக்கின்றதோ அங்கு விதைப் பண்ணைகளை வைக்கவும் ஏற்பாடு செய்வதாக உத்தேசம். மற்றபடி நிலம் சரசமான விலைக்குக் கிடைக்க வேண்டும். நல்ல நிலமாகவும் இருக்க வேண்டும். இப்பொழுது இதெல்லாம் கவனிக்கப்பட்டு வருகிறது. அதிக அனுபவம் இல்லாத காரணத்தினால் நல்ல பலன் கிடைக்கவில்லை என்று சொன்னார்கள். இந்தக் குறைபாடுகளெல்லாம் இப்பொழுது சரிப்படுத்தப்பட்டிருக்கின்றன. எல்லாம் இப்பொழுது திருப்திகரமாக நடந்து கொண்டிருக்கிறது. ஓரளவுக்கு நாம் லட்சியத்தை அடைந்துதான் இருக்கிறோம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம் முடிவதற்கு முன்னமேயே இந்த லட்சியம் பூர்த்தி அடைய வேண்டும் என்று எண்ணுகிறோம். அதிலும் விதை 'மல்டிபிளிகேஷன்' பற்றிச் சொன்னார்கள். நான் முன்னமே சொன்னேன். இந்த விதைப் பண்ணைகளை பஞ்சாயத்துக்களிடம் ஒப்படைப்பதாக இல்லை. ஆனால் கிராமங்களில் இந்த விதைகளை 'மல்டிபிளிகேஷன்' செய்வதைத்தான் பஞ்சாயத்துக்களிடம் கொடுக்கலாம் என்று யோசனை. கிராமத் திட்டங்களை பஞ்சாயத்துக்கள் நிறைவேற்ற வேண்டும். அதில் அவர்கள் அக்கறை எடுத்துக் கொள்ள வேண்டும். அதில் அவர்கள் அக்கறை எடுத்துக் கொண்டு செய்யவேண்டு மென்பதற்காகத்தான் இந்த விதைகள் மல்டிபிளிகேஷன் செய்வதை அவர்களிடம் விடலாம் என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

கடைசியாகப் பேசிய கனம் அங்கத்தினர் திரு. அன்பழகன் அவர்கள் கால்நடைக் கல்லூரியில் ஏதோ வெளியிலிருந்து ஒரு 'ப்ரொபஸரை' கொண்டு வந்து போட்டதாகச் சொன்னார்கள். இதிலே 'ப்ரொபஸராக' போடுவதற்கு, திறமை, அனுபவம்

எல்லாம் ரொம்ப முக்கியம். எல்லாவற்றையும் பரிசீலித்துத் தான் போடப்படுகிறது. இதிலே ஒன்றும் தாட்சண்யம் இல்லை. அதிலே 'போஸ்ட் கிராஜுவேட் கோர்ஸ்' இருக்கிறது. ஆசைப்படுகிற வர்களுக்கு அதிருப்தி இருக்கத்தான் செய்யும். ஒரு முறைக்கு 4 முறை பார்க்கிறோம். ஏன் அங்கேயே ஒருவரும் இல்லையா, வெளியிலிருந்து ஏன் ஒருவரைக் கொண்டுவர வேண்டும் என் றெல்லாம் பரிசிலனை செய்து பார்க்கிறோம். உடனடியாகப் போடு வதில்லை. எல்லாவற்றையும் பார்த்த பிறகுதான் போடப்படு கிறது. வெளியிலே இருப்பவர் யார் என்று நமக்குத் தெரியாது. திறமை, அனுபவம் இதுதான் முக்கியம்.

மற்றபடி கனம் அங்கத்தினர்கள் கொடுத்த அரிய யோசனை களையெல்லாம் மேலும் பரிசிலனை செய்து, இன்னும் வேகமாக அபிவிருத்தி அடையும் வகையிலே, சாதனைகளை அடையும் வகையிலே கவனம் செலுத்தப்படும் என்று கூறி, என்னுடைய பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன்.

**SRI A. GOVINDASAMI :** கரும்பு விலை குறையும் என்ற ஒரு கவலையை அமைச்சர் அவர்கள் தெரிவித்தார்கள். கரும்பு உற்பத்தி விலையைக் குறைக்க அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறது? அப்படியானால்தான் கரும்பு உற்பத்தி செய்யும் விவசாயிகளுக்குப் பாதுகாப்பு இருக்கும். கரும்பு அதிகமாக உற்பத்தி செய்யப்படுகிறது, சர்க்கரை அதிக மாக உற்பத்தி செய்யப்படுகிறது என்பதற்காக இந்த யோசனை சொல்லப்பட்டதா ?

**THE HON. SRI M. BHAKTHAVATSALAM :** நான் முன்பு வேறு இடத்தில் சொன்னேன். மூன்றாவது வகுப்பில் பிரயாணம் செய்பவர்கள் நிறையக் கூட்டம் வந்துவிடும் என்ற காரணத்தினால் அவசரமாக ஏறுவதற்கு ஒருவர் வந்தால் அவரைத் தடுத்து விடுவார்கள். அப்படித் தடுக்கப்பட்டவர் கஷ்டப்பட்டு ஏறியதும், வண்டிக்குள் வந்து கேட்டில் நின்று கொண்டு அடுத்தாற்போல் வருகிற ஸ்டேஷனில் வேறு யாரும் ஏறக் கூடாது என்று தடுப்பார். கரும்பு ஒரு நல்ல பயிர்தான். ஆனால் அதை வேறு யாரும் பயிரிடக் கூடாது என்று சொல்லுவதற்கில்லை. கரும்புப் பயிர் ஓரளவுக்கு வைத்திருக்க வேண்டும்தான். கரும்பு விலையைக் குறைக்க வேண்டும். கரும்பு உற்பத்தி செய்பவர்களுக்கும் அது கட்டுப்படியாக வேண்டும். சர்க்கரை விலையும் குறைய வேண்டும். வாங்கிச் சாப்பிடுகிறவர்கள்தான் அதிகம். இப்பொழுது 'டயாபிடிஸ்' பற்றிகூட கவலைப்படத் தேவையில்லை. அதிகமாக சாப்பிடட்டும் 'டயாபிடிஸ்' குறைந்து கொண்டு வருகிறது. வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வதற்கும் அதிகமாக உற்பத்தி செய்ய வேண்டும்.

**SRI N. K. PALANISAMI :** கனம் அமைச்சர் அவர்கள் என்னுடைய கேள்விக்குப் பதில் அளிக்கும்பொழுது, Food ப்ரொடக்ஷன் டிபார்ட்மெண்டிலே 2,000 ரூபாய் என்று லிமிட்

வைத்திருப்பதினால், பல ஸ்கீம்கள் சாங்ஷன் ஆகாமல் இருக்கின்றன. இந்த 2,000 என்று இருப்பதை 3,000 என்று வைத்தால் கூட பரவாய் இல்லை; இதை விளக்கும்படிக் கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சிறிய நீர்ப்பாசனத் திட்டங்களைப் பொறுத்த வரையில் சர்க்கார் மிகுந்த அக்கறை செலுத்துகிறது. எதற்கும் ஒரு வரம்பு வேண்டும். கணக்கு வழக்கு இல்லாமல் பணத்தைச் செலவு செய்தால் வேண்டிய பலன் கிடைக்காது. ரூபாய் 2,000 அல்லது ரூபாய் 3,000 என்று வரம்பு இல்லை. அந்தந்தப் பிராந்தியத்திலுள்ள நிலைமையைப் பார்க்கிறோம். லாண்ட் அக்விஸிஷன் ஆக்டின் கீழ் நிலம் நியாயமாகக் கிடைக்கிறதா, சம்பந்தப்பட்ட விவசாயிகள் ஒரு பங்கு கொடுக்கிறார்களா என்பதை எல்லாம் பார்த்து செய்யப்படுகிறது.

(SRI K. ANBAZHAGAN rose.)

DEPUTY SPEAKER : I cannot allow any personal explanation. The hon. Member will resume his seat.

Is the hon. Member Sri A. Govindasami withdrawing his cut motion?

SRI A. GOVINDASAMI : I press my cut motion, Sir.

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs. 80,15,600 under Demand III—Forest Department—be reduced by Rs. 100.'

The Cut Motion was put and lost.

DEPUTY SPEAKER : I now put the Demand to the vote of the House. The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 80,15,600 under Demand III—Forest Department.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : As the hon. Member, Sri V. K. Ramaswamy Mudaliar, is not in his seat, his cut motion is deemed to have been withdrawn.

I now put the Demand to the vote of the House. The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 4,35,25,900 under Demand XVIII—Agriculture.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri A. Govindasami withdrawing his cut motion?

SRI A. GOVINDASAMI : I press my cut motion, Sir.

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs. 41,94,500 under Demand XIX—Fisheries—be reduced by Rs. 100.'

The Cut Motion was put and lost.

DEPUTY SPEAKER : I now put the Demand to the vote of the House. The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 41,94,500 under Demand XIX—Fisheries.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri N. K. Palanisami withdrawing his cut motion?

SRI N. K. PALANISAMI : Yes, Sir.

The Cut Motion was by leave, withdrawn.

DEPUTY SPEAKER : The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 1,36,15,900 under Demand XX—Animal Husbandry.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : As the hon. Member, Sri K. Sattanatha Karayalar, is not in his seat, his cut motion is deemed to have been withdrawn.

I now put the Demand to the vote of the House. The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 40,17,300 under Demand XXXVII—Capital Outlay on Forests.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : Is the hon. Member, Sri S. M. Annamalai, withdrawing his cut motion?

SRI S. M. ANNAMALAI : I press my cut motion, Sir.

DEPUTY SPEAKER : The question is—

'That the allotment of Rs. 20,60,100 under Demand XL—Capital Outlay on Agriculture—be reduced by Rs. 100.'

The Cut Motion was put and lost.

DEPUTY SPEAKER : I now put the Demand to the vote of the House. The question is—

'That the Government be granted a sum not exceeding Rs. 20,60,100 under Demand XL—Capital Outlay on Agriculture.'

The Demand was put and carried and the Grant was made.

DEPUTY SPEAKER : The House will now adjourn and meet again at 8-30 a.m. on Monday, the 13th March 1961.

The House then adjourned.

## VI. PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### *A.—Statutory Rules and Orders.*

**Nil.**

### *B.—Reports, Notifications ond other papers.*

86. *A Review on Industrial Development in Madras State,* 1960–61.

87. *Supplement to the Review on Industrial Development (Small Industries Sector) in Madras State,* 1960–61.

88. *Report and Proceedings of the Committee of Privileges ("Madras Corporation Case").*

## APPENDIX I.

[*Vide* answer to the starred question No. 743 asked by Sri V. K. Kothandaraman at the meeting of the Legislative Assembly held on 11th March 1961, page 109 supra.]

(*a*) & (*b*) The particulars are furnished in Annexures I and II.

### ANNEXURE I.

***Statement showing the extent of cultivated lands in each taluk of North Arcot district and the population (Fasli 1369).***

| Name of the taluk. | Extent. | Population. |
|---|---|---|
| (1) | (2) | (3) |
| | ACRES. | |
| Arani .. .. .. | 67,078 | 175,835 |
| Arkonam .. .. .. | 338,230 | 250,891 |
| Cheyyar .. .. .. | 86,422 | 218,824 |
| Chengam .. .. .. | 154,534 | 179,128 |
| Gudiyatham .. .. | 113,196 | 348,914 |
| Polur .. .. .. | 139,676 | 237,042 |
| Tirupathur .. .. | 163,128 | 357,111 |
| Tiruvannamalai .. .. | 69,762 | 229,420 |
| Vellore .. .. .. | 72,441 | 382,988 |
| Wallajah .. .. .. | 153,190 | 341,414 |
| Wandiwash .. .. | 133,139 | 228,013 |

## ANNEXURE II.

*Statement showing production of foodgrains in North Arcot district (Fasli 1369).*

| Serial number and taluk. | Paddy in terms of price. | Cholam. | Maize. | Cumbu. | Ragi. | Wheat. | Kora. | Varagu. | Samai. | Tenai-varagu. | Other grains. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) | (12) |
| | | | | | Figures in tons. | | | | | | |
| 1 Arani .. .. | 19,605 | 501 | .. | 484 | 579 | .. | .. | 213 | .. | .. | .. |
| 2 Arkonam .. .. | 37,795 | 562 | .. | 699 | 3,327 | .. | 49 | 194 | 35 | .. | 9 |
| 3 Chengam .. .. | 25,535 | 3,166 | 19 | 1,553 | 2,826 | .. | 133 | 2,494 | 3,622 | .. | 75 |
| 4 Cheyyar .. .. | 47,017 | 1,049 | .. | 67 | 1,647 | .. | 1 | 1,474 | ½ | .. | .. |
| 5 Gudiyatham .. | 18,029 | 4,436 | 46 | 146 | 2,123 | 3 | 4 | 66 | 255 | .. | 1 |
| 6 Polur .. .. | 36,790 | 2,174 | 75 | 1,664 | 2,566 | .. | 27 | 1,263 | 875 | .. | .. |
| 7 Tirupattur .. | 13,360 | 7,879 | 29 | 3,994 | 3,313 | .. | 44 | 780 | 5,948 | 139 | .. |
| 8 Tiruvannamalai .. | 26,112 | 1,541 | .. | 1,887 | 2,184 | .. | 53 | 1,824 | 193 | .. | 1 |
| 9 Vellore .. .. | 12,854 | 4,448 | 78 | 607 | 2,242 | 3/5 | 18 | 326 | 560 | .. | 368 |
| 10 Wallajah .. | 46,084 | 2,713 | .. | 687 | 2,447 | .. | 3 | 514 | 3 | .. | .. |
| 11 Wandiwash .. | 31,547 | 594 | 13 | 546 | 2,208 | .. | 15 | 1,596 | 8 | .. | .. |
| 12 Transferred areas. | 3,065 | 1,366 | .. | 56 | 664 | .. | 6 | 115 | 76 | .. | .. |
| Grand total .. | 317,793 | 30,429 | 260 | 12,390 | 26,626 | 3-3/5 | 353 | 11,459 | 11,575½ | 139 | 454 |

APPENDIX II [11th March 1961

[Vide answer to starred question No. 748 asked by Sri S. Ramalinga Padayachi at the meeting of the Legislative Assembly held on 11th March 1961, page 115 supra.]

*Steps taken towards the prevention and control of Venereal Diseases in Madras State.*

(*a*) Participation of the Government Medical Institutions in various exhibitions conducted in the State, so as to educate the public on the evils of the diseases and the need to prevent it ;

(*b*) exhibition at public conveniences of posters explaining the importance of prevention of the diseases ;

(*c*) distribution of hand bills containing necessary information on the diseases to patients seeking treatment in Government Medical Institutions ;

(*d*) establishment of Venereal Diseases Clinics in the District Headquarters Hospitals, in addition to the clinics functioning in the Government General, Government Stanley, Government Women and Children, Government Kasturba Gandhi and Government Royapettah Hospitals at Madras ;

(*e*) conduct of mass serological examinations of special groups of people at exhibitions, beggar homes, Women's Service Home and on patients in the Government Ophthalmic and Mental Hospitals at Madras ;

(*f*) prevention of immoral traffic by enforcing the Suppression of Immoral Traffic Act ;

(*g*) avoidance of promiscuity and prostitution to an appreciable extent by effective implementation of provisions of the Prohibition Act ;

(*h*) enforcement of the Drugs and Magic Remedies (Objectionable Advertisements) Act ;

(*i*) isolation of persons affected by the diseases by admitting them for treatment as in-patients in hospitals till they are free from the infectious stage of the diseases;

(*j*) tracing the source of infection and treatment of sexual as well as non-sexual contacts ; and

(*k*) provision of facilities for diagnosis and treatment at seaports for foreign national seamen engaged in maritime commerce

## APPENDIX III.

[*Vide* answer to the starred question No. 750 asked by Sri A. A. Rasheed at the meeting of the Legislative Assembly held on 11th March 1961, page 116 supra.]

*Particulars regarding the number of applications received and number selected for Government Colleges during 1960-61.*

| Serial number and name of the College. | P.U.C. | | | B.A. | | | B.Sc. | | | B.Com. | | | Post Graduate Courses. | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | Number of seats authorised. | Number of applications received. | Number of persons selected. | Number of seats authorised. | Number of applications received. | Number of persons selected. | Number of seats authorised. | Number of applications received. | Number of persons selected. | Number of seats authorised. | Number of applications received. | Number of persons selected. | Number of seats authorised. | Number of applications received. | Number of persons selected. |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) | (12) | (13) | (14) | (15) | (16) |
| 1 Presidency College, Madras. | .. | .. | .. | 145 | 124 | 87 | 256 | 774 | 240 | .. | .. | .. | 219 | 883 | 191 |
| 2 Queen Mary's College, Madras. | 260 | 431 | 256 | 123 | 106 | 103 | 122 | 208 | 102 | .. | .. | .. | 12 | .. | .. |
| 3 Government Arts College, Madras. | 480 | 868 | 480 | 60 | 62 | 42 | 96 | 222 | 84 | | .. | .. | .. | .. | .. |
| 4 Government Arts College, Coimbatore. | 320 | 731 | 320 | 100 (Tamil Medium) 65 (English Medium) | 170 65 | 100 65 | 75 | 204 | 67 | 40 | 78 | 40 | .. | .. | .. |
| 5 Government Arts College, Ootacamund. | 160 | 190 | 144 | 70 | 24 | 19 | 50 | 33 | 21 | .. | .. | .. | .. | .. | .. |
| 6 Government College, Salem. | 402 | 673 | 401 | 60 | 55 | 51 | 96 | 161 | 93 | .. | .. | .. | .. | .. | .. |
| 7 Government College, Kumbakonam. | 320 | 516 | 320 | 70 | 46 | 46 | 130 | 163 | 97 | .. | .. | .. | .. | .. | .. |
| 8 H. H. Rajah's College, Pudukkottai. | 240 | 255 | 224 | 80 | 14 | 14 | 72 | 35 | 28 | 50 | 20 | 19 | .. | .. | .. |

APPENDIX IV.

[Vide answer to the starred question No. 757 asked by Sri N. K. Palanisami at the meeting of the Legislative Assembly held on 11th March 1961, page 122 supra.]

*A.*—(*a*) Yes, Sir.

(*b*) Madurai.

(*c*) During the year 1958, the Government of Madras enacted the Madras State Bhoodan Yagna Act to facilitate donation, transfer, settlement of Bhoodan lands and development of Gramdan villages. Under the provisions of the Act, a State Board known as the Madras State Bhoodan Yagna Board was constituted and it assumed charge on 1st September 1959 with its headquarters at Madurai.

The State Board has so far met thrice at Madras and has taken over the administration of Gramdan villages and Bhoodan lands. The Special Revenue department staff and Co-operative department staff who were working under the control of the Collector of Madurai, have been transferred to work under the State Board. A Special Officer in the grade of a Deputy Collector is in overall charge of the office. He is assisted by the Deputy Tahsildar in the work relating to the preparation of lists of Bhoodan lands and Gramdan lands donated prior to the commencement of the Madras Bhoodan Yagna Act, 1958, for publication in the Gazette. Some of the powers of the Chairman with regard to administration of the office and notification of lands have been delegated to the Special Officer. The Special Co-operative staff attend to the preliminary work of organisation of Sarvodaya Co-operative Societies and investigation of loan applications of the Gramdan Societies.

A selection Committee constituted by the State Board, has selected five persons to serve as members of the local Committee for Madurai district. The Committee will exercise the powers of the Bhoodan Board delegated to it by the Board. The Special staff are now engaged in gathering particulars of Bhoodan lands and Gramdan villages in Madurai district only. So far 21,008·33 acres have been obtained as Bhoodan and the danapatrams so obtained are being examined and the donors are being contacted for rectifying the defects in the danapatrams. There are 232 Gramdan villages and particulars are being gathered about these Gramdan villages. The special staff has so far gathered particulars in respect of fifty-six Gramdan villages in addition to the eleven Gramdan villages for which societies have been organized. Out of the 56 villages only nine villages satisfy the definition of "Gramdan" under the Madras State Bhoodan Yagna Act.

A Gramdan mela comprising of an exhibition, drama, speeches nd a symposium was conducted at Batlagundu on 12th March 1960. Ten Gramdan Sarvodaya Co-operative Societies were formed for 11 Gramdan villages in Madurai district. The Madura

11th March 1961]

District Central Co-operative Bank has been requested by Government to advance from out of its own resources to these ten societies covering the following 11 Gramdan villages indicated below:—

1 Kamakshipuram.

2 V. Perumalkoilpatti.

3 Kottaipatti.

4 Kanavoipatti.

5 Old Batlagundu.

6 A. Perumalkoilpatti.

7 Koniyampatti.

8 Jari Usilampatti.

9 Chinna Chittulotti.

10 Valayapatti.

11 Karichupatti.

There is considerable improvement in the agricultural production. Due to the financial assistance given to the societies, completion of 20 wells, bringing into cultivation, lands which were waste in previous years, installation of five pumpsets, and adoption of improved methods of cultivation, manure and seeds, an additional quantity of 70 tons of foodgrains was produced.

The latest progress report received from the Special Officer, Gramdan, Madurai, shows that 1,264 patrams covering a total extent of 3,047·47 acres have been received from the Tamilnad Sarvodaya Mandal for Coimbatore district. Out of this, 184 patrams contain full particulars regarding the Serial numbers and other details. The remaining patrams do not contain particulars relating to survey of these lands. In Tirunelveli district, 1,421 patrams involving a total extent of 4,629·51 acres have been received. Out of this, 700 patrams contain full particulars regarding the donations. Since the Bhoodan Inspectors have not been appointed, the Special Officer visited the Coimbatore district to take up the work in Dharapuram taluk with the help of the Revenue Department staff. A conference of the Revenue Inspectors, Thasildars (Dharapuram) and some leading pattadars was convened during November 1960 and patrams were distributed to the Revenue Inspectors with suitable instructions for gathering particulars for publication. Particulars have been gathered in Coimbatore district for 400 acres of Bhoodan lands. In respect of Tirunelveli district, particulars were gathered for 38·37 acres.

[11th March 1961

## APPENDIX V.

[Vide answer to the starred question No. 758, asked by Sri T. S. Ramaswamy at the meeting of the Legislative Assembly held on 11th March 1961, page 123 supra.]

*Statement showing the number of Inspectors and Sub-Inspectors suspended, discharged and dismissed during the years 1957, 1958 and 1959.*

| District. | Suspended. | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 1957 | | 1958 | | 1959 | |
| | Inspectors. | Sub Inspectors. | Inspectors. | Sub-Inspectors. | Inspectors. | Sub-Inspectors. |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| Tirunelveli .. .. | 1 | 1 | .. | 4 | 1 | 5 |
| Kanyakumari .. .. | .. | 1 | .. | 2 | .. | 1 |
| Madurai North .. .. | .. | .. | .. | 4 | .. | 2 |
| Madurai Urban .. .. | .. | 1 | .. | 1 | .. | .. |
| Ramanathapuram .. | .. | 2 | 1 | 2 | .. | 2 |
| Tiruchirappalli .. .. | .. | .. | .. | 2 | 1 | 3 |
| Coimbatore .. .. | 1 | 1 | .. | 1 | .. | 1 |
| South Arcot .. .. | 1 | .. | .. | .. | .. | 2 |
| North Arcot .. .. | .. | .. | 1 | 1 | .. | .. |
| Salem .. .. .. | 1 | .. | .. | 2 | 1 | 1 |
| Thanjavur .. .. | .. | 1 | .. | .. | .. | .. |
| Chingleput .. .. | .. | .. | 1 | 1 | 1 | .. |
| Madras City .. .. | 2 | .. | .. | 3 | 1 | 1 |
| The Nilgiris .. .. | .. | .. | .. | .. | .. | .. |
| Total | 6 | 7 | 3 | 23 | 5 | 18 |

| District. | Dismissed. | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | 1957 | | 1958 | | 1959 | |
| | Inspectors. | Sub-Inspectors. | Inspectors. | Sub-Inspectors. | Inspectors. | Sub-Inspectors. |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) |
| Tirunelveli .. .. | .. | .. | .. | 1 | .. | 1 |
| Kanyakumari .. .. | .. | .. | .. | .. | .. | .. |
| Madurai North .. .. | .. | .. | .. | .. | .. | 1 |
| Madurai Urban .. .. | .. | .. | .. | .. | .. | .. |
| Ramanathapuram .. | .. | .. | .. | 1 | .. | .. |
| Tiruchirappalli .. .. | .. | .. | .. | .. | .. | .. |
| Coimbatore .. .. | .. | .. | .. | .. | 1 | .. |
| South Arcot .. .. | .. | .. | .. | .. | .. | 2 |
| North Arcot .. .. | .. | .. | .. | .. | .. | .. |
| Salem .. .. | .. | .. | .. | .. | .. | .. |
| Thanjavur .. .. | .. | .. | .. | 1 | .. | .. |
| Chingleput .. .. | .. | 1 | .. | .. | .. | .. |
| Madras City .. .. | .. | .. | .. | 1 | .. | 3 |
| The Nilgiris .. .. | .. | .. | .. | .. | .. | .. |
| Total .. .. | .. | 1 | .. | 4 | 1 | 7 |

None of the Sub-Inspectors and Inspectors were discharged during the years 1957, 1958 and 1959.

11th March 1961]

## APPENDIX VI.

[Vide answer to the starred question No. 769 asked by Sri T. S. Ramaswamy at the meeting of the Legislative Assembly held on 11th March 1961, page 129 supra.]

There are two grades of Hindi Teachers, Grade I and Grade II Hindi teachers should possess the following qualifications:—

### GRADE I.

(A) (i) A degree in Hindi of the Madras or Annamalai University :

Provided that holders of the degree of B. A. of the Madras or Annamalai University shall be eligible only if they have taken Hindi under Part III ; and

(ii) the B.T. degree of the Madras University or the B.Ed. degree of the Annamalai University ;

or

(B) (i) A completed Secondary School-Leaving certificate; and

(ii) (*a*) the Pracharak Diploma or the Pracharak Training certificate of the Dakshina Bharat Hindi Prachar Shaba, Madras; or

(*b*) (i) A title of Oriental Learning in Hindi conferred by the Madras or Annamalai University, and

(2) A trained teacher's certificate of the Secondary Grade or a Senior Grade Basic Trained Teacher's certificate or successful completion of the Pandit's Training Course.

### GRADE II.

(i) The Pracharak Diploma or the Pracharak Training certificate of the Dakshina Bharat Hindi Prachar Sabha, Madras, and

(ii) a pass in the third form of Secondary school.

NOTE.—(1) If persons satisfying the qualifactions specified above are not available for appointment as Pandits and Munshis, other persons may be appointed subject to such conditions as may be prescribed by the State Government.

(2) In the case of Pandits in Schools under the managements of Local Bodies and Aided managements persons without the III Form qualification can be appointed as Hindi Pandits if persons with III Form qualification are not available.

